உ

# பொருளடக்கம்



உ
முருகா.

## சுப்பிரமணி

தமிழகத்தின் தனிப்பெரும் தெய்வமாம் முருகப்பெருமான் திருப்பெயர் கொண்ட மூலிகையும் நம் நாட்டில் உண்டு. சுற்றி வளைக்காமலே கூறிவிடுகிறேன். நமது தென்னக சோலை வள பயிர்களில் ஒன்ருகிய உலர்ந்த இஞ்சிக்குத் தான் சுப்பிரமணி என்பார்கள். அதாவது சுக்கு என்பது வழக்குப் பெயர். சுப்பிரமணியன் என்று பெயரிட்டு இருப்பார்கள். நாளடைவில் 'சுக்கு' என செல்லமாக அழைத்து பின்பு சுக்கு முதலியாரே! என்றும் கூப்பிடுவது நம் நாட்டு பழக்கமாயிற்றே!

சுக்கும் சுப்பிரமணியும் ஒன்றுதான். சுக்கு, இஞ்சியான உலராத சுக்கு இவைகளை எல்லா மதத்தினரும், இனத்தவரும் விரும்பி உபயோகிப்பார்கள். சுப்பிரமணியக் கடவுளும் அப்படி தான்! முருகா! என மனமுருகிப் பாடும் அப்துல்மஜித்சுல்தான், டேவிட் பிள்ளை மரியதாஸ், போன்ற முஸ்லிம் கிருஸ்துவ நண்பர்களும் இருக்கத்தான் செய்கின்றனர்.

" சுக்குக்கு மிஞ்சிய மருந்துமில்லை —
சுப்பிரமணிக்கு மிஞ்சிய தெய்வமுமில்லை "

என்பது பழமொழி அல்லவா?

நமது வாழ்க்கையில் மஞ்சளுக்கு அடுத்தபடியாக ஸ்தானம் வகிக்கக்கூடியது சுக்கு. மஞ்சளைப் போலவே இதையும் பயிரிட்டு பக்குவப்படுத்துவார்கள். உலர்வதற்கு முன் இது இஞ்சி என பெயர் கொண்டது. இஞ்சி, கொத்துமல்லி, கருவேப்பிலை இவை மூன்றும் சமையல் அறையின் இணைபிரியாத நண்பர்கள்.

### இஞ்சி பொதுக் குணம்

" இஞ்சிக்கு எரிப்புக் கொண்டாட்டம் எலுமிச்சம்பழத்துக்கு புளிப்புக் கொண்டாட்டம் " என்பது காவடி சிந்து பாடல். சிறப்பாக இஞ்சி எரிப்பு குணத்தை உடையது. கடினமான

பண்டங்களை எளிதில் செரிப்பிக்கும். பித்த வாயுவை கண்டிக்கும். வாயில் சுரக்கும் உமிழ் நீரை பெருக்கி பசியைத் தூண்டும், மற்றும் உஷ்ணத்தை உண்டாக்கும் குணமுடையது.

## உபயோக முறைகள்

இஞ்சியை சாதாரணமாக தமிழ் நாட்டு சமையலில் சேர்த்துக் கொள்வது மிகப் பழங்கால வழக்கத்தில் ஒன்று. இதனால் பித்தம், பித்த வாய்வு, பித்த சீதளம் சம்மந்தப்பட்ட நோய் அனைத்தும் வராமல் தடுப்பதுடன் ஆகார குற்றங்கள் உண்டாவதை தடுத்து உணவுகளை எளிதில் ஜீரணிக்க செய்துவிடுகிறது.

" இஞ்சியின் குணமே தென்றல் இயல்புடன்
உறைக்க கேளீர்
அஞ்சிடும் சன்னியாவும் அகன்றிடும் - பித்ததோடம்
நெஞ்சினில் இருமல் கோழை நெகிழ்ந்திடும்
கபங்கள் தன்னை
மிஞ்சினி வருமோ வென்று விளம்பிடும் வேதநூலே "

(ஓலை சுவடி)

சித்த மருத்துவர்களிடம் ஓர் ரகசியமுண்டு. எந்த நோய் ஆனாலும் சரி, முதலில் இந்த " இஞ்சி சுரசம் " என்ற குடிநீரை கோரோசனை மாத்திரை, கஸ்தூரி மாத்திரை, பால சஞ்சீவி மாத்திரை, அன்னபேதி செந்தூரம் ஆகியவைகளுக்கு நோய் திடமறிந்து அனுபானமாக வைத்து விடுவார்கள். பிணிகளும் விரைவில் மிச்சம் மீதி இல்லாமல் உடலை விட்டு அகன்றுவிடும். ஆனால் இந்த வழக்கம் வர வர மறைந்து போய்விட்டது.

இஞ்சியே இல்லை என்றால் நமக்கு சாப்பாடு ருசிக்காது; பசிக்காது. பிரபல சமையல் நிபுணர்களுக்குத் தான் தெரியும் இஞ்சியின் மகிமை! ஊறுகாய் வியாபாரம் மந்தமாகிவிடும். இன்னொரு முக்கிய விஷயம், ஆங்கில மருத்துவர்கள் கூட இதனை சொந்தம் கொண்டாடி வருகின்றனர்! அதாவது இஞ்சி ரசாயன முறைபடி சாறு பிழிந்து அதை மது சாரத்துடன் கலந்து " டிஞ்சர் ஜிஞ்சர் பெரீஸ் " என்ற மருந்தை தயாரித்து அதை மிக்சர்களில் கலந்து செரிப்புண்டாக்க கொடுக்கின்றனர். மதுவிலக்கு அமுலுக்கு வந்த பின் இந்த ஜிஞ்சர் பெரீஸ் டிஞ்சருக்கு (கெமிஸ்டுகளிடம்) இங்கிலீஷ் மருந்து கடைகளில் ஏகப்பட்ட கிராக்கி (பிளாக் மார்கட்)



இஞ்சி (எ) சுப்பிரமணி

ர்களுக்கும் கிடைப்பது அரிதாகிவிட்டது. ஆனால் புட்டி யாக எங்குதான் போகின்றனவோ ? முருகன்தான் அறிவார் பிளாக் மார்கெட்டை !

இஞ்சி, வெள்ளை வெங்காயம் இரண்டும் ஒரு அவுன்ஸ், அரை அவுன்ஸ் ஒன்றாக கலந்துகொண்டு ஓயாத வாந்தி, டல், பித்த மயக்கமும், வாந்தியும் ஆகிய நோய்களில் அரை ஸ் வீதம் கொடுத்து வர நீங்கும். இதே முறையில் வெள்ளை காயத்தை நீக்கிவிட்டு அதற்கு பதில் மாதுளம் பழரசம் து கொடுத்துவர இருமல், இரைப்பு (ஆஸ்துமா) சாந்தியாகும்.

இஞ்சியை சுத்தம் செய்து மேல்தோல் சீவிப்போட்டு சிறு டுகளாக நறுக்கி 5 பலம் எடுத்து ஒரு வாயகன்ற கண்ணாடி யில் போட்டு சுத்தமான தேனும் 5 பலம் விட்டு நான்கு நாள் ு தினம் காலையில் வெறும் வயிற்றில் ஓரிரண்டு துண்டுகள் ர்ந்து 1 மண்டலம் சாப்பிடவேண்டும். இப்படி சாப்பிட்டால் ஆரோக்கியமாகி, பித்தம் சாந்தப்பட்டுவிடும். ஆயுள் நும், முகப்பொலிவும் அழகும் உண்டாகும். மனதிடம், ு உரம் பெறும். வேம்பு காயகல்பம் போன்று இதுவும் ஒரு ல்ப முறையே !

## இஞ்சி முறபா

மலபார் இஞ்சி முறபா பெயர் பெற்றது. இஞ்சியைப் ம் செய்து சர்க்கரைப் பாகுடன் பதப்படுத்தி தயாரிப்பது. ாட்டு மருந்து கடைகளிலும் கிடைக்கும். இதனால் வயிற்று சம், புளியேப்பம், வாந்தி, குடல் கோளாறு, கப நோயால் ல் சளி சேர்ந்து இரைப்பு நோய் தொல்லை வரும்போது மிக்க தரும். இஞ்சி முறபா தின்பதற்கும் ருசியாக இருக்கும்.

## ஆஸ்துமா இருமலுக்கு

இஞ்சி கால் பலம், வெள்ளெருக்கன் பூ 3, மிளகு 6 இவை சுக்கி இரண்டு குவளை நீர் விட்டு காய்ச்சி ஒரு குவளையாக வைத்து வேளை ஒன்றுக்கு அரை குவளையாக குடித்துவர காசம், இரைப்பு, சுவாச இருமலுக்கும், சளி நுரையீரல் த்து வெளியேருமல் தொல்லை கொடுக்கும்போதும் இந்தக் ஷாயத்தை காலை மாலை நோய் தீரும்வரை கொடுக்கலாம்.

பூ மூன்றும் மிளகு ஆறு மட்டும்தான் எடை கணக்கல்ல)



இஞ்சி ஒரு நெல்லிக்காய் அளவு காய்ச்சின பசும்பால்விட்டு அரைத்து அரை பலம் கற்கண்டு தூள்செய்து சேர்த்து அதனுடன் ஒரு எலுமிச்சம்பழ ரசம் பிழிந்து அரைக்கால் படி பசும்பாலில் கலந்து காலையில் சாப்பிட்டுவர பித்த ரோகங்கள் பித்த சம்மந்தப் பட்ட வாயு, பித்த சம்மந்தப்பட்ட கபநோய்கள் யாவும் விலகிப் போகும். அத்துடன் டயாபடீஸ் என்ற நீரிழிவு சர்க்கரை சத்துக் களை கழிவதை தடுத்து நிறுத்தி, களைப்பு, அதிக பசி, தாகம், வரட்சி, அடிக்கடி சிறுநீர் போவதும் நிற்கும். எரிகுன்மம், ஆஸ்துமா, இளைப்பு, மயக்கம், இருமல் வாய்வு குடைச்சல் வலிகள் நீங்கும் என்பதில் சந்தேகமில்லை.

காபி, தேயிலை பானங்களை மிதமிஞ்சி சாப்பிட்டு அதனால் ஏற்படும் பலவித தொந்தரவுகளை நீக்கிக்கொள்ள விரும்பும் வாசக அன்பர்கள், அவைகளை சிலநாள் விட்டு 1 அவுன்ஸ் இஞ்சி ரசம் 1 அவுன்ஸ் எலுமிச்சை [illegible] இவைகளை ஒன்றாகக் கலந்து தெளிந்த பின் வடிகட்டி சிறிது சர்க்கரை கூட்டி அந்த அளவு வெந்நீர் விட்டு கலந்து காலையில் 10 நாளைக்கு குடித்து வந்தபின் காபி குடியின் நிலையை உணர்வர்கள்.

இனி சுக்கு என்ற உலர்ந்த இஞ்சி பற்றி கவனிக்கலாம். இஞ்சி பித்தத்தை நடுநிலையாக கொண்டு வாத சீதள தொந்தங் களுக்கு கொடுப்பது போல், சுக்கு வாதத்தையே நடுநிலையாகக் கொண்டு பித்த சீதள தொந்தங்களுக்கு கொடுப்பதாகும்.

''பித்தமது அடங்கினல் பேசாதே போய்விடு
எத்திய ஐயம் எழும்பிடில் கிட்டாதே
எத்தும் வாதம் எழும்பினல் மருந்துசெய் ''

இது சித்தர் நாடி கூறும் இலக்கணம். இதன் பொருள் வாத நாடி நடக்கும்போது தான் மருந்து தரவேண்டுமாம் ! வாதத்தை நடுநிலையாகக் கொண்ட இயற்கை மூலிகைகள் சிலவே. இதில் இந்த சுப்பிரமணி முதன்மை ஸ்தானம் வகிக்கக்கூடியது. சுக்கு இதற்குதான் உபயோகிக்கலாம் ; இதற்கு கூடாது என்ற வரம்பே இல்லை. எந்த காலத்தும், எதற்கு வேண்டுமானலும் யாவரும் பயன்படுத்தக்கூடிய எளிய ஆனல் உயர்ந்த வஸ்து. அகத்தியர் இதனை ''சுக்குக்கு [illegible] தென்றெரு வீதி யிலே நவசுறு குணமுத்தே'' என்றார். நவசுறு எனில் சுக்கு. பெரிய குடும்பத்தில் தலைவன் ஒரு தந்தையாக இருந்தபோதிலும்

முதல் மருமகளாக வாய்க்கும் பெண்ணுக்கு எவ்வளவு பெருமை
யும், பொறுப்பும் உள்ளதோ? அத்தகைய மதிப்பு மக்கள்
சமுதாயத்தில் இந்த சுப்பிரமணி பெற்று உள்ளது.

## சுக்குவின் குணம்

உடல் உற்ற வாய்வை எல்லாம் அகற்றிவிடும். வாதரோகங்
கள் யாவும் போகும். பசியைத் தூண்டும் மன அகங்காரத்தை
ஒடுக்கும். சிரநோய், சீதளம், வாதகுன்மம், வயிற்றுக்குத்தல்,
விலாக்குத்தல், வயிற்று உப்பிசம், நீர் பீனிசம், நீரேற்றம், சல
தோடம், கீல்பிடிப்பு, ஆசன நோய், தலைவலி, பல்வலி, காது
குத்தல், சுவாசரோகம் ஆகிய எல்லா வியாதிகளும் போகும்.
வாய்வு உஷ்ணம் சீதளம் சம்மந்தப்பட்ட நோய்கள் எதுவாயினும்
சரியே யாவும் இந்த சுப்பிரமணி தீர்த்துவைக்கும்.

## உபயோக முறைகளில் சில

பொதுவாக ஒரு சுக்கு துண்டை மேல்தோல் நீக்கி நறுக்கி
ஒரு குவளை நீரில் போட்டு காய்ச்சி சிறிது பால் சர்க்கரை கலந்து
தினமிருவேளை குடித்துவர மேல்கண்ட நோயெல்லாம் விலகும்.

வாதரோக சம்மந்தப்பட்ட கீல்வாய்வு, பிடிப்பு, வீக்கம்,
மூட்டுக்களில் வலி இவை உடம்பின் எந்த மூட்டுக்களில் வந்த
போதிலும் சரி ஒரு துண்டு சுக்கு, 1 துண்டு உயர்ந்த பெருங்காயம்
பால் விட்டு உரைத்து சேர்த்த விழுதியை வலியும் வீக்கமுள்ள
இடங்களில் தடவு வெய்யில் அல்லது நெருப்பனல் காட்ட குணமா
கும். பல்வலி தாங்கமுடியாத போதும் எகிறுகள் வீங்கி ஊசி
குத்தல் போன்று வலிக்கும் போது ஒரு துண்டு சுக்கு எடுத்து
நறுக்கி அதை அப்படியே வலி கண்ட இடத்தில் அடக்கிவைக்க
வலி சாந்தப்படும். தலைவலி, மண்டை இடி இவைகளுக்கு தாய்ப்
பாலில் சுக்கை உரைத்து தலைவலி கண்ட இடத்தில் பற்று
போட்டுவர வலிகள் நின்று போகும்.

## முக்குணத் துணைமருந்து

சுக்கு, மிளகு, திப்பிலி ஆகிய மூன்றையும் உலர்த்தி சுத்தம்
செய்து சமஎடை எடுத்து இடித்து துல்லியமாக தூள் செய்து
வைத்துக்கொள்வது தான் முக்குணத் துணைமருந்து என்பது.



இதை நோய்த் தடுப்பு மருந்தாக சிறுவர் முதல் பெரியோர்
உபயோகிக்கலாம். மும்மூர்த்திகளான பிரம்மா, விஷ்ணு,
இவர்களுடைய தொழில் ஆக்கல், காத்தல், அழித்தல் எ
போன்ற இந்த முக்குண துணைமருந்தும் உடலுக்குத் தேவை
ஆக்கி, தேவையற்றவைகளை அழித்து வெளியேற்றி உடலை
போஷிக்கும் தன்மையுடையது. இம் மருந்து வைத்திராத
மருத்துவர் கிடையாது என்று துணிந்து கூறலாம். ரசபா
வகைகளை பற்ப செந்தூரங்களாக்கி அவைகளுக்கு இதை து
மருந்தாக சேர்த்துக் கொடுப்பதில் நோய் சிக்கல் அடைய
விரைவில் குணமாவதுடன் ரசபாஷாண நஞ்சு மருந்துக
வாய் பிடிப்பு, வேக்காடு ஆகிய கெடுதல் குணம் உண்ட
என்பது சித்தர்களின் வாக்கு. அளவு: குழந்தைகளுக்கு
மிளகளவு வெந்நீருடன், சிறுவர்களுக்கு இரு மடங்கும், பெரி
களுக்கு வயதுக்கு தக்கபடி 10 முதல் 15 அரிசி எடை.
மருந்தை பொதுவாக திரிகடுகம் என்றும் சொல்வதுண்டு.

## ஐந்தீ சுடர் மருந்து

சுக்கு, மிளகு, திப்பிலி, சீரகம், ஏலம் இவைகளை சு
செய்து சம எடை எடுத்து வெய்யிலில் உலர்த்தி இடித்து து
மாக தூள் செய்து ஒரு புட்டியில் வைத்துக் கொள்க. அள
முதல் 20 அரிசி எடை தேன், நெய், வெந்நீர் ஆகிய து
கொண்டு காலை மாலை இருவேளை பித்தநாடி மிகுந்தபோது கா
அதி உஷ்ணம் மார்பு எரிச்சல், பக்கசூலை, அனல் வாய்வு,
புளியேப்பம், வயிற்றுப்பிசம், பசியின்மை, வரட்சி ஆகியவை
ஐந்தீ சுடர் பட்ட மாத்திரம் தீயில் பட்ட பஞ்சுபோல் பறக்
இதை துணை மருந்தாக அமைத்து சண்டமாருத செந்து
ஆறுமுக செந்தூரம், அயம், காந்தம் முதலானவைகளு
சமயோசிதம் போல் சித்த மருத்துவர்கள் கையாண்டு நீ
பல நோய்களை திறமையாக போக்கிவிடுவார்கள். இம் மரு
புஞ்ச தீபாக்கினி என்றும் கூறுவார்கள்.

## ஐம்புனல் நீர் மருந்து

ஏலம் கால் பலம், திப்பிலி அரை பலம், அதிமதுரம் முக்
பலம், சுக்கு ஒரு பலம், பழுப்பு சர்க்கரை (பூரா சர்க்கரை) $1\frac{1}{4}$
சர்க்கரையை நீக்கி மற்றவைகளை நன்கு சுத்தம் செய்து உல
இடித்து தூள் செய்த பின் சர்க்கரையைச் சேர்த்து கல
வைத்துக்கொள்ளுங்கள். அளவு 15 முதல் 20 அரிசி எ

வெந்நீர், சூடான பால், தேன் ஆகியவைகளுடன் உட்கொள்ள பித்தத்தால் தூண்டப் பெற்ற ஐய நாடி கிளர்ந்தபோதும், வாந்தி, குமட்டல், செரியாமை, பெரு ஏப்பம், வயிற்றில் நீரும் வாய்வும் திரண்டு அதனால் உண்டாகும் தொல்லைகள், வாய் நீரூரல், சதா உமிழ்நீர் சுரந்து துப்பிக்கொண்டிருத்தல், தூக்கத்திலும் வாயில் இருந்து நீர் வடிதல் போன்றவைகளுக்கும் நற்பயன் தரக்கூடிய மருந்து. இதற்கு பஞ்சதாரைச் சூரணம் என்றும் பெயர்.

## மாந்தைக் குடிநீர்

சுக்கு ஒரு நெல்லிக்காய் அளவு, மிளகு 6 மட்டும், சீரகம் 35, தோல் நீக்கிய பூண்டு 3, ஓமம் 10, சோற்றுப்பு நாலு கல் இவைகளை மெல்லிய மண்ஓட்டில் போட்டு சிறுக வறுத்து எடுத்து கொண்டு அதை அம்மியில் வைத்து அதோடு வேப்பிலை கொழுந்து அரை ரூபாய் எடை போட்டு சிறு துளி நீர்விட்டு மைபோலரைத்து வழித்துக்கொண்டு அதில் ஒன்றரை அவுன்ஸ் வெந்நீர் விட்டு கலக்கி மெல்லிய துணியில் வடிகட்டிய குடிநீரை மட்டும் வைத்துக் கொண்டு குழந்தைகளுக்கு அரை சங்களவு தாய்ப்பால் கலந்து தினம் இரண்டு முதல் நான்கு வேளை நோய்க்குத் தக்கபடி சிறுவர்களுக்கு முழு சங்களவு கொடுத்துவர சகல மாந்தம், கணை மற்றும் வயிற்றுக் கோளாறுகள் யாவும் விலகும்.

## சுகபேதிக் குடிநீர்

சுக்கு, பிஞ்சு கடுக்காய், சீமை நிலாவிரை 1 ரூபாய் எடை வீதம் எடுத்து இடித்து இரண்டு குவளை நீர்விட்டு காய்ச்சி ஒரு குவளையாக்கி வடிகட்டி அத்துடன் 1 ரூபாய் எடை பேதி உப்பு கலந்து காலையில் வெறும் வயிற்றில் குடித்துவிட்டால் இரண்டொரு மணி நேரத்திற்குள் களைப்பு ஆயாசமின்றி நன்றாக பேதி ஆகி வயிற்றில் உள்ள மலச்சாக்கடை சுத்தமாகி உடல் ஆரோக்கியம் பெறும். பேதியை நிறுத்த மோர் சாதம் அல்லது எலுமிச்சம்பழ சர்பத் குடிக்க பேதி நின்றுபோகும். இம் முறையில் கண்ட மருந்து நாட்டு மருந்து கடைகளில் கிடைக்கும்.

## பல் ரோகப் பொடி

சுக்கு, காசிக்கட்டி, கடுக்காய் தோல், இந்துப்பு இவைகளை சமமாக எடுத்துலர்த்தி இடித்து தூள் செய்து வைத்துக்கொண்டு சதா பல்லில் எகிறுகளில் இருந்து இரத்தம் கசிந்துக்கொண்டு இருக்கும் அன்பர்கள், சிரித்தால் அழுதால் பல்லில் இரத்தம் வருபவர்கள். பல் ஆட்டம், பல் சொத்தை ஆகிய தொல்லைகளில் கஷ்டப்படுவோர் இந்த தூளை காலை மாலை இரண்டு முறையும் பல் துலக்கி வர இவை யாவும் ஒழிந்துபோகும்.



சுக்கு இல்லாவிடில் மருத்துவத் துறையில் சிறப்பான முறைகளை செய்வது அரிது! பல மருந்துகளில் சுக்கு தலைவனாக சேரும்போது திறமை மிகுந்த தளபதியைப் போல நோய்களை எதிர்த்து போராடும். தனித்து உபயோகம் செய்யும்போது வீரபாண்டிய கட்டபொம்மன் தான்! சுக்குக்கு மேல் தோலில் நஞ்சும், அருகம்புல்லுக்கு கணுக்களில் நஞ்சும் இருப்பதாக மருத்துவ ஏடுகள் கூறுகின்றன. ஆகவே இவைகளை பயன்படுத்தும் போது நஞ்சு பாகத்தை நீக்கி பயன்படுத்தல் வேண்டும்.

## மத்தள வாய்வு வலி மருந்து

கனமான மாவு சுக்காக தேர்ந்து எடுத்து தேவையான அளவு சுத்தம் செய்து கொள்ளவும். அந்த சுக்கு அளவுக்கு சோற்றுக்கு போடும் உப்பு எடுத்து சிறிது நீர் விட்டு நன்றாக அரைத்துக்கொண்டு ஒவ்வொரு சுக்கின் மேலும் கவனமாக கவசமிட்டு உலரவைத்த பின் அடுப்பில் நெருப்பு ஆறி நீறுபூத்த அனலாக இருக்கும் சமயம் அதன் உள் இந்த சுக்குகளை சொருகி வைத்து சிறிது நேரம் கழித்த பின்பு எடுத்து சுத்தம் செய்து இடித்து தூள் செய்து வைத்துக்கொள்ளவும். (அனலில் வைத்த சுக்கு கருகி விடாமல் பார்த்துக்கொள்வது அவசியம்) அளவு 15 முதல் 20 அரிசி எடை வென்னீர் அல்லது மோர் ஆகியவைகளில் குடிக்கலாம். வயிற்றில் உண்டாகும் சகல வாய்வு ரோகமும் வயிறு பெருத்து பலூன் போலாகி வாய்வு திரண்டு அடிக்கடி சூடாக ஆசனவாய் வழியே புதிய காடா துணி கிழிப்பது போன்ற சப்தத்துடன் காற்று வெளியாவதும், வாய் வழி பெருஏப்பம் விடல் மந்தமான வாய்வு பொருமல் யாவும் குணமாகிவிடும்.

சுக்கு தனித்து தொடர்ந்து சிலநாள் சாப்பிட மனதில் நன்கு வேலை செய்து அகங்காரம், கோபம், எரிச்சல் ஆகியவைகளையும் தணிக்க வல்லது. இதனை உடனடியாக சோதிக்க விரும்புவோர் ஒன்று செய்யுங்கள்! சுக்கை வென்னீர் விட்டு உரைத்த விழுதியை கண் இமையின் உள்ளே தடவி விட்டு பாருங்கள்! கண்கள் எரிய அகங்காரமெல்லாம் போய் கோபம் தணிந்து மன அமைதி பெறும். அது மட்டுமா? கண்களிலிருந்த அழுக்குகள் கெட்ட நீர் எல்லாம் வெளியாகி கண்கள் பிறகு சில்லென குளிர்ச்சியாகி கண்கள் ஒளிபெறும். இதனை நம் முன்னோர்கள் சிறு வயதில் அடங்காது அட்டகாசம் செய்யும் முரட்டுப் பிள்ளைகளை ஒரே சுக்கு துண்டால் சாதுவாக செய்து விடுவார்கள்!

பூவரசு 'சிவ சக்தியான' அர்த்தநாரி அம்சமானது. புவியரசன் என்ற பெயர் மரத்திற்கு வரக் காரணம் என்ன? புவியை ஆளும் மன்னனுக்கு மூன்று முக்கிய அம்சங்கள் இருக்க வேண்டும். ஒன்று வீரம், இரண்டாவது அன்பு, மூன்றாவது இரக்கம் அல்லது கருணை. இம் மூன்றும் உள்ளவனே அரசன் என்று மதிக்கப் படுவான்.

"வீரமும் அன்பும் இரக்கமும் ஒருவராய்ச் சார்தல்
அரசர்க்கு அழகு"

இத்தகைய அரும் பெருங் குணங்களை யொத்த குணங்களாகப் பெற்றதால் தான் இம்மரத்திற்கு புவியரசன் என்று சித்தர்கள் பெயரிட்டனர்.

## பூவரசின் அருங்குணங்கள்

எதிரிகளின் சேனைக்குள் புகுந்த ஒரு சுத்தவீரன் எப்படி படைகளை சின்னுபின்னப் படுத்தி ஓட ஓட விரட்டுவானோ? அதைப் போலவே இப் பூவரசும், தீராத ரோகங்களுக்கெல்லாம் காரணமாக விளங்கும் நுண் கிருமிகள், புழுக்கள், பூச்சிகள் ஆகியவை மனித உடம்பையடுத்து அழிக்கும்போது, ஏவிவிட்ட வீரனைப்போல போராடி அழித்துவிடும் ஆற்றல் மிக்கது. மக்களின் மனப்பண்புகளை எல்லாம் வேவு பார்த்து கேட்டறிந்து தகுந்த பரிகாரத்தை தேடி அன்பு காட்டுவது அரசனின் கடமை. அது போலவே இந்தப் பூவரசும் உடலில் வந்த புண்களை எல்லாம் ஆற்றி வாழத் தகுதியுடையவர்களாக்கி விடுகிறது. உடல் சுத்த மாஞல், மனமும் தானே சுத்தமாகிவிடும். பூவரசன் புகுந்த உடலில் உள்ளமும் தூய்மையாக்கப்பட்டு நிகரற்ற ஆனந்தம் ஏற்படும்.

## உபயோக உறுப்புகள்

பூவரசு இலை, பூ, காய், மரப்பட்டை, அடிவேர் யாவுமே மிகுந்த மருத்துவப் பயன் உடையது. அரச இலையை விட இரு மடங்கு உடையதாய் முனை குறுகி நீளமாகவும், பசுமை நிறைந்த நிறமாக இருக்கும். இதன் பூ மொட்டுகள் ஒரு சிறிய பம்பரம் போல் இருக்கும். சிறுவர்கள் இதை எடுத்து பம்பரம் ஆடுவதும் உண்டு. மொட்டு மலர்ந்தால் பூக்கள் (புனல் போல) செம்பரத் தைப் பூப்போல பெரியதாய் இருக்கும். இப்பூவில் மஞ்சள் நிற முடைய பூக்களும், சிகப்பு நிறமுடைய பூக்களும் நிறைய பூக்கும்.



தூரத்தில் இருந்து இம்மரத்தைப் பார்க்க பச்சை இலைகளினூடே மஞ்சள், சிகப்பு நிற மலர்கள் கண்களைக் கவரும். இயற்கையின் அற்புதமான காட்சியாகத் திகழும் பச்சை மாமலைப் போன்ற திருமாலின் திருமேனியில் மின்னும் பொன்னாபரணம் போலத் துலங்கும் இதன் காய்கள் பெருத்தால் புன்னைக்காய் அளவு இருக்கும். புவியரசனில் இரண்டு விதம் உண்டு. ஒன்று காய்களை உடைத்தால் உள்ளே விதைகள் நிறைய இருக்கும். இதை கெட்டிப் (கொட்டை) பூவரசு என்பார்கள். மற்றொன்று காய்கள் சப்பையாக இருக்கும். உள்ளே விதைகள் அதிகமில்லாமல், வெள்ளை நிறமான புறத்தோலுடன் காணப்படும். இது சாதாரண பூவரசன். இது எங்கும் மலிந்து இருக்கும். ஆனால் கொட்டைப் பூவரசன் அரிதாக எங்கோ ஒன்று இருக்கும். மருத்துவ துறையில் சித்தர்கள் கொட்டைப் பூவரசைத்தான் சிபாரிசு செய்கின்றனர்.

இதன் வேர் உடலை உரம்பெறச் செய்து, வலுவைத் தரும் சிறப்புடையது. இதன் மரப்பட்டை, காயின் விதை, பூ மொட்டு முற்றிப் பழுத்து உதிர்ந்த இலை யாவும் நுண்கிருமி, புழுக்கள் ஆகியவைகளை அழிப்பதில் சக்தி வாய்ந்தது குறிப்பாக மனித உடலில் உண்டாகும் கண்ணுக்குப் புலப்படாத புழு, பூச்சி, நுண்கிருமிகளை அடியோடு அழிக்கும் ஆற்றல் உடையது. மேக ரோகங்களை எல்லாம் தடம் தெரியாமல் ஒழித்துவிடும். மனித உள் உறுப்புக்களில் அரச உறுப்புக்களாகிய நுரையீரல், கல்லீரல் மண்ணீரல், இருதயம், சிறுநீரகம் ஆகியவைகளில் நன்கு வேலை செய்து ஆருத ரணங்களையும் ஆற்றக்கூடியது. ஆயுளை விர்த்தி செய்யும்; உடலுக்கு மேனி தரும்.

## மேக ரோகம்

மேக ரோகம் என்றால் என்ன என்று சிலர் கேட்கிறார்கள். இந்த ரோகம் படு நரகக்குழி என்றே கூறிவிடலாம். மனித இனத்துக்கே உரிய பயங்கரமான வியாதி. இந்த மேகரோகம் மற்ற ஜீவராசிகளை அநேகமாக பிடிப்பதில்லை. காரணம் என்னவெனில் இறைவன் பகுத்தறிவற்ற பிராணிகளுக்குப் பேசும் சக்தியைக் கொடுக்கவில்லை யாயினும், இயற்கைப் பண்புகள் மாறாமல் நடந்துக் கொள்ளும் சக்தியை அளித்திருக்கிறான். அதனால் தான் மேகரோகம் இவைகளைப் பிடிப்பதில்லை. உதாரணமாக நாட்டு விலங்கினமாகிய ஆடு, மாடு போன்ற பிராணிகளில் முறை, தலைவன், தலைவி உறவு என்ற பேதமில்லை. ஆயினும் உடலுறவு கொள்ளும் விஷயத்தில் மிக மிக எச்சரிக்கையாக இருக்கின்றன.



அதாவது சூல்கொண்ட பிராணியிடத்தில் புணர்ச்சி விரும்புவது இல்லை. ஒரு நாய் பின்னால் பல நாய் சுற்றி அலைந்தாலும் சூல் கொண்ட பின் எந்த நாயும் அதனிடம் நெருங்குவதில்லை. இந்த நாயினும் கேடாக சில மனிதர்கள் நடந்து கொள்ளும் விதம் படுமோசம்! அதோடு தாய், தமக்கை, மனைவி என்ற உறவு கொண்டாடும் மனித இனம் விலங்கினத்தை விட மிக மிக மட்டமாகவும், அலட்சியமாமவும் நினைத்து அதே சமயத்தில் அவர்கள் செய்ய விரும்பாத ஒன்றை மனமறிந்து செய்கிறார்கள். இப்படிச் செய்த பல கொடூர, காம இச்சையின் பாபவினைகளே மேகரோகம். சுத்தமல்லாத, ஒழுங்கற்ற, விதிமுறையற்ற உடல் உறவுகளால் மேக ரோகங்கள் விளைகின்றன. நிர்மலமான நீலநிற வானுக்கு கருமேகம் நின்று எப்படி களங்கமாக்குகிறதோ அப்படித்தான் மானிட உடம்பின் கண் தகாத நடத்தையால், மேகம் என்ற இந்த ரோகம் விளைகிறது. வானத்திலுள்ள மேகம் நீரைக் கொண்டது போல, இந்த மேக ரோகமும் நீரைத்தான் காரண பூதமாக்கி, உடம்பிலுள்ள நீரை எல்லாம் சாக்கடை நீராக்கி உடலே நாற்றமடிக்கச் செய்து விடுகிறது.

இப்படி விளைந்த மேக ரோகங்கள் யாவற்றுக்கும் மூலிகையில் அரசன் பூவரசன்! என்று மக்களுக்குச் சொல்லாமல் சொல்லி வைத்தார்கள் நம் நாட்டு சித்தர்கள்.

"நாவுக்கரசர் வாக்கமுதம்
நாளும் சேர்க்கும் இறைவனருள்
பாவுக்கரசன் பாரதியின்
பாடல் கூட்டும் நாட்டுணர்வு!
பூவரசான மூலிகையோ
போக்கும் போகாப் பிணிகளையே"

## மருத்துவ முறைகளில் சில

உடம்பின்மேல் காணும் சர்ம ரோகங்களை எல்லாம் ஒழித்துக் கட்டும் பூவரசன் இலை! பழுப்பான இலைகளைச் சேகரித்து உலர்த்தி தீயில் கரியாக்கி இதன் சாம்பலை சேகரித்து சுத்தமான தேங்காய் எண்ணையுடன் கலந்து சொறி, சிரங்கு, கரப்பான், மேகத் தழும்புகள், ஊரல், அரிப்பு இவைகளின் மேல் தடவிவர, அவை உடனே சாந்தமாகும். இதைப் போலவே பட்டைகளையும் செய்து பயன் படுத்தலாம்.

(2) இதன் பசுமையான இலைகளை அரைத்து சட்டியில்இட்டு வதக்கி, வீக்கமடைந்த இடங்களில் வைத்துக் கட்டிவர அவை யாவும் கரைந்து விடும். வீக்கங்களைக் கரைப்பதில் உத்தாமணி, எருக்கன், கருஞ்செம்பை, ஆதிநாராயணன் போன்றவைகளுக்கு நிகரானது பூவரசனின் பசுமையான இலை.

(3) இதன் காய்களை உடைத்தால் மஞ்சள் திரவம் கசியும். இது உடம்பின் மேல் வளையம் வளையமாக பரவிவரும் (Ring worm) என்ற படர் தாமரை, எச்சில் படுவதால் கிளம்பும் வட்டப் புள்ளி சொறிகள், நீர் ஒழுகும் கரப்பான் ஆகியவைகளுக்கு இது நல்ல பயன் தரும். இதன் காய்களை உடைத்து அப்போதைக்கப்போதே புண்களில் தேய்த்து வருவது நமது கிராமிய பழக்கங்களில் ஒன்று. சிறுவிரல்களின் மூட்டு வீக்கத்திற்கும் இந்த மஞ்சள் நிற திரவத்தை தடவி வரலாம். இது சர்மத்தை மிருதுவாக்கி அழகு செய்வதில் குப்பைமேனிக்கு நிகரான பண்புடையது.

(4) பராசக்தி என்ற வேம்புக்கு அடுத்த படியாக 100 வருட மரங்களில், காயகல்பம் சிகிச்சைக்குப் பயன்படக் கூடியது இந்தப் பூவரசன். பூவரசனைப் பற்றி நாம் நினைக்கும்போது முழுக்க முழுக்க சர்ம ரோகங்களைத்தான் சிறப்பாகக் கொள்ளவேண்டும். அங்க மெல்லாம் அழுகும் தொழு நோயையும் போக்கிவிடும்.

"நூறுண்டு சென்றதொரு நுண்பூ வரசம் வேர்
நூறுண்டு குட்டந் தொலைக்கும் — காண்
வீறிப் பழுத்த இலை, விதை, பூ, பட்டை இவை
கண்டால் புழுத்த புண் விரேசனமும் போம்"

— கும்பமுனி

பூவரசனைப் பார்த்தாலே நோய்விலகும் என்று-என்றும் உள தென் தமிழை இசைத்த முனிவர் பாடியுள்ளார்.. தமிழைத்தந்த வன் வாக்கில் தவறு இருக்காதல்லவா?

## பரம்பரைச் சொத்து

சில தனவந்தர்கள் தன் சந்ததிக்கு சொத்து சேர்த்து வைக்கின்றனர். ஏழை எளியவர் வயிற்றிலடித்து உழைப்போரின் தகுதிக்குத் தக்கபடி ஊதியம் தராமல் பிளாக் மார்கெட், வஞ்சகம் மோசடி போன்றவைகளால் ஒன்றுக்கு நூறு லாபமாகச் சேர்த்து தன் சந்ததிக்கு நிறைய சொத்துக்களைச் சேர்த்து வைப்பார்கள்.



இந்த பணம் நல்ல வழியில் செலவாகாது. ஆகாத காலத்தில் பிள்ளை பிறந்தால் சேர்த்த சொத்து அரை நொடியில் பாழ்பட்டுப் போகும். "தான் தேடாத சொத்துக்கு மாற்றம் இல்லை உரையும் இல்லை" என்றபடி வேசியர் இல்லத்திலும் குடி - சூதாட்டம் போன்றவைகளும் மேற்படி பணத்தை சூறையாடும். இறுதியில் பணம் என்ற சொத்து போய் பிள்ளையாண்டானுக்கு போகத்திற்கு பின் 'மேக ரோகம்' என்ற பரம்பரை சொத்து வந்து சேரும். இந்த "புதிய ஆஸ்தி" இவனோடு மட்டும் போகாமல் இவனது பரம் பரைக்கும் தொடர்ந்து வரும். 'இசும்பு பாத்தியதை' ஆகி விடுகிறது. இம்மாதிரியான பரம்பரை ரோகத்தை அடியோடு ஒழித்துக்கட்டும் தலைமைத் தகுதி பெரும் சிறப்பு அருங்குணம் இந்தப் பூவரசன் ஒன்றுக்குத்தான் உண்டு என்பதை நம்நாட்டு சித்தர்கள் பாட்டு முத்திரையில் அன்றே எடுத்துக் காட்டி யிருக்கிறார்கள்.

"குட்டம் கடிசூலை, கொள்ளும் விடபாகம்
துட்டம கோதரமும் சோபையோடு கிட்டிமெய்யில்
தாவி கரப்பான் கிரந்தி தன்மேகம் போக்கிடும்
பூவரசன் காய் பட்டைப் பூ!"

நம் நாட்டில் பரம்பரை வழியாக வந்த நாட்டு வைத்தியர் கள் இதை மேக ரோகங்களுக்கு எண்ணையில் கலந்து காய்ச்சிக் கொடுத்து கடுமையான பத்தியங்களை வைத்துப் பூரண குணம் செய்து வந்தனர். இந்த எண்ணை முறையையும் தன் பரம்பரை சொத்தாகவே மதித்து பிற வைத்தியர்களுக்கு சொல்வதில்லை. இவர்கள் விளம்பரம் செய்து விற்பனை செய்வதும் கிடையாது. தன்னை நாடி வந்த நோயாளிகளுக்கு முதலில் பணம் வாங்கிக் கொண்டு பின்பு மருந்தும் பத்திய முறைகளையும் சொல்லிக்கொடுப் பார்கள். அது மட்டுமா? நோயாளிகளுக்கு நல்ல புத்திமதிகளைக் கூறி மீண்டும் தவறு செய்தால் உனக்கு விமோசனம் கிடையாது என்றும் எச்சரிக்கை செய்தனுப்புவர்.

இம்மாதிரி பரம்பரை வைத்தியர்கள் இன்னும் நம் நாட்டில் ஒவ்வொரு கிராமங்களிலும் இருக்கத்தான் செய்கின்றனர். ஏன்? எங்கள் பரம்பரையே கூட இம்மாதிரி எண்ணெய் தயார் செய்து வரும் பரம்பரை தான். "தாத வாத்தியார் வைத்தியப் பரம்பரை" என்ற எங்க பரம்பரையில் செய்து வரும் பூவரசன் எண்ணெய் எனது பாட்டன் காலத்திலே நற்பெயரும் சிறப்பும் பெற்றது.

இவர் நிறைய கெட்டிப் பூவரசன் கொட்டையை கொண்டுவந்து இடித்து அத்துடன் சீமைஅகத்தி, சிறுசெருப்படை, சிலந்திநாயகம் வெள்ளை கலியாண முறுக்கு, கருடன் கிழங்கு, சீந்தில் கொடி, நீலிவேர், வெள்ளருகு, சங்கன் இலை, விஷ்ணு கிரந்தி, கொடுவேலி காட்டுச் சீரகம், பரங்கிச் சக்கை, திரிபலை போன்ற அரிய பொருள்களைக் கொண்டு எண்ணெய் காய்ச்சுவார். வெகு விருப்போடும் தூய்மையான மனத்துடனும் ஒருவொரு மூலிகையை எடுக்கும்போது தெய்வ உபாசனை செய்து எண்ணெயைக் காய்ச்சும் பாத்திரத்தை மும்முறை வலம் வந்து வணங்கி தூப தீபம் காட்டி காய்ச்சுவது வழக்கம். இம்மாதிரி பல வைத்திய பரம்பரையினர் செய்வது வழக்கம். பூவரசன் கொட்டை பட்டை இவை இரண்டுக்குமே பரம்பரை பரம்பரையாகவே மேக நோய்களை, இனிப்பிறக்கும் குழந்தைகளுக்குத் தொடராவண்ணம் தடுத்து விடும் என்பதை ஐயம்திரிபறக் கூறலாம். இந்த எண்ணெய் முறையை வாசகர்கள் படித்து அதன்படி செய்துக் கொள்வது கடினம். எனவே, அவர்களின் ஊர்களில் உள்ள நாட்டு வைத்தியர்களை நாடி அவர்கள் மூலமாகச் செய்து உபயோகித்துப் பயன் பெறலாம்.

## காணாக்கடி விடம் நீங்க

மரப்பட்டையை 200 கிராம் அளவு இடித்து நாலு குவளை நீர் விட்டு மண் கலயத்தில் காய்ச்சி ஒரு குவளையாக்கி அதனை தினம் இருவேளை குடிக்க உடம்பில் இன்ன விடக்கடி என்று கூற முடியாத விடக்கடியெல்லாம் மறைந்து விடும். மகோதரம், பாண்டு, சோகை, வயிறு வீக்கம் போன்ற கொடிய நோய்களும் கடிதில் நீங்கும்.

## குழந்தை வேண்டாமா?

நமது நாட்டில் பட்டினி இருந்தாலும் குழந்தை குட்டிகளுக்குக் குறைவேயில்லை. இந்த பிரச்னையை ஒழித்துக் கட்ட என்னென்னவோ பாடு படுகிறது அரசாங்கம். கமிஷன், தரகு, பரிசு என்றெல்லாம் ஆசை காட்டினாலும் அறுவை (ஆபரேஷன்) செய்துக்கொள்ள யார் சம்மதிப்பார்கள்? இனி குழந்தை வேண்டாம் என்று ஆபரேஷன் செய்துக்கொண்டவர்களுக்கும் குழந்தை பிறந்து விட்டு இருக்கிறது. இதனால் வந்த விபரீத தொல்லைகளை அனுபவித்தவர்கள் துணிந்து ஆபரேஷன் செய்துக் கொள்கிறவர்களைப் பயப்படுத்தி விடுகிறார்கள். அரச மரம், வேம்பு, ஆகிய



மரங்களைச் சுற்றி வந்தால் குழந்தை பிறக்கும் என்று சொன்ன சித்தர்கள் "குழந்தை வேண்டாம்" என்று நினைப்பவர்களுக்கு இந்தப் பூவரசனில் ஒரு முறையும் எடுத்துக் காட்டியுள்ளனர். இந்த முறை அந்தக் காலத்தில் அவசியமற்றதாகி விட்டது. ஏனெனில் அந்தக் காலத்து ஆட்சியில், மக்கட்செல்வம் வேண்டும் என்றுதான் சொன்னார்களே ஒழிய குழந்தை வேண்டாம் என்று எந்த அரசனும் உத்திரவிட வில்லையே! தற்காலம் குடும்பக் கட்டுப்பாட்டைச் செய்யவே ஒரு சட்டம் வந்துள்ளபடியால் இந்த முறையை தாராளமாகச் செய்துக் கொள்ளலாம். அனுகூலத்தோடு அபாயமற்ற முறையும் கூட.

பூவரசன்பட்டை 100 கிராம், சீமை காசிக்கட்டி 100 கிராம் இந்துப்பு 100 கிராம் இவைகளை நன்றாய் உலர்த்தி தனித்தனியே இடித்து சன்னமான தூளை ஒன்றாக கலக்கி வைத்துக்கொள்ளவும். இதை பெண்கள் மட்டும் மாத ருது ஆன முதல் நாள் முதல் ஏழாம் நாள் வரையில் காலையில் வெறும் வயிற்றில் அரைக்கால் ரூபாய் எடை அளவு வாயிலிட்டு வெந்நீர் குடித்தல் வேண்டும். இந்த ஏழு நாளும் பால், மோர், மிளகு ரசம், பருப்புத் துவையல் இவைகளையே சாப்பாட்டுடன் சேர்க்கவேண்டும். அடுத்த நாள் நல்லெண்ணையில் தலைமுழுகி விட்டால் போதும். இம் முறையை ஆண்கள் செய்யத்தேவையில்லை. இப்படி சாப்பிட்ட பெண்களின் கருப்பை சுமார் ஆறு மாதம் அல்லது ஓர் ஆண்டு காலம் தாய்மை பேறு அடையும் பக்குவம் பெறாமல் சுருங்கி விடுகிறது. கணவன் மனைவி உடல் உறவுகளும் வைத்துக்கொள்ளலாம். இம் மூலிகை முறை உடலையும், உள்ளத்தையும் பாதிப்பதில்லை. இதர கேடுகளும் உண்டாக்காமல், குழந்தைப் பேற்றை தடுத்து விடுகிறது. ஆனால் மீண்டும் ஒரு வருடம் கழித்து கருவடையும் நிலை எய்தும் போது முன் போலவே ஏழு நாட்களுக்குச் செய்துகொள்ள வேண்டியது தான். குடும்பக் கட்டுப்பாட்டை ஆதரிப்போர் இம் முறைக்கு ஆதரவு தரலாமே!

"காதலுக்கு வழி வைத்துக்
கருப்பாதை சாத்தக்
கதவொன்று கண்டறிவோம்"
இதிலென்ன குற்றம்?

பூவரசன் பூவை கஷாயமிட்டுச் சாப்பிட வெய்யில் வெப்பத்தால் வந்த உடம்பு நமைச்சல்களால் வரும் அரிப்பு, தினவு, தேகச்சூடு, அற்ப சிறு நச்சுக்கடிகள் ஆகியவைகள் ஒளி முன் இருள் போலவும் சூரியன் முன் பனி போலவும் விலகியோடும்.

நூறு ஆண்டு பூவரசன் வேர்ப்பட்டையை தனியே எடுத்து சுத்திசெய்து பாலில் அவித்து உலர்த்தி அதனுடன் பரங்கிபட்டையைச் சமனுக்கு சேர்த்து 3 சிட்டிகை அளவு பசு வெண்ணையுடன் தினமும் இரண்டு வேளை தவறாமல் உண்டு, உப்பில்லாத பத்தியமிருக்க நாள்பட்ட குட்டரோகம், குறைநோய் நிவர்த்தியாகி ரணம் புண், புரைகள் யாவும் குணமாகும். பரம்பரைச் சொத்தாக வரும் மேக ரோகங்களைத் தீர்க்கும் பூலோக அரசனாகிய பூவரசனைப் போற்றிப் புகழ்வது மனிதப் பிறவியின் தலையாய கடமையல்லவா? மரம் நடும் விழாவில் கலந்துக் கொள்ளும் போதெல்லாம் இது போன்ற பயன்படும் மரங்களை நடுவது சாலச்சிறப்பாகும்.

"பெற்றோர் தந்த ரோகங்கள் பிழையால்
பெற்ற பாழ் நோய்கள்
பற்றிய தொழுநோய் புண் புரைகள்
படர்தா மரைகள் கரப்பான்கள்
முற்றும் பற்று தோடிவிடும்
பூவர சென்னும் மூலிகையால்
சற்றே பிள்ளை பேற்றுக்கும்
தாழ்ப்பாளாகும் பூவரசே!"



# பொடுதலை

கீரை இனத்தைச் சேர்ந்தது இந்த பொடுதலை. வழக்குச் சொல்லாக கிராமங்களில் பொடுதலங்கீரை என்று அழைப்பார்கள். இந்த கீரையில் ஆண் இனமும் பெண் இனமும் உண்டு என்று சொல்லிக் கொள்பவரும் உண்டு. பிரண்டையில் ஆண், பெண் உள்ளது போல் இலையில் சிறியதாக இருப்பதை பெண் என்றும் சற்று பெரியதாக இருப்பின் ஆண் என்றும் சொல்லி மேற்கோளும் காட்டுவார்கள். கிராமங்களில் உள்ள மக்கள் இதனை நோயுற்ற போது உற்ற நண்பனாகக் கருதுவார்கள். "எங்களுக்கு ஊசி போட்டுக்க காசு ஏது சாமி! இது தாங்க கொயிந்திங்களுக்கு வர்ர நோயிலே இருந்து, பெர்ரீவங்களுக்கு வர்ர நோயிக்கு எல்லாம் ஒதுவுது" என்று சொல்லும்போது, ஒரு பெரிய எம்.பி பி.எஸ். பட்டம் பெற்றவராக இருந்தாலும் கூட அவனுக்கு கமிஷன் கொடுத்து இன்னும் கொஞ்சம் விவரம் கேட்டு தெரிந்துக் கொள்ளலாமா? என்றவேட்கை அதிகமாகுமென்பதில் ஐயமில்லை.

பொடுதலை கீரை இனமாக இருந்தாலும் கூட அடிக்கடி சமையலுணவில் சேர்ப்பதாகத் தெரியவில்லை. அநேகமாக இந்த கீரை ஈரப்பசை நிறைந்த கழனிக்கால் பயிர் பச்சை வரப்புகள் இருமருங்கிலும், வாய்க்கால் ஓரங்களிலும், பச்சைப் பசும்புற்களினிடையேயும் கீழாநெல்லி, அம்மாம்பச்சரிசி, கரிசாலை முதலியவைகள் போலவே வளரும். செருப்படை போல கொடியாகப் படர்ந்து வளரும். இதன் இலைகள் ஏறக்குறைய செருப்படை இலை போல இருந்தாலும் நல்ல பச்சை நிறமாகவும், ஓரங்களில் அரிவாள் பல்வெட்டு போலும் காணும். இலையும் சற்று நீண்ட வடிவம். இதன் பூக்கள் மிகச் சிறியதாகி ஐந்து சிறிய வெள்ளை இதழ்களைக் கொண்டு பூத்து, பிறகு அந்த இதழ் அடியிலிருந்து காய்த்து $\frac{1}{4}$ முதல் 1 அங்குலம் நீளம் வரை காய் வளரும். பொடுதலையின் காய் ஏறக்குறைய நாட்டு மருந்து கடைகளில் விற்கும்

திப்பிலி என்ற வடிவமாக அமைந்து இருக்கும். பொடுதலைக் கீரையை கேரளம் போன்ற இடங்களில் காட்டுத் திப்பிலி என்று சொன்னால் தான் விளங்கும். இதன் செழுமையான வளர்ச்சி கார்காலம் ஆகும்.

## மருத்துவ குணம்

பொடுதலைக்கு விசேஷ குணம் உள்ளுறுப்புகளின் இரணங்களையும் அழற்சியையும் போக்குவதில் பிரண்டைக்கு சமமானது. வயிற்றிலுள்ள நுண்கிருமிகளைக் கொல்லக்கூடிய சக்தி வாய்ந்தது. அடுத்து கபம், மார்பு சளி இவைகளை அகற்றி உடலுக்கு பலத்தை தருவதில் தூதுவளைக்குச் சமம். கோழையறுப்பதில் தூதுவளை இல்லாத இடங்களில் பொடுதலை உற்ற நண்பன். வாத வீக்கம் வெளியில் காணும்போதும், கப வாதங்களால் உள்ளுறுப்புகள் நீர்கொண்ட போதும் வீக்கத்தை கரைத்து சிறுநீரை பெருக்கித் தள்ளுவதில் கீழாநெல்லி, உத்தாமணி, கரிசலாங்கண்ணி போல் வேலை செய்யும். எனவே இதை கிராம மக்கள் சிறப்பாக கொண்டாடுவதில் வியப்பொன்றும் இல்லை.

உண்மையில் கிராம மக்களுக்கு கொஞ்சம் காசு இருந்து சற்று நாகரீகப் போக்கில் பற்றும் இருந்துவிட்டால்? இந்தப் பொடுதலையை நம்பி வாழ்க்கை நடத்தாமல் நவீன ஊசியை நாடி நகரத்துக்குத்தான் வந்திருப்பார்கள். நகரத்தில் ஊசிப் போட்டு தன் வருவாயைப் பெருக்கிக்கொண்டே காரிலேயே சவாரிசெய்யும் டாக்டர்கள் ; கிராம மக்களிடம் சென்று பணியாற்றுகிறேன் என்று வாயால் சொல்லிக் கொள்ளலாமே தவிர இந்தப் பொடுதலையை பூண்டோடு ஒழிக்கப்பட்டால் ஒழிய கிராம மக்களை ஏய்க்க முடியாது.

நமக்கு நல்ல உதவிகளை சமயத்தில் செய்தவர்களை நாம் மனதார, வாயார வாழ்த்துகிறோம் அல்லவா? இது போன்றே பொடுதலை வைத்தியனைப் போல பணிபுரிகிறபடியால் அகத்திய முனிவராகிய கும்பமுனியும் இதனை வாழ்த்து என்றே கூறுகிறார்.

## உபயோக முறை

பொடுதலைக் கீரையை கைப்பிடியளவு எடுத்து அத்துடன் ஐந்து மிளகு ஒரு பூண்டு சிறிதளவு சீரகம் ஆகியவை சேர்த்து மைபோலரைத்துக்கொண்டு ஒரு வாயகன்ற இரும்புக் கரண்டியை



அடுப்பில் காயவைத்து அதில் சிற்றுமணக்கு எண்ணெயை ஊற்றி நன்கு காய்ந்ததும் அரைத்துவைத்த இலையை சிறியபில்லைகளாக தட்டிப்போட "சொட சொட" என்று சப்தத்துடன் ரசம் சுண்டும். அதன் பிறகு ஆறிய பின்பு எடுத்து வடிகட்டி வைத்துக் கொண்டு பிறந்த குழந்தை முதல் 12 வயது வரை அரை முதல் ஒண்ணரை பாலாடை வரை காலையில் வெறும் வயிற்றில் கொடுத்துவிடுவது கிராம வழக்கம். இதனால் வயிற்றுப் பொருமல், மாந்தம், கண மாந்தை, கப ஜுரம், பித்த வாந்தி, வயிற்றுக்கோளாறுகள், சீத பேதி, சாதாரணமான பேதிகள், மலச்சிக்கல், சளி, இருமல் எல்லாம் உடலை விட்டு கூண்டோடு கழியும். உள்ளே இருக்கும் சாக்கடையை சுத்தமாக குத்திக் குடைந்து நீர் விட்டுக் கழுவியது போலாகும் இந்த சிகிச்சை! பிறகு குழந்தைகளுக்கு இழுப்பாவது? இளம்பிள்ளை வாதமாவது?

ஆங்கிலப் பெயர்களான "போலியோ மைலடிஸ்! கன்வல் ஷன்! நிமோனியா!" என்றெல்லாம் பெயர் வைத்து, அதற்கு இல்லாத பொல்லாத மாத்திரை, ஊசி மருந்து, டானிக்குகள் எல்லாம் நகரத்து மக்களிடம் தான் செல்லுபடியாகும்! இது அசுத்தமடைந்த சாக்கடையை வெளியேற்றாமலும், சுத்தம் செய்யாமலும், ஒரு பெரிய மூடிபோட்டு மேலே நாற்றம் அடிக்கா மல் தடுப்பதுபோல. இன்றைக்கு இல்லாவிட்டாலும் இந்த மூடிய சாக்கடையில் புழுக்களும் பூச்சியும் பெருத்து பிறகு ஊரே மூக்கை பிடித்துக்கொள்ளும் அளவுக்கு வந்தால் ஆச்சர்யப் படுவதற்கு இல்லை!

## வீக்கங்களுக்கு

பொடுதலை உள்ளுக்கு போனால் எவ்வளவு வேலை செய் கிறதோ அதுபோல வீக்கங்கள் கட்டி, கை இடுக்கு, துடை இடுக்கு களில் வரும் நெறிகட்டிகள், கொப்புளம், சீழ்கண்ட புண் ஆகிய வைகளுக்கும் துரிதகுணம் கொடுத்து வீக்கத்தையும் கரைத்து விடுகிறது.

## சீதபேதி

சீதபேதி கண்டவர்களுக்கும் வயிற்றில் ரணம் உடையவர் களுக்கும் பொடுதலையை நெய்விட்டு வதக்கி மிளகு, சீரகம், உப்பு ஆகியவைகளைப் போட்டு பொரியல் போல செய்து கொடுக்க இரண்டொரு நாளில் குணமாகிவிடும். குன்ம ரோகங்களில் இதையே பல நாட்களுக்கு தினம் 1 வேளை தொடர்ந்து சாப்பிட்டு வந்ததில் ரணகுன்மம் குணமானதாக கிராமமக்கள் கூறுகின்றனர்.



## மேக ரோகம்

செருப்படையால் மேகரோகம் நீங்குவது போல, பொடுதலை கீரையுடன் சீரகம் சம அளவு சேர்த்து அரைத்து நெல்லிக்காய் அளவு உருட்டி எருமை தயிர் அல்லது வெண்ணையுடன் கலந்து சாப்பிட வெட்டை சூடு, கொருக்கு, வெள்ளை, ஒழுக்கு ஆகியவை களை போக்கிவிடும்.

## மூலரோகம்

உள்மூலம், ரத்தமூலம், பௌத்திரம் ஆகிய நோயுடையவர் கள் இதை உளுந்து பருப்புடன் நெய் போட்டு துவையல் செய்து பகல் உணவில் ஒரு முறை சாப்பிட்டு, இலையை மட்டும் இரவில் விளக்கெண்ணை விட்டு வதக்கி ஆசன வாயில் வைத்துக் கட்டிவர சூட்டை தணித்து மூலரோகத்தைப் போக்கும்.

## காசம்

மார்புசளி, சுவாச காச நோய்களுக்கும் இந்த பொடுதலை கீரையை இஞ்சி, புதினா, கொத்துமல்லி, கருவேப்பிலை ஆகியவை சேர்த்து துவையல் செய்து சூடான சாதத்துடன் நெய்விட்டு பிசைந்து முதல் இரண்டு பிடி சாப்பிட்டுவர அவை நீங்கிப்போய் விட்டு இருக்கிறது.

## பொடுதலங்காய் சட்னி

திப்பிலி போன்ற இதன் காய்களைச் சேகரித்து எடுத்து மற்றைய துவையல்களுக்கு சேர்ப்பதுபோல இஞ்சி, புதினா, கருவே பிலை உளுத்தம்பருப்பு எல்லாம் சேர்த்தரைத்து சாப்பாட்டில் துவையலாக சேர்ப்பதும் நாட்டு வழக்கம். இந்த துவையல் எள்ளுத்துவையல் போல் அவ்வளவு ருசியும் உடலுக்கு நல்ல பலத்தையும் பசியையும் உண்டாக்கும்.

## கோழிகளுக்கு வரும் நோய்

மனிதர்களுக்கு வரும் நோய்களுக்கு மட்டுமின்றி கோழி களுக்கு வரும் கொள்ளை நோய்களில் இதன் இலையும் பூண்டும் இடித்து சாறுபிழிந்து உள்ளுக்கு புகட்டுவார்கள். கோழிக் கொள்ளை நோயிலும் பொடுதலை சிறப்பிடம் பெற்றுள்ளது.

## தலை சிரங்குகள்

பித்தரோகம் தலைக்கு ஏறி கபாலம் கொதித்து உஷ்ண மடைந்து சொறிசிரங்கு போன்ற நோய்கள் வந்து துன்பப்படு

வோர்க்கெல்லாம் இந்த பொடுதலை மிகச் சிறந்தது. மேலும், தலை மண்டை (கபால உஷ்ணம்) சூடு நாட்பட்டு போய் தலை சுண்டு வளர்தல் அடை அடையாக பக்கு உதிர்தல் போன்ற நோய்களை போக்கவல்லது.

## முறை விபரம்

பொடுதலை வேருடன் எடுத்து (பூ, காய் உள்பட) அலசி, நீரை நன்ருக உதறி விட்டு கல் உரலில் மர உலக்கையால் இடித்து சாறு பிழிந்துகொள்ளவும். எவ்வளவு சாறு வருகிறதோ அவ்வளவு சுத்தமான எள் எண்ணெயுடன் கலந்து அடுப்பில் வைத்து சிறு தீயாக கொதிவராமல் காய்ச்சவேண்டும். அப்படி காய்ச்ச வெகு நேரம் பிடிக்கும். சாறு எல்லாம் சுண்டக்காய்ச்சி வாரம் இருமுறை தலையில் தேய்த்து தலைமுழுகிவர தலையைப் பற்றிய சர்மரோகம் யாவும் ஒழியும். தலைப்பொடுகு கண்டவர்கள் உபயோகித்து நற் பயன் கண்டு வாழ்த்தியதால் இதற்கு பொடுதலை என்ற பெயர் வந்ததாக சிலர் கூறுவர்.

"பொடுதலையின் பேருரைத்தால் பேராமம் போகும்
அடுதலைச் செய் காசமும் அடங்கும் — கடுகிவரு
பேதியோடு சூலை நோய் பேசரிய வெண்மேகம்
வாதமும் போ மெய்யுரக்கும் வாழ்த்து."

— அகத்தியர்

என்று அகத்தியரே நாவால் வாழ்த்துகிருர் என்ருல் பொடு தலையின் சிறப்பைப்பற்றி கேட்க வேண்டுமா ?

பொடுகு, தலையையுடைய அன்பர்களே ! பொடுதலையை நினைத்துக் கொள்ளுங்கள்.



உ

# கோவைக் கொடி

இரு குரங்கின் கை என்ற முசுமுசுக்கை கொடியை வாசித்த அன்பர்கள் இந்த கோவைக் கொடியைப் பற்றியும் தெரிந்துக் கொள்வது அவசியமே ! கோவைக் கொடி எங்கும் ஏராளமாக வளர்ந்து கண்களுக்கு இனிய காட்சி தரும். உடல் நலனுக்கு ஏற்ற பல நற்குணங்களையுடையது. இந்த கோவைக் கொடி முசுமுசுக்கை கொடியைப் போலவே இலைகள் இருக்கும். ஆனல் இதன் கொடி காம்பு இலைகளில் ரோமங்கள் போன்று ஒன்றுமில்லாமல் வழவழப்பாக இருக்கும். காய்கள் முசுமுசுக்கை காய்போலவே அதைவிட பத்து மடங்கு பெரியதாக பச்சை நிறமாக இருக்கும்.

ஒரு அங்குல கனமும் ஒண்ணரை முதல் இரண்டு அங்குல நீளமும் ஆகி உருளை வடிவமாக இருக்கும். பழுத்தால் செக்கச் சிவப்பு நிறமாகி பார்ப்போரைக் கவர்ந்து விடும். பறவை இனங்களுக்கு ஆகாரமாகவும் இந்தப் பழம் பயன்படுகிறது. பள்ளியில் படிக்கும் கிராமத்திலுள்ள சிறுவர்களுக்கு கோவைக் கொடி நன்ருகத் தெரியும். ஏனெனில் அவர்கள் கரும்பலகையை சுத்தம் செய்ய இந்த கோவை இலையை பறித்துத்தான் தேய்ப் பார்கள். இதனல் பலப்பம் நன்ருய் அச்சுக் கொட்டுமாம் ! கோவைப் பழத்தைப் பார்த்து விட்டால் பிள்ளைகள் விடமாட்டார் கள். கோவைப் பழம் சாப்பிட இனிக்கும்.

இந்தக் கோவைக் கொடியை மூன்று விதமாகப் பிரிக்கலாம் ஒன்று முசுமுசுக்கை இலை போல ஐந்து முனைகளையுடைய இலை, இதற்கு ஐவிரல் கோவை என்றும், மூன்று முனைகள் உடையது மூவிரல் கோவை என்றும், இதில் இலை காய் ஆகியவைகளில் வெள்ளை நிற கோடுகள் காணும் வகை ஒன்று, இதற்கு நாமக் கோவை என்றும் பெயர். பொதுவாக இவைகளுக்கு குணம் ஒன்றே ஆனலும் நாமக்கோவைக்கு விசேஷ பலன் உண்டு. மூவிரல் கோவை கைப்பு ருசியுடையது. மற்ற கோவையில் சில இனிப்பும் கைப்பும் கலந்து காணும். கோவை கிழங்கும் உள்ளது.

## பொதுக் குணம்

கோவையின் குணவிசேடம் அனேகருக்குத் தெரியாது! அற்பமென்று நினைத்து விட்ட கோவை இலையால் சிறுவர்கள் தன் பலகையில் உள்ள எண்ணைப் பசைகளையும், அழுக்குகளையும் போக்கிக்கொள்ளுகிறார்கள் என்றால் வேறு என்னத்தைச் சொல்ல. பித்த, சிலேத்தும, வாத, கப தோஷங்கள் ஆகிய தொந்த நோய்களும் நீக்கக்கூடியதாகும். கோழையை அகற்றி நிமோனியா, டைபாய்டு போன்ற ஜுர வியாதிகளை வரவொட்டாமல் தடுக்கும் சக்தி வாய்ந்த மூலிகைகளாகிய தூதுவளை, ஆடாதொடை, முசுமுசுக்கை போன்ற மூலிகைகளைப் போல வேலை செய்யக்கூடியது. அது மட்டுமா? மேக ரோக சம்மந்தப்பட்ட நீரிழிவுகள், சர்ம ரோகங்கள் ஆகியவைகளுக்கு ஆவாரை, நீர் ஆரை, நித்தியக் கல்யாணி போன்று வேலை செய்யக்கூடியது. ஆக இருதரப்பிலும் கோவை நன்கு வேலை செய்வதால் நாட்டு வைத்தியர்கள் இதை வெகுவாகப் பயன்படுத்திக் கொள்வது வழக்கம்.

## இலையின் உபயோகம்

கோவை இலையை குறுக அரிந்து ஒரு கைப்பிடி அளவு ஒரு குவளை நீரில் போட்டுக் காய்ச்சி அரை குவளையாக்கி தினம் இரண்டு வேளை குடிக்க உடல் சூடு தணியும். கண் எரிச்சல், இருமல், நீரடைப்பு, சொறி சிரங்கு, புண், ரணம் ஆகியவைகளைப் போக்கும். இலையை வேண்டிய அளவு எடுத்து நன்றாக உலர்த்தி மர உலக்கையால் இடித்துத் தூள் செய்து வைத்துக்கொண்டு மேல் குறிப்பிட்ட வியாதிகளுக்கு இரண்டு சிட்டிகை வெந்நீரிலும் குடித்து வரலாம்.

கோவை இலைச் சாற்றை அரை அவுன்ஸ் காலையில் வெறும் வயிற்றில் குடித்துவர, ரசபாஷாண மருந்துகளால் உண்டான வேக்காடு வாய்ப்பிடிப்பு போன்ற தீக்குணங்கள் யாவும் முறிந்துவிடும்.

இலைச்சாற்றுடன் சம அளவு நல்லெண்ணை கலந்துக் காய்ச்சி சாறு சுண்டிய பின்பு எடுத்து வைத்துக்கொண்டு சொறி சிரங்கு படை, கரப்பான் வியாதிகளுக்கு மேல் தடவ ஆறும். இந்த எண்ணையை வாரம் ஒரு முறை உடம்பில் பூசி தலை முழுகிவர உடலில் தேங்கிய நீரை வியர்வையாகப் பெருக்கி உட்சூட்டை தணிக்கும்.



கோவைக் கொடி

## காய்

காய் கைப்பு ருசியையுடையது. மேகரோகத்தால் வந்த நீரிழிவு, வரட்சி, தேக உஷ்ணம் ஆகியவை நீங்கும் நீரில் உள்ள சர்க்கரையைக் குறைத்து சிறு நீரகத்தை துப்புரவு செய்வதில் கோவைக்காய் சிறப்புடையது. நாள்தோறும் இரண்டு காய்களை பச்சையாகவே சாப்பிட்டுவர சர்க்கரை நோய் வர வொட்டாமலே தடுத்து விடலாம்.

கோவைக்காயை வற்றலாகவும் செய்து ஊறுகாயாகவும் செய்து சமயலுடன் சாப்பிடுவது நமது நாட்டில் வழக்கமாகும். இதனால் வாய் அருசி நாவின் ரணம் வெடிப்பு பித்த தோடம் குமட்டல் முதலிய நோய்கள் விலகும். நீடித்த சுரம் கண்டு தணிந்த பின்பு இந்த வற்றலும் ஊறுகாயும் கொடுப்பது மிக்க நன்மை தரும். இக்காயை சிறு நீர் சம்பந்தப்பட்ட நோய் உடைய வர்கள் அடிக்கடி பயன்படுத்த நன்மை தரும்,

## கிழங்கு

இலை, காய் இவைகளை விட கோவைக்கிழங்கிற்கு சக்தி அதிகம். இதனால் ஆஸ்துமா இரைப்பு, கபரோகம், மார்புச்சளி, மேகம், குட்டம் ஆகியவைகளும் நீங்கி விடும். நீர்கட்டை உடைத்து விடும். கிழங்கை எடுத்து அலசி சுத்தம் செய்து மேல் தோலை சீவி பில்லைபோல் அறுத்து வைத்துக் கொண்டு மிளகு தூளில் தொட்டு தின்று வரலாம் அல்லது இடித்துப் பிழிந்து கால் அவுன்ஸ் வீதம் உள்ளுக்கு தினம் ஒருவேளை காலையில் மட்டும் பருகிவர மேல்கண்ட நோய்கள் யாவும் விலகும் என்பதில் ஐயமில்லை

கோவைக் கொடி கற்ப மூலிகை இனங்களைச் சார்ந்ததாகை யால் பூர்வவினை சம்பந்தப்பட்ட வியாதிகளும் விலகுவதாக மருத்துவ நூல்களில் கூறப்படுகிறது. சிலர் சித்து (இது ஒருவித படிக்கல்) கல்நார் (இதுவும் ஒரு கடினமான கல்) ஆகியவைகளை யெல்லாம் கோவை இலை கவசமிட்டு புடமிட பால்போல் வெளுத்து நீற்றுவிடச் செய்யும் சக்தி உடைய இது பூர்வ வினைகளை ஏன் ஒழிக்காது? ரகசியமாக மறைத்து காப்பாற்றி வந்த சித்த வைத்திர்களுக்குத்தான் தெரியும் இந்தகோவையின் அருங்குணம்.

"கண்ணும் குளிர்ச்சிபெறுங் காச மொடு வாயுமாறும்
புண்ணும் சிரங்கும் புரண்டோடும் - நண்ணுடலம்
மீதிலார் வெப்பகலும் வீழாநீர் கட்டேகும்
கோதிலாக் கோவை இலைக்கே!"



# பேய் மிரட்டி

பேய் மிரட்டி என்ற மூலிகையும் உண்டு. சாதாரணமாக எங்கும் காணக்கூடியதே. குப்பைமேனி, கீழாநெல்லி, நாயுருவி, தும்பை போன்றே ஏராளமாகவும் மிகவும் சுலபமாகவும் கிடைக்கக் கூடியது. இதன் வழக்குப் பெயர் பொதுவாக சில இடங்களில் "இரட்டப் பிரமட்டை" "நெட்டப் பிரமட்டை" என்றும் மலையா ளத்தில் பெருந்தும்பா என்று சொல்வதுண்டு. இதற்கு மருத்துவ அகராதிப் பெயர் வெதுப்படக்கி, பேய்மருட்டி, பைசா சாமி என குறிப்பிடுகிறது. தெலுங்கு தேசங்களில் சின்ன ரான பிரா, மாபிரி மேகபிரா என்றும் சொல்லுவார்கள்.

இந்த மூலிகையும் தென் இந்தியாவுக்கே உரியது. குறிப்பாக மலையாள தேசம், ஆந்திர தேசங்களில் தன்னிச்சையாக வளர் கிறது. பிரண்டை போலவே இதிலும் ஆண் பெண் என்ற இனங் கள் உண்டு. செடி இனத்தைச் சார்ந்தது இது. இரண்டடி முதல் நான்கடி உயரம் வரை வளரும். பேய்மருட்டி தும்பை இனத்தை சார்ந்தது என்றும் சொல்லுவார்கள். பெண் இனத்தின் இலைகள் வெற்றிலை போல் அகலமாகி இலையின் ஓரங்களில் அரிவாள் போல் அமைந்து இருக்கும். ஆண் இன பேய்மருட்டி நுணா இலை போல நீளமாகவும் சிறிது சாம்பல் நிறம் பூத்தது போல் இருக்கும். இலையை தொட்டால் மிருதுவாகவும், கசக்கி முகர்ந்து பார்த்தால் நெடி சலும் காரமுள்ள மணமும் வீசும். இவைகளின் பூக்கதிர்கள் தும்பையின் கதிர்கள் போல அரும்பு விட்டு மலர் செந்நீல நிறமாக ஏறத்தாழ தும்பை போலவே இருக்கும்.

பேய் மருட்டியின் இலைகள் மிகுந்த மருத்துவப் பயன் உடையது. ஆண் பெண் இரண்டிற்கும் குணம் ஒன்றே. ஆனாலும் பெண் பேய் மருட்டி சிறப்புடையதாகும். பொதுவாக இது பசியை தூண்டி வியர்வையை பெருக்கும். உடம்பின் வெதுப்பை அடக்கி நாடி நரம்புகளை உரம்பெறச் செய்யும். இலையை மண் சட்டியில் போட்டு வதக்கி கீல்வாதம், மூட்டு வலிக்கு சூட்டுடன் ஒத்தடமிட வலிகள் குறையும்.

## வேது பிடித்தல்

விடாத வாத சுரங்களுக்கு இந்த இலையைக் கொண்டுவந்து நீரில் போட்டு கொதிக்க வைத்து வேது பிடிப்பார்கள். இதனால் உடம்பெல்லாம் குபீரென்று வியர்த்து நீராக கொட்டி உடல் லேசாகவும் போவதுடன் தணியாத சுரம் உட்சூடு வாதம் வாய்வு ஆகியவை யாவும் நீங்கும் என்பது வழக்கு.

இலையைப் பிழிந்த சாற்றை நான்கு முதல் ஆறு துளி வரை வெந்நீரில் கலந்து குழந்தைகளுக்கு பல் முளைக்கும்போது ஆகும் பேதிகளை நிறுத்த கொடுப்பதுமுண்டு. பல் முளைக்கும் காலத்தில் ஆகும் பேதிகளை நிறுத்த பேய் மருட்டி இலைச்சாறு மிகவும் பயனுடையதாகும்.

## பேய் மருட்டி இலைக் கஷாயம்

பெண் இனத்தின் பேய் மருட்டி இலை பசுமையானதாக ஒரு கைப்பிடி அளவு எடுத்து குறுக நறுக்கி இரண்டு குவளை நீரில் போட்டு மண்பாண்டத்தில் காய்ச்சி 1 குவளையாக்கிய கஷாயத்தை தினம் ஒன்று இரண்டு வேளை குடித்துவர கொதிக்கும் சுரங்கள் சீதவாத சுரம், முறை சுரம், நீராகப் போகும் பேதி, மலக்கழிச்சல், மாந்தகணக் கழிச்சல் இவை யாவும் குணமாகி வரும்.

## வாந்தி பேதி நிற்க

நெற்பொரி ஒருபிடி, இதன் இலை ஒருபிடி இரண்டும் எடுத்து மேல்கண்டபடி கஷாயமிறக்கி மணிக்கொரு தடவை ஒரு முடக்கு வீதம் கொடுக்க காலரா நோய் ஊரை விட்டே ஓடிப்போகும் என்பதில் ஐயமேயில்லை. செய்து பலன் காணுங்கள்!

## மாந்திரீக மூலிகை

பேய் மிரட்டி உச்சாடன மூலிகையாம்! நமது நாட்டில் இதை பலர் உச்சாடனம் செய்து (வசீயம் செய்து) கொண்டு ஆண் பெண்களைப் பிடித்த பேய் பிசாசுகளை ஓட்டுவார்கள். இன்றும் இது வழக்கில் உள்ளது. இதனால் தான் இதற்கு பேய் மருட்டி என்ற பெயர் வந்ததாகும்.



"பேய் மிரட்டி யருக்க நாளில்
பிரியமாய் கொண்டு வந்து
தூளதாமி செய்துக்கொண்டு
தூவிட துஷ்டர் பூதம்
அலறுபேய் ஓடவேதான்
ஆகுமுச்சாடனந்தான்
உலகினில் முன்னோர் சொன்ன
உயிர் மூலி வித்தைப்பாரே!"

பேய்களை விரட்டும் மூலிகையாக இருப்பினும் இது ஆட்களுக்கு மனிதர்களுக்கு உபகாரமாக இருக்க இறைவன் பணித்து விட்டார். தீராத வயிற்றுவலிகளுக்கு இதன் இலைச்சாற்றைக் கொண்டு குணப்படுத்திக் கொள்ளுவதாகவும் சில கிராம வாசிகள் கூறுகின்றனர். பேய் மிரட்டி, ஆள் மிரட்டி, நரி மிரட்டி, யானை வணங்கி, பூனை வணங்கி என்றெல்லாம் மூலிகைகளுக்குப் பெயர் கொடுத்து நம் கவனத்தை ஈர்த்து பிணி நீங்கப் பாதையைக் காண்பித்த சித்தர்களுக்கு நாம் என்ன கைம்மாறு செய்ய முடியும். ★



உ

# கொய்யா மரம்

உலகமும் இதிலுள்ள சகல இயற்கைப் பொருள்களும் நமக்குத்தான் (மனிதர்களுக்காக) ஆண்டவனால் படைக்கப்பட்டுள்ளது என்றாலும், ஒருசில குறிப்பிட்ட வஸ்துக்களை நாம் தொடக்கூடாது என்ற பொருள்களும் இருக்கத்தான் செய்கின்றன. அவைகளில் கொய்யா மரம் ஒன்று. கொய்தல் என்றால், பறிப்பது. ஆகவே இது கொய்யா (பறிக்காத) மரம்! பெயரே எவ்வளவு எச்சரிக்கை செய்கிறது பாருங்கள்.

பறிக்காத மரம் என்றால் பின் இது யாருக்காகத்தான் பயன்படும் என்கிறீர்களா? வசந்த காலத்தை அறிவிக்கும் குயில் இனங்கள் கிள்ளை மொழி பேசும் கிளி போன்ற பறவை இனங்களுக்காக சர்வேஸ்வரனால் படைக்கப்பட்டது. "எல்லாவித பழங்களுமே பறவை இனங்களுக்குச் சொந்தம் தானே? அவைகள் சுவைத்த பின்புதான் எஞ்சியவை நமக்கு கிடைக்கின்றன. அப்படி இருக்க நமக்கு மட்டும் ஏன் உரிமை கிடையாது? என்ற ஐயப்பாடு சிலருக்கு எழக்கூடும். இதற்கு பதில் "கொய்யா" என்ற பெயரிட்ட தமிழ் 'சித்தரை'த்தான் போய் கேட்க வேண்டும்!

இப்படி இறைவனால் பறவை இனங்களுக்கு ஒதுக்கப்பட்ட கொய்யா மரமும் சில சந்தர்ப்பங்களில் மருந்தாகப் பயன்படுத்திக் கொள்ளலாம். இதற்கு மனிதர்களுக்கு உரிமையுண்டு. கொய்யா மரத்தின் இலையும், வேரும், மிகுந்த மருத்துவ பயன் உடையதாகும். மரம்தான் எல்லோருக்கும் தெரியுமே! அதைப்பற்றி விமரிசனம் தேவையில்லை. அடி மரமும் கிளைகளும் வழவழப்பான சர்மம் போன்று மிருதுவாக இருக்கும். மரத்தில் ஏறினால் வழுக்கி விழ நேரிடும் எனவே "என் மீது ஏறாதே" நான் உனக்காக அல்ல என்று சொல்லாமல் சொல்லி விடுகிறதல்லவா?

## மருத்துவப் பயன்

இதன் இலையை மட்டும் எடுத்து குறுகஅரிந்து ஒருகைப்பிடி அளவு மண் சட்டியில் போட்டு ஒரு உலர்ந்த மிளகாய் தட்டிப் போட்டு வதக்கி பின்பு இரண்டு குவளை தண்ணீர் விட்டு 1 குவளை யாகச் சுண்டக் காய்ச்சி அரை மணிக்கு ஒரு தரம் ஒரு முடக்கு வீதம் குடிக்க வாந்திபேதி என்ற கலரா, மந்தம், வாய்வு பொருமல் வரட்சி, தாகம் ஆகியன அடங்கிப்போகும்.

அஜீரணம், செரியாமந்தம், குடல் வாய்வு உண்டானபோது கொய்யா இலைக் கொழுந்தாக எடுத்து காலையில் சிறிதளவு பச்சையாகவே மென்று தின்று விட்டு, பகல் (மதிய உணவு) கஞ்சி போன்ற லகுவான உணவு எடுக்கவேண்டும். காலை டிபனை நிறுத்தி விடவேண்டும்.

பல்வலி உபத்திரம் தாங்க முடியவில்லையா? எந்த பல் பொடி தேய்க்கலாம் என்று யாரையும் போய் ஆலோசனை கேட்க வேண்டாம். நாள் தோறும் தோட்டத்தில் உள்ள கொய்யா இலைகளை பறித்து வாய் நிறைய போட்டு நன்றாக மென்று குதப்பி பற்களை தேய்த்து சுத்தம் செய்துவர பல்வலி நீங்கிப்போகும்.

இலைக்கு துவர்பித் செய்கையுடையதால் நீரைக்கட்டும் குணத்தை மிருதியாக பெற்றுள்ளது. அத்துடன் காரல் கருணையின் நமைச்சல் செய்கை அடங்கிப்போக அதனுடன் இந்த இலையை வேகவைத்து சுத்தம் செய்து லேகியம் செய்வது சித்தர் வைத்தியத்தின் முறைகளில் ஒன்றாகும்.

## வேர்

இந்த மரத்தின் வேரும் ஊரில் பரவி தொற்றி வரும் காலரா நோய் காலங்களில் கொய்யா இலை கஷாய முறைபடி போட்டு குடித்துவர நோய் வராமல் தடுக்கவும் வந்தபின் குணமாக்கும் சக்தியும் கொண்டது.

ஒரு பலம் மெல்லிய வேரை எடுத்து அதை நசுக்கி அதனுடன் 1 டம்ளர் தண்ணீரில் இரவில் ஊறப்போட்டு வைத்து காலையில் இந்த ஊரல் கஷாயத்தை 1 சங்கு அளவு குழந்தைகளுக்கு கொடுத்துவர நிற்காத பேதியும் நின்று போகும். இந்த ஊரல் நீரைக்கொண்டு ஆசனத்தில் வெளித்தள்ளும் வளையம் போன்ற சதை மூலத்தைக் கழுவிவர அது சுருங்கிப்போகும்.



## பழம்

மிக இனிப்புச் சுவையை உடையது. ஆனால் அவ்வளவும் உடம்புக்கு கெடுதல்தான் போங்கள்! ஒரு பழத்தை சாப்பிட்டால் போதும் அன்று நீங்கள் என்ன சாப்பிட்டாலும் சரி, கொய்யாபழத்தின் அஜீரண வாசனைத்தான் வரும். அது மட்டுமா? டைபாயிட் நிமோனியா போன்ற சன்னிபாதம், சளி, சுரம், மயக்கம், குமட்டல் வாந்தி, வயிற்றுப்பொருமல் போன்றவைகளும் தானாக வந்துவிடும். வாத, பித்த, சிலேத்துமங்களின் நிலைமாறி தலைகீழாகப்போகும். கொய்யாப்பழத்தை வெகு பிரியமாக சாப்பிடும் அன்பர்கள் என்னடா இந்த மனுஷன் கொய்யாப்பழத்துக்கு ஒரேடியாக இவ்வளவு கெடுதல் சொல்கிறாரே! என்றும் ஆயாசப்படலாம். நான் என்ன செய்யட்டும்? நமது நாட்டின் சித்தர்வாகடம் அப்படி தான் கூறுகிறது. இன்னும் கேளுங்கள்!

"திரிதோஷம் சென்னித் திருப்பம் அரோசியமும்
பொருமந்தம் வந்திப்பொருமல் — கரப்பானும்
மெய்யாகப் பரவும் — மெத்தமலம் விடும்
கொய்யாப் பழத்தினால் கூறு."

நமது நாட்டின் பண்பாடறிந்த பெரியோர் கொய்யாப் பழத்தை சுவாமி நைவேத்தியங்களிலும் வைத்துப் படைப்பதில்லை இவ்வளவு கெடுதலைத்தரும் இந்த பழம். மலத்தை மட்டும் இளக்கி வெளித் தள்ளும் சக்திகொண்டது. எனவே மலத்தை வெளித்தள்ள வேண்டும் என்பதற்காக மற்ற தீயசக்திகளை உள்ளுக்கு புகுத்திக்கொண்டு விடலாமா? கொய்யாபழம் எந்த விதத்திலும் பகுத்தறிவற்ற பறவை இனங்களுக்குத்தான் என்பது இதனால் தெளிவாகிறது.

சில மேனாட்டு நூல்களில் கொய்யாப்பழத்தைப் பற்றி வானளாவப் புகழ்ந்து 'ஏ' வைட்டமின் முதல் 'இஸட்' வரை இருக்கிறது என்பதெல்லாம் வெறும் வியாபார நோக்கம் கருதி மாத்திரை செய்யும் வியாபாரக் கம்பெனிகளுக்கு தான் என்றால் மிகையல்ல.

மனிதாபிமானம் என்பது நமது நாட்டில் நாகரீக முற்போக்கால் மறைந்து வருகிறது. மனிதனுடன் மற்றைய மிருகங்களும் பறவை இனங்களும் ஒட்டித்தான் வாழவேண்டும் எட்டி வாழக் கூடாது. என்பதற்காக பல விதிகளை நமது முன்னோர்கள் கடைப் பிடித்து வந்தனர். வீடு கட்டும்போது உயரத்திலே கிளி கூண்டுகளை மறக்காமல் கட்டிவைப்பார்கள். தோட்டத்திலே கொய்யா கொறுக்காபுளி போன்ற மரங்களை வளர்ப்பார்கள். பறவையினங்களும் உண்டு கூடிக்களித்து விடியற்காலை தூங்கும் நம்மை இனிய குரலில் பாடி மகிழச் செய்து எழுப்பும். தற்கால கட்டிட பிளானில் பறவை கூடு, சே! சே! இது என்ன வீட்டுக்கு திருஷ்டி பரிகார மாட்டம் வேண்டாம் என்று சொல்லி விடுவார்கள். போகட்டும் கொய்யா மரத்தை மருந்துக்காகுமே, என்று தன் (மனித) சுய நலத்துக்காகவாவது பயிரிட்டு வளர்ப்பது நல்லதல்லவா? ★

★

# மிளகாய் பூண்டு

இந்த மிளகாய் பூண்டு என்பதும் (கரப்பான் பூண்டுபோல) ஒரு செடியின மூலிகையாகும். தன்னிச்சையாகவே எங்கும் ஏராளமாக வளரக்கூடியது. குறிப்பாக ஈரப்பசையுள்ள பூமிகளில் ஆற்றுப் படுகைகள், குளம், குட்டை, ஏரி ஆகிய இடங்களில் இதை முக்கியமாகக் காணலாம். இதன் இலைகள் மிளகாயின் இலை போலவே இருப்பதால் இதற்கு மிளகாய் பூண்டு என்று வழக்குச்சொல் உண்டானது. இது சற்றேறக் குறைய மிளகாய் செடிபோல அதே உயரம் வளரக்கூடியது. அடிக் காம்பில் இருந்து மூன்று சிறிய கிளை காம்பு விட்டு அவை வளர்ந்து, அதிலிருந்தும் மும்மூன்று கிளையாகவே விட்டு வளரும். அந்த கிளைகளின் நடுவே சுமார் இரண்டரை அங்குலத்திற்கு கதிர்விட்டு பூத்துக் காய்க்கும். இதன் காய்களும் மூன்று பிளவுகளுடையதாய், பார்வைக்கு ஆமணக்குக் காய் போல் சுமார் பட்டாணி அளவு இருக்கும். இந்த மூலிகையை அகராதிகளில் பேய் ஆமணக்கு, நிலவாமணக்கு என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.

மிளகாய் பூண்டினம் ஏராளமாக வளர்ந்து வருவதாலும், பொதுமக்களின் அன்றாட வாழ்க்கையில் இது பெரும்பாலும் உபயோகமாகாத காரணத்தாலும் ஆடி, ஆவணி மாதங்களில் இவைகளைப் பிடுங்கி, நெல் வயல் போன்ற பயிர் நிலங்களுக்கு எருவாகப் போட்டு மிதித்து உழுவார்கள்.

இந்த மூலிகையும் மருத்துவப் பயன் உடையது என்கிற விஷயம் நமது நாட்டில் அநேகம் பேருக்குத் தெரியாது. சில நாட்டு வைத்தியர்கள் மட்டும் இதன் அருங்குணத்தை தெரிந்து வைத்துக்கொண்டு பரம ரகசியமாக்கி, குறிப்பிட்ட சில வியாதிகளுக்குக் கையாள்வது உண்டு.

## மருத்துவப் பயனும் குணமும்

மிளகாய்ப் பூண்டு மற்ற கீரை இனங்களைப்போல உணவாக பயன்படுத்துவதில்லை. ஆயினும் வேர் முதல் இலை காய்கள் யாவும் மருந்தாக உபயோகம் ஆகும். இலை மலச்சிக்கலுக்கு சோற்றுக் கற்றாழை போல் பயன் தரும். மேலும் வாதநோய் பிடிப்புகளுக்கும் வீக்கங்களையும் குறைக்கும். இதன் வேர் கரிசலாங்கண்ணிபோல உள்ளுறுப்புகளில் வேலை செய்யக் கூடியது. காய்களிலிருந்து எண்ணெய் எடுத்துப் பயன்படுத்த நீடித்த வாதரோகம் பாரிசவாய்வு போன்ற நோய்களைக் குணப்படுத்துகிறது.

## மலச்சிக்கல் நீங்க

இதன் இலைகளை மட்டும் பறித்து சுத்தம் செய்து குறுக அரிந்து கீரைகளைப் பொரியல் செய்வது போல பூண்டு, மிளகு, சீரகம் ஆகியவைகளை எண்ணெய் விட்டு வதக்கி பொரியல் செய்து, சோற்றுடன் பிசைந்து சாப்பிட தீராத மலச்சிக்கல் உடைந்து மலம் வெளியாகும். ஆறு நாளானாலும் ஆட்டுப் புழுக்கை போல சிறிதளவு போக கஷ்டப்படும் அன்பர்கள் இம் முறையை செய்து மலத்தை கழித்து விடலாம். சிறுவர்களுக்கு இதை அபாயமின்றி கொடுக்கலாம். கொடுத்தால் கெடுதல் உண்டாகாது.

## நெறிகட்டிகள் கரைந்து சுரம் தணிய

இதன் இலையை ஒரு பிடி எடுத்து கஷாயமிட்டு (ஒரு குவளை நீரில்) காய்ச்சி அரை குவளையாக்கிக்கொண்டு தினம் மூன்று முதல் நான்கு வேளை ஒரு முடக்கு வீதம் குடித்துவர, கட்டிகள் கரையும். குறிப்பாக கை இடுக்குகளிலும், துடை இடுக்குகளிலும் உருண்டையாக நெறி கட்டி வீங்கி சுரம் அடிப்பவர்களுக்கு இது ஏற்றதொரு கஷாயம் ஆகும்.

## கண் கோளாறுகளுக்கு

மிளகாய் பூண்டு இளம் இலைகளைப் பறித்து கசக்கிப் பிழிந்து கண்களில் ஒரு துளி வீதம் தினம் இருமுறை விட்டுவர கண் நோய்கள், பார்வைக் கோளாறுகள் நீங்குவதாக பல நூல்களில் கூறப்படுகிறது.

இலையை வேகவைத்து சாப்பிட பேதியாகுமே தவிர, இதர விதமான கெடுதல்கள் ஏதும் உண்டாகாது. எனவே மலச்சிக்கல் தீரவும் மற்றும் வாய்வு பிடிப்பால் மூட்டுகள் வீங்கி வலி எழுந்திருக்க உட்கார முடியாது இருப்பவர்கள் ஆதிநாராயணன் கீரைப் போலவே சமையலில் வாரம் ஒரு முறை பயன்படுத்தலாம்.



**மிளகாய்பூண்டு**

## வேர்

இதன் வேர் ஒருபலம் சிறு துண்டுகளாக்கிப் போட்டு, ஒரு குவளை நீரில் காய்ச்சி அரை குவளையாக்கி இரண்டு வேளை குடித்து வர, வாத நோய்கள், வாத வீக்கம், ஸ்தம்பவாதம், பாரிச வாதம் ஆகியவை நீங்குவதுடன், கல்லீரல், மண்ணீரல், கோளாறுகளை யும் நீக்கும். பொதுவாக இதன் வேரை துண்டு செய்து காய்ச்சா மலே சுத்தம்செய்து புதிய மண்பாண்டத்தில் நீருடன் ஊரவைத்து ஊரல் கஷாயமாகச் செய்து பகலில் ஒரு முடக்கு வீதம் குடித்து வரலாம்.

## வித்து எண்ணை

மிளகாய்ப் பூண்டின் வீதையைச் சேகரித்து ஆமணக்கு ஊற்று எண்ணை காய்ச்சுவதுபோல காய்ச்சி எண்ணை எடுத்துக் கொண்டு பாரிச வாய்வு, பக்கசூலை, இழுப்பு, இளம் பிள்ளை வாதம் முகத்து இசிவு, பக்ஷ வாதம் ஆகிய நரம்பு கோளாறுகளுக்கு சர்க்கரையில் 2 துளி விட்டு கலந்து காலை மாலை கொடுத்து பத்திய ஆகாரத்துடன் வைக்க நோய் யாவும் பறந்தோடிப்போகும். பரம் பரை வைத்தியர்களின் பரம ரகசியமான முறை இது. இதே எண்ணையை கஸ்தூரி மெழுகு, கஸ்தூரி, கோரோசனை மாத்திரை களுக்கு அனுபானமாகக் கொடுப்பதும், சித்தர் வைத்திய முறை யின் சிறப்பான அம்சம் ஆகும்.

எண்ணை எடுத்த வீதை சக்கையை நன்கு உலர்த்திவைத்து தூள் செய்து கொண்டு சர்ம ரோகம், சொறி, சிரங்கு, புண்கள் உள்ளவர்கள் குளிக்கும்போது உடம்பைத் தேய்த்து குளித்துவர புண்கள் ஆறி உடல் சுத்தமாகும்.

"மிளகாய் பூண்டின் பேர் உரைத்தக்கால்
வழக்காய் வந்திடும் பெரும் பிணிகள் — தொலையா
தலையும் மலக்கட்டும் மலைமாதே
நிலையாதோடும் விழி நோய்தான்"






ஆனைக் கன்று தெரியுமா உங்களுக்கு? புளியங்கன்று வாழைக் கன்று என்றுதான் சொல் வழக்குண்டு. ஆனால் இந்த ஆனைக்கன்று எந்த காட்டில் இருக்கிறதோ! என ஐயுறவேண்டாம் 'அத்தி' மரத்திற்குத் தான் நமது சித்தர்கள் ஆனைக்கன்று என்று பெயரிட்டார்கள். இம் மரம் யானையின் சர்மம் போன்று சொற சொறப்பாகவும் கருமை கலந்த சாம்பல் நிறமாகி பல பிளவுகளுடன் காணப்படுவதால் 'ஆனைக் கன்று' என்ற பெயர் வந்திருக்கலாம். நாவல் மரம், அத்தி மரம் இவைகளின் அடிமரக் கிளைகளின் நிறம் ஒருமைப்பாடு உடையதாக இருக்கும். இவைகளின் காய்களும் பசுமை நிறமானது. ஆனால் பழுத்தவுடன் நாவல் கருமையாகி விடும். அத்தி செம்மண் நிற சிவப்பாகும். அத்திக்காயின் மேல் (சில்க்) பட்டுப் போன்ற மெல்லிய சுணை இருக்கும். நாவல் பழத் தின் மேல் பளபளப்பான மெல்லிய தோல் மூடியிருக்கும். அத்தி அடிமரக் கிளைகளில் காய்த்து கொத்துக் கொத்தாகத் தொங்கும். நாவல் இலைகளின் இடையே காய்க்கும்.

"கண்டு பூ பூக்கும் காணாமல் காய் காய்க்கும்;
காணாமல் பூ பூக்கும் கண்டு காய் காய்க்கும்!"

இந்த விடுகதையை நமது நாட்டில் குழந்தைகள் கூடச்சொல்லும். ஆடி மாதம் தேடி நட்டுவைத்த பூசனி வீதை, கொடியோடி பெரிய பெரிய இலைகளின் நடுவே மஞ்சள் நிற பூக்களை விட்டு எட்டிப் பார்த்துக்கொண்டு இருக்கும். அத்தி மரமும் பூக்கிறது. ஆனால் அதன் பூ நமது கண்களுக்குத் தெரியாது. அது மட்டுமா? பெருமரக் கிளையில் இதன் காய்கள் கொத்துக் கொத்தாக காய்த்து தொங்குவது மிக விந்தையாக இருக்கும்! இலைகளுக்கும், காய் களுக்கும் சம்பந்தமே இல்லாத மரம் இந்த ஆனைக்கன்று. உறவி னர்கள், உற்ற நண்பர்களின் இல்லத்திற்கு அடிக்கடி போனால்

மரியாதை குறையும் என்று சிலர் ஏதோ ஒரு சமயத்தில் எதிர்பாரா விதமாகச் சொல்லுவார்கள் இவர்களுக்கெல்லாம் 'அத்திப்பூ' என்று சமூகத்தில் பெயரிட்டு விடுவார்கள். "அடியே! அடுக்களையில் என்ன பண்றே! இங்கே வந்து பார், அத்திப்பூ பூத்ததுபோல, அத்திம்பேர் வந்திக்கா" என்பார். வராதவர்கள் வந்து விட்டால் பலமான வரவேற்பு அதுபோலவே அத்தி மரமும், அதன் காய் களும் உணவில் பத்திய பதார்த்தமாகச் சேர்ப்பதும், நம் நாட்டு வழக்கமாகும்.

'செருப்படை' மூலிகை போல், புத்திகெட்டபின் வந்தநோய் களைப் போக்கவும், இந்த அத்தி மரம் சமுதாயத்திற்குப் பயன் படுகிறது. அன்றியும் அத்தி மரம் பால் உள்ள மரம். பால் தரும் மரங்களில் அத்தி சிறப்புடையதாகும். பசு, எருமை போன்ற கால் நடைப் பிராணிகள் கன்று காலிகளை ஈன்ற பின்பு வரும் 'உடுப்பு' என்ற உறுப்பை வைக்கோலில் சுற்றி இந்த அத்தி மரக் கிளைகளில் கட்டி வைப்பார்கள். இதன் தத்துவம் யாதெனில், ஈன்ற கன்றுக் குப் பால் தங்குதடையின்றி தாயிடமிருந்து சுரக்கும் என்பதாகும்.

## பிஞ்சும் காயும்

அத்தி மரத்தின் பிஞ்சு, காய், பழம், பட்டைபால் ஆகிய யாவும் மருத்துவப் பயன் உடையதே. துவர்ப்புச் செய்கையுடைய தாகையால், பேதி, ஆசனக் கடுப்பு, மூலச் சூடு, மூல வாய்வு, இரத்த மூலம் போன்றவை அத்திப் பிஞ்சால் போகும் மற்றும் காய் வாதசூலை, உடல் சூடு, திரேக ரணம், மேக நோய்கள் ஆகியன தீரும். காயையும் பிஞ்சையும் பொரியல், பிட்டவியல் போன்று அடிக்கடி செய்து சாப்பிட மேல்கண்ட நோய்கள் தீரும்.

## வயிற்றுக் கடுப்புக்கு
## ரத்த மூல கிராணிகளுக்கு

**அத்திப்பிஞ்சு, கோவைப்பிஞ்சு, மாமரத்தின் பட்டை, சிறு செருப்படை, ஆக இந்த நான்கையும் சமமாக எடுத்து, இடித்து வாழைப்பூவில் சாறுஎடுத்து அதில் மேல்கண்டவைகளை அரைத்து சுண்டைக்காய் அளவு உருட்டி மாத்திரைப்போல் செய்து வைத்து கொண்டு தினம் இரண்டு வேளை வெந்நீரில் சாப்பிட்டுவர ஆசனக் கடுப்பு, வயிற்றுக் கடுப்பு, இரத்த மூலம், மூலவாய்வு, மூல கிராணி கள் ஆகிய நோய்களை விரட்டி அடிக்கும்.**



## ப ழ ம்

அத்திப்பழம் இருதய பலவீனத்தைப் போக்கும். இரத்த சிகப்பு அணுக்களை உண்டு பண்ணும். மலச்சிக்கலை நீக்கி உடலுக்கு பலத்தையும், ஆரோக்கியத்தையும் உண்டாக்கும். பழத்தை நன்கு உலர்த்தி இடித்துத் தூள் செய்து கொண்டு ஒரு தேக்கரண்டி தூளை வாயிலிட்டு பசும்பால் அருந்திவர இருதயத்திற்கு நல்லது. ரத்தம் பெருகும். அத்துடன் நீரிழிவு ரோகத்தில் சர்க்கரை சத்து குறையும். நாவரட்சி, உடப்பு எரிச்சல் நீங்கும்.

## சீமை அத்திப் பழம்

இது காபூல், ஆப்கானிஸ்தானம், பாரசீகம் போன்ற வெளி நாடுகளில் பயிராகி நம் நாட்டுக்கு வந்து விற்பனையாகிறது. இந்தப் பழங்கள் நாட்டு அத்திப்பழத்தைவிட சிறப்பு வாய்ந்தவை! அதிக ருசியும், நல்லகுணமும் உடையது. இருதய பலவீனப்பட்டவர்கள் தினமும் ஒரு பழம் வீதம் பாசும்பாலில் பிய்த்துப் போட்டு காய்ச்சி பருகிரை ஐம்பது அறுபது ரூபாய் கொடுத்து வாங்கி சாப்பிடும் 'சீமை' டானிக்குகள் கூட இதற்கு நிகராகாது! ஆனால் இந்த பழம் கூட தற்காலம் ஏழைகள் வாங்கி உண்ணத் தக்க நிலையில் இல்லை யே! போகட்டும் நாட்டு அத்தி மரத்தையாவது அன்புடன் வளர்த்து வையுங்கள்.

அத்திப்பழம் பார்ப்பதற்கு மிக அழகாக இருக்கும். அது போல சிலதனவந்தர்கள் ஆடம்பர வாழ்க்கையில் மிதமிஞ்சிபோய் கடன்பட்டு செலவு சுருக்கமாக செய்யத்தெரியாமல் போய்விடு வார்கள். "அத்திப் பழத்தை பிட்டுப் பார்த்தால் அத்தனையும் சொத்தை" என்ற பழமொழி இவர்களுக்குத்தான் ஏற்பட்டதோ? என்னவோ? அத்திப்பழம் காயாக இருக்கும் போதே, கொசுக் களும் பூச்சிகளும் குடிபுகுந்துவிடும்.

அத்திமரத்தின் பால் மற்ற மரப் பால்களை விட சிறப்புடையது என குறிப்பிட்டீர்களே! அது எப்படி என்று கேட்கிறீர்களா? ஆமாம்! 'செருப்படி மூலிகை' மேக ரோகத்தால் விளைந்த சர்ம நோய்கள் படைகள், ஆகியவைகளை நீக்குவதில் சிறப்புடையது. அத்திப்பால் மேக ரோகத்தால் வந்த மூத்திர கிரிச்சரம், நீரிழிவு, மதுமேகம், மூத்திர தாரையின் அழற்சி, ரணம், ரத்தபேதி, வெள்ளை வெட்டச்சூடு பெண்களுக்குக் காணும்பெரும்பாடு ஆகியவைகளை தீர்ப்பதில் சிறப்புடையது.



அத்திப்பாலுடன் வெண்ணையையும், சர்க்கரையும், கூட்டி தினம் இரண்டுவேளை சாப்பிட மேல்குறிப்பிட்ட நோய்கள் விலகும் என்பதில் ஐயமில்லை.

அத்திப் பட்டையும், அத்திப்பால் போலவே நீரைக்கட்டும். மேக ரோகத்தைப் போக்கும். பட்டையை இடித்து நீர் விட்டு கொதிக்க வைத்து கஷாயம் செய்து சாப்பிட வேண்டும். அத்தி மரப்பட்டையுடன் அசோகு மரம், மாமரப் பட்டைகளைச் சேர்த்து கஷாயமிட்டு கொடுத்துவர தீரா பெரும்பாடு, வெள்ளை ஒழுக்கு, தேக உட்சூடு யாவும் தீர்ந்து போகும். இந்த முறையை மாமரக் கட்டுரையில் குறிப்பிட்டது வாசக அன்பர்களுக்கு நினைவிருக்க லாம். அத்திப் பட்டை கஷாயத்தால் நாற்றமடிக்கும் புண், புரை களைக் கழுவி விடலாம்.

அத்தி மர வேரிலிருந்து மது இறக்குவார்கள். இது எலும்பு பற்றிய மேக ரோகம், அதிக வறட்சி, காந்தல், தேக உட்சூடு, எரிச்சல், அதிமூத்திரம், அதி தாகம் போன்ற நோய்களைத் தீர்க்கும் சக்தி கொண்டது. ஆனால் இந்த மதுவை ரத்னபுருஷ் மூலிகைப் போல், சூரியோதயத்தில் உட்கொள்ளுவதால் தான் நல்ல பயன் தரும் என்பது சித்தர் பாடலால் அறியக் கிடைக்கின்றன.

மேகரோகம் உள்ளே அடங்கினல் அத்திப்பால், அத்திமது, அத்திப் பட்டையையும், மேக ரோகத்தால் சர்மத்தின் மேலே தோன்றிய நோய்களுக்கு "செருப்படை" யும் ஏற்ற மூலிகை என்பதை நினைவில் கொள்ளவேண்டும்.



# செருப்படை

காலுக்கு காப்பு செருப்பு, தலைக்கு காப்பு தலைப்பாகை, உடல் காப்புக்கு ஆடை, இவை நமது நாட்டின் பண்டைய பழக்க வழக்கங்களின் புராதன சின்னங்கள். தற்காலம் அந்நிய நாட்டின் (அ) நாகரீக வசப்பட்ட மக்கள் கோட்டு, பாண்ட், சூட், ஹாட் என்று நமது பண்பாட்டையே மறந்துவிட்டார்கள். நம் நாட்டவர் இப்படி ஒருவேளை மாறிவிடுவார்கள் என்று சித்தர்களுக்கு தெரிந்து இருக்கக்கூடும். முக்காலமும் உணர்ந்த ஞானிகள் அல்லவா அவர்கள். எனவே தான் அவர்கள் செருப்பு, தலைப்பாகை, ஆடை இவைகளின் பெயர்களை மூலிகைகளுக்கு சூட்டிவைத்து போயினர்.

செருப்படி, ஆடையொட்டி, தலைப்பாகை, தலைச்சுருளி என்ற பெயர்கள் மூலிகைகளுக்கும் உண்டு. இப்படி அந்த மூலிகைகளை அழைக்கும் போது பழங்கால பழக்க வழக்கங்கள் நினைவுக்கு வந்து மீண்டும் ஒரு சிலராவது பின்பற்றுவார்கள் என்ற சிந்தனையில் தான் இம்மாதிரிப் பெயர்கள் வைத்திருக்கக் கூடும் என்றே நினைக்க வேண்டியுள்ளது. செருப்படி என்று இந்த மூலிகைக்கு எந்தக் காலத்தில் பெயரிட்டார்களோ யாரும் வரையறுத்துக் கூற இயலாது. ஆனால் நம் நாட்டில் செருப்பு அணியும் பழக்கம் ஆதி காலத்திலிருந்தே வந்துள்ளது என்பதை மட்டும் இதனால் அறியலாம். ஆற்காட்டு செருப்பு என்றால் மிக பிரசித்தமானது என்பர். "அடி செருப்பாலே! ஆற்காட்டு ஜோட்டாலே" என்ற பழமொழியும் சில இடங்களில் வழங்கி வருவது அனைவருக்கும் தெரிந்ததே.

இத்தகைய செருப்படியை நாம் தெரிந்து வைத்துக்கொள்வதும் மிக அவசியமாகும். இந்த செருப்படி மூலிகை இருக்கிறதே! காளான் போன்று மிக விசித்திரமான பிறவி. காளான் வெய்யிலே இல்லாமல் பூமி உஷ்ணம் குளிர்ந்து போய் மழை பனி காலங்களில் ஆங்காங்கு வெள்ளை நிறமான குடை குளம்பும். செருப்படைக்கு



மழை, பனி குளிர் காலங்கள் ஆகாது. மழையே இல்லாமல் பூமி வரண்டு போய் வெய்யில் தலை மண்டையைப் பிளக்கும்போது நீர் வரண்டுபோன ஆறு, ஏரி, குளம் குட்டைகளில், பூமி வெடித்து போய் பிளவுபட்ட இடங்களில் சாம்பல் கலந்த வெள்ளை நிறமான செடிகள் முளைத்து படைபடையாகத் தரையுடன் படர்ந்துநிற்கும். 'செருப்பு' அடி எவ்வளவு அகலம் இருக்குமோ அதன் அளவு வளர்ந்து இருப்பதால், இதற்கு செருப்படி என்ற பெயரே தொன்று தொட்டு வழங்கி வருகிறது. சில இடங்களில் இதனை செருப்படை என்றும் சொல்லுவார்கள். இந்த செருப்படை இலைகள் காம்புக் கொடியை மறைத்துக் கொண்டு, ஒரு புதுக்காசு அளவுக்கு அடர்த்தியாக இருக்கும். செப்பு நெருஞ்சில் பூ, காய்கள் போல இதன் பூவும், காயும் காணும். இந்த செருப்படையைக் காண விரும்புவோர் பங்குனி முதல் ஆனி வரையில் நீர் நிலை வரண்ட பிரதேசங்களில் காணலாம். இதில் பெருஞ் செருப்படை, சிறு செருப்படை என இருவகை உண்டு.

## பொதுக் குணம்

செருப்படைக்கு நுண் கிருமிகளைக் கொல்லும் சக்தியும், உஷ்ணத்தை உண்டாக்கும் குணமும் உண்டு. வாதம், வாதசூலை வாதகுன்மம், வாத வாயு ஆகியவைகளையும் மேக ரோகத்தால் விளையும் சர்மரோகம், கிரந்திப்புண்படைகள், வெள்ளை, வெட்டை சூடு ஆகிய நோய்க் குணங்களை நீக்கும். அன்றியும் இது வாத மூலிகை என்று வாகட நூல்கள் கூறுகின்றது. செம்பை களிம்பு நீக்கும் உலோகங்களை செந்தூரமாக்கும் செந்தூர மூலிகைகளில் செருப்படையும் ஒன்று.

## உபயோக முறைகள்

செருப்படையின் இலைகளை எடுத்து, கல், மண் நீக்கி, நீரில் அலசி எடுத்து, இடித்துபிழிந்த ஒரு அவுன்ஸ் வெள்ளை வெங்காயச் சாறு ஒரு அவுன்ஸ் இரண்டையும் ஒன்றாகக் கலந்து சிறிது பனங் கல்கண்டும் கூட்டி காலை, மாலை இரண்டு வேளையாக குடித்துவர, தீராத மேக ரோகம், வெள்ளை விழுதல், வாத ரோகங்கள் யாவும் போகும். அத்துடன் தன் வினையால் தேடிக்கொண்ட மேக ரோக கிரந்தி சொறிகள் தேகமெங்கும் செருப்படை போலவே படை படையாக வெண்ணிறத்தோடு தோன்றி, அரிப்பும், தினவும் எடுத்து சொறிந்து கொள்ளுதல் வெள்ளை நிறமாக உடம்பில் பூத்து சொறிந்தால் அதிலிருந்து மாவுபோல் கொட்டுதல், போன்ற கிரந்தி நோய்கள் யாவும் தீரும்.



இந்த மூலிகை கிடைக்காத காலத்தில்கூட, இதை கிடைக்கும் போது சேகரித்து இடித்து தூள் செய்து வைத்துக்கொண்டு இரண்டுசிட்டிகை எடுத்து வாயிலிட்டு பசும்மோர் குடித்துவரலாம் இம்முறைப்படி செய்து வரும்போது, உப்பு, புளி, காரம் அதிகமாகச் சேர்க்காமல் இச்சா பத்தியமாக இருப்பது நல்லது.

செருப்படை மேகரோக எண்ணை காய்ச்சும் முறைகளில் பிரதான உபசரக்காகச் சேர்க்கப்படுகிறது என்பதை 'புளியரசன்' என்ற கட்டுரையில் குறிப்பிட்டது வாசகர்களுக்கு நினைவிருக்கலாம். கீழாநெல்லி போல் இந்த மூலிகையும் மற்றவைகளுடன் கூட்டு சேரும்போது வீரியம் மிகுந்து நற்பயன் தரவல்லது. சுருங்கக் கூறின் புத்திக்கெட்டுப் போய் பல ஸ்திரீகளுடன் நட்பு கொண்டு மேக ரோகத்தை சம்பாதித்துக் கொண்டவர்களுக்கு இந்த செருப்படை அவசியம் வேண்டும். புத்திக்கு தெளிவை உண்டாக்கும் தாதுவளை போல செருப்படையும் நல்ல புத்தி வளரச் செய்யும்.

செருப்படை, பூவரசன் இலை சமமாகக் கொண்டு வந்து வெய்யிலில் ஒன்றாகக் காயவைத்து இடித்து, தூள் செய்து அத்துடன் தேங்காய் எண்ணை தடவி, உடம்பின்மேல் காணும் நாள் பட்ட கிரந்தி, சொறிகளுக்குத் தடவிவர உபசாந்தியாக குணமாகும்.

சித்தர்களில் சிறப்பு மிக்கவரும், முருகனின் அருள்பெற்றவருமான அருணகிரி அடிகள். ரசவாதம், செய்யும் மூலிகைகள் சிலவற்றைப் பாடியுள்ளார். அதில் செருப்படையும் ஒன்று.

"அடல் புனைந்த வேலும் மயிலும் என்றும் வாழி. அரிய தொன்று கூற அருகில் இருந்து கேண்மின், அளவில் பல காய மோடாடி அண்டர் அறிய விளையாடலாம் மூலிகை ஒன்றில்" என்று பாடியுள்ளார். இப்பாடல் சித்து வகுப்பு திருப்புகழில் உள்ளது. இதில் நூற்றுக்கணக்கில் மூலிகைகளை குறிப்பிடுகிறார்.

'அமுக்கினை' யெருக்கிலை, முருக்கிதழ், செருப்படி யகத்தித மரத்தை' இப்படி ரச வாதம் செய்து ஏழ் நிலை மாடி கட்டிக்கொள், தங்கத்தால் ஆபரணம் செய்துகொள். வந்தவர் போனவர்களுக் கெல்லாம் விதம் விதமான விருந்து படைத்து சந்தோஷமாக மகிழ்ந்து இரு என்றெல்லாம் அருணகிரிநாதர் சொல்லுகின்றார். இப்படி வெறெந்த சித்தரும் வெளிப்படையாகச் சொன்னதில்லை.

எனவே செருப்டையும் ஒரு ரசவாத மூலிகையாம்! பச்சை களானில் பட்ட இரும்பு பொன்னாகும் என்று முன்பு குறிப்பிட்டது

போல. இந்தச் செருப்படையில் தேய்த்தெடுத்த செம்புகளிம்பு நீங்கும் என்பதும் சித்தர் நூல்களின் சாராம்சம் ஆகும். அதனுல் தான் "அடிசெருப்பாலே ஆறுகாட்டு ஜோட்டாலே" என்கிருர்கள். இதன் பொருள் காலுக்கு அணியும் செருப்பல்ல! செருப்படை மூலிகையால் ஆறு மாற்றுத் தங்கம் ஆகுமாம்! இது தான் கருத்து. ஆனுலும் வைத்தியக் கருத்தைக் கொண்டு நோக்கின், அறிவு கெட்டுப் பின்வந்த நோய்களையும் இந்தச் செருப்பால்தான் அடிக்க வேண்டும் என்றும் பொருள் கொள்ளலாம்.

செருப்படையின் வேர், மிளகு, சுக்கு இவைகளை அளவுடன் கொடுத்துவர வாத கபம், குன்மம், செரியா மந்தம், வாத சூலை, வாத வாய்வு, குடல் வாதம் யாவும் சூரியனைக் கண்ட பனிபோல் விலகிவிடும்.

"சேர்ந்த மேகமெல்லா மேகும் செருப்படியால்,
ஆர்த்தெழுந்த வாத குன்மம் சூலையறும் பொல்லாக்
கிரந்திகளும் இசிவு மந்த மாறி விடும்
அருந்தியிதன் அருங்குணத்தைக் காண்"

— கும்பமுனி

அடிக்கடி சில பெரியோர்கள், "அவன் செய்த தவறுக்கு செருப்படிதான் வேண்டும். அப்போதுதான் புத்திவரும்" என்பார்கள். எந்த செருப்படி! காலில் அணிகிருேமே அதுவா, அல்லவே அல்ல. மூலிகை செருப்படி வேணும் என்று சிலேடையாக சொல்லுவார்கள்.

வாசகர்களே! காளானைப் போல செருப்படையும் நினைவில் வையுங்கள்! ஆபத்துக்கு உதவும்.






இறைவன் சிருஷ்டியில் எண்ணற்ற செடி கொடி (தாவர) மூலிகை இனங்கள் தன்னிச்சையாகவே வளர்ந்து வருகின்றன. நடக்கும் போது நமது காலடிபட்டு சிதைந்து போகும் மூலிகைகளின் குணுதிசயங்களை தெரிந்துகொள்ளாமல் அலட்சியம் செய்து விடுகிருேம்! ஆனுல் அவை நிகழ்த்தும் அற்புத செயல்களை அறிந்த பின்பு அதற்கு தலைவணங்குகிருேம். தும்பை மலர் மனிதன் கால் பாதம் போல காணப்படுகிறது. நாம் இறைவன் திருவடிகளில் உறைகிருன் என்பதை தும்பை மலர் நினைவூட்டுகிறது. செருப்படி என்ற மூலிகையும் மனித சமுதாயத்தின் சில அறிவுரைகளை வழங்குகின்றது. இது போல இந்த புள்ளடியும் ஒரு மூலிகை இனமே!

புள் என்ருல் பறவை. புள்ளினங்களின் காலடி போன்ற சில மூலிகை வளர்கின்றன. இதற்கு புள்ளடி என்று பெயர். பறவைகளின் சிறிய கால்களைப் போலவே இலைகள் மூன்று பிளவுகளாகி எதிரே ஒற்றை இலை விட்டு வளரும். இந்த புள்ளடி ஏறக்குறைய நீர்ஆரைக் கீரையைப் போல அந்த உயரத்திற்கு வளரும். நீர் ஆரை நீர்நிலை நிறைந்த இடங்களில் வளரும். ஆனுல் இந்த புள்ளடி பசுமை நிறைந்த சமவெளிப் பிரதேசங்களிலும், வளம் கொழிக்கும் ஆறு பாயும் ஈரப்பசை நிறைந்த இடங்களில் காணக் கூடியதும் தன்னிச்சையாக இனப்பெருக்கத்தை செய்துக் கொள்ளும் மூலிகை இனம் ஆகும்.

இம் மூலிகை தற்காலம் பொதுவாக அனைவரும் தெரிந்து வைத்திருக்க முடியாது. என்ருலும் பல பரம்பரை வைத்தியர் குடும்பங்களில் இது இன்னும் ரகசியமாக கையாளப்படுகிறது.

## பொதுக் குணம்

புள்ளடியில் செருப்படி போன்ற சிறு புள்ளடி, புள்ளடி என இரு வகையுண்டு. சிறு புள்ளடிக்கு புள்ளடியைக் காட்டிலும் வீரியமும் சக்தியும் அதிகம். பால் சுரப்பிக்கச் செய்வதில் உளுந்து






அம்மாம் பச்சரிசி போன்றும், நீர்கட்டை உடைப்பதிலும் சிறுநீரை பெருக்குவதில் நெருஞ்சில், கீழாநெல்லியைப் போன்றும் வேலை செய்யும். அன்றியும் சிறுவர்களுக்கு மாந்த கண சுரங்களைப் போக்குவதில் சிறு புள்ளடி நிகரற்றது. ஆனால் புள்ளடிக்கு இத்தகைய சிறப்பு சக்தி இல்லாவிட்டாலும் உடலைத் தேற்றவும் உரம்பெறச் செய்வதிலும், அதோடு உடல் உஷ்ணத்தை தணித்து உண்ட ஆகாரத்தை செரிக்கச் செய்யும் குணத்தையும் உடையதாகிறது.

## புள்ளடி உபயோகம்

புள்ளடியை ஒரு கைப்பிடி எடுத்து கஷாயமிட்டு குடித்து வர பித்தத்தால் வந்த சகல சுரங்களும் போகும். உடல் பலவீன பட்டவர்களும், வியாதியில் அடிபட்டு பலமிழந்துபோன நோயாளிகளுக்கு குணமான பிறகு உடல் சக்தி உண்டாக புள்ளடி இலையை அரைத்து 1 புன்னைக்காய் அளவு தண்ணீரில் கலக்கி சிறிதளவு கல்கண்டும், பாதாமும், கசகசாவும் அரைத்து கலந்து காலை வேளைகளில் மட்டும் குடித்துவருவது உடல் சக்தியைப் பெருக்கும். தசமூலக் கஷாயம் என்பது ஓர் ஆயுர்வேத முறை பத்து மூலிகைகளின் வேர் சேர்த்து கஷாயமிட்டு கொடுப்பது. இந்த தச மூலத்தில் புள்ளடியும் ஒன்று. நமது நாட்டு மருத்துவர்கள் புள்ளடியை இன்னும் அநேக குடிநீர் முறைகளில் சேர்த்து வருகிறார்கள்.

## சிறு புள்ளடி உபயோகம்

கண மாந்தை, உட்சூடு, சதாகாலமும் நெருப்பனல் சூடு போல் காய்ந்துக் கொண்டிருக்கும் சிறு பிள்ளைகளுக்கும், குழந்தைகளுக்கும் ஏற்றது. சிறு புள்ளடி இலையை உளுத்தம்பருப்புடன் சேர்த்து அரைத்து, அரிசி மாவுடன் கலந்து தோசை போன்ற பலகாரங்களாகச் செய்து குழந்தைகளுக்கு சுவை உணவாகக் கொடுப்பது நமது நாட்டின் பழங்கால வழக்கம். தற்காலம் உண்டோ இல்லையோ! இதனால் நிற்காத பேதியும் கட்டிபோகும். கணச் சூட்டால் இளைத்து போகும் சிறுவர்களுக்கு உடல் பருக்கும் சூடு தணியும், பலத்தையும் தரும். புத்தி கெட்டவர்களுக்கு செருப்படி ஏற்ற மூலிகை போல், சிறு பிள்ளைகளுக்கு சிறு புள்ளடி தகுந்த மூலிகை! அது மட்டுமல்ல, தாய்ப்பால் திடீரென வரண்டு போகும் மாதர்களுக்கு மீண்டும் சுரப்பிக்க மேலே கண்டமுறை கைகண்டது.

சிறு புள்ளடி இலையை கஷாயமிட்டு குடிக்க பித்தத்தால் வந்த பிணிகள் விலகும். சுரங்களைக் கண்டிப்பதில் பற்பாடகத்தை ஒத்தது. பச்சையாக அரைத்து கட்டிவர கட்டிகள் உடையும் ரணம் ஆறும்.

## வேர்

இதன் வேரை உலர்த்தி வைத்துக் கொண்டு வேண்டும் போது இரண்டு சிட்டிகை எடுத்து வெந்நீரில் கலந்து சாப்பிட உடலுக்கு பலத்தையும் தந்து நீர்கட்டை உடைத்து சிறுநீரை வெளியேற்றவும் செய்யும். நல்ல ஜீரண சக்தியும் உண்டாகி பசியைத் தூண்டும். சுமார் முப்பது ஆண்டுகளுக்கு முன்பு இம்முறைகள் சர்வ சாதாரணமாக கையாண்டு வந்தவைகள் தான்.

சித்த மருத்துவ முறையில் அன்னபேதி செந்தூரம் என்பது ஒன்று. இது சகல ஜீரணங்களுக்கும் சிறுவர் முதல் பெரியோர் வரையில் பயமின்றி கொடுப்பதாகும். இந்த அன்னபேதி செந்தூரத்தை பல மூலிகைகளில் அரைத்து புடமிட்டு எடுத்தாலும் இறுதியாக சிறு புள்ளடி இலையால் புடமிட்டு செய்து வைத்துக் கொண்டு ரகசியமாக கையாளுவார்கள். இன்னும் சித்தவைத்தியர்களைக் கேட்டால் பகிரங்கமாக சொல்லமாட்டார்கள்! சில பரம்பரையில் இந்த சிறு புள்ளடி இலையால் தைலம் செய்து வைத்துக் கொண்டு எலும்பு முறிவு, கை, கால் மூட்டு விலகல் போன்ற எலும்பு முறிவு வைத்தியமும் செய்து வருகின்றனர். எனவே எலும்பு முறிவுகளுக்கும் சிறு புள்ளடியை பயன்படுத்துவது நாட்டு மருத்துவ வழக்கில் ஒன்று. இனியாவது ரகசியம் ஒழிந்து பகிரங்கமாக மக்களுக்கு உதவட்டும் இத்த புள்ளடி.

"மாந்தகணம் பேராபம் வன் பித்தம் நீங்கிவிடும்
ஓய்ந்த மூலப்பாலும் ஒழுகுங்காண் — வந்தே
சிறுபிள்ளை நோயொழித்ததே மலர்ப் பூங்கோதாய்
சிறுபுள்ளடியை நித்தஞ்சேர்

— கும்பமுனி






விளாமரத்தைப் பார்க்காவிட்டாலும் வாசக அன்பர்கள் விளாம்பழத்தை பார்த்திருக்கக்கூடும். இந்த விளா மரமும் நமது நாட்டிற்குரியதே. இதில் மூன்று விதமுண்டு. ஒன்று நில விளா இது தரையோடு படர்ந்து வளரும் செடி இனத்தைச் சேர்ந்தது. குட்டி விளா என்றும் சொல்லுவார்கள். சித்தி விளா இது சிறுமர வகுப்பு. இதன் காய்கள் புன்னைக்காய் அளவு இருக்கும். எங்கும் காணக் கிடைக்காத மர வகுப்பு. கருநெல்லி மரத்தைப் போன்றே அரிதாகக் காணும்! வடலூர் ராமலிங்க சுவாமிகள் இருந்த இடத்தில் சித்தி விளா மரம் இருந்ததாகக் கூறுவர். அந்த இடத்தில் தான் சித்தி விளா அகம் இன்று இருக்கிறது.

இங்கு கூறப்படுவது பெரு விளா மரம். இது எங்கும் காணக் கூடியது. விளாம்பழத்திற்காக இதனை தோப்பு துரவுகளில் வைத்துப் பயிராக்கி விடுகிறார்கள். விளா மரம் மருத்துவப் பயன் மிகுந்தது. இதன் இலை, காய், பழம், பழத்தின் ஓடு, மரப்பட்டை பிசின் இவைகள் நாட்டு மருத்துவத்தில் முன் காலத்தில் பயன் பட்டு வந்துள்ளது என்பதைப் பழம்பெரும் வாகட நூல்களில் காணக் கிடைக்கின்றன.

## இலையும் கொழுந்தும்

விளா மரத்தின் இலை, கருவேப்பிலை போன்று மணமூட்டும் குணமுடையது. அன்றியும் உடலில் உள்ள வெப்பத்தைக் குறைத்து சுரத்தையும், வலியையும் குறைக்கும். விளாங்காய் துவர்ப்பு சக்தியுடையதாகையால் உஷ்ணத்தால் வந்த பேதி, சீத பேதிகளைப் போக்கும். பழம் பித்த சாந்தியைக் கொடுக்கும் சூட்டைத்தணித்து குளிர்ச்சியைத் தரும்.

விளா இலைக் கொழுந்தை புன்னைக்காய் அளவு அரைத்துக் காய்ச்சிய பசும் பாலுடன் கலந்து சிறிது கற்கண்டும் கூட்டிச் சாப்பிட நல்ல பசி எடுக்கும். பித்தத்தால் வந்த கப இருமல், கப காசம், பித்த கணச்சூடு, இளைப்பு ஆகிய பித்தசம்பந்தமான நோய்கள் விலகும்.

விளா இலையைக் கைப்பிடியளவு எடுத்து ஒரு குவளை நீரில் கஷாயமிட்டுக் குடித்துவர பித்தசம்மந்தமான சுரங்கள், இருமல் தேக வரட்சி தணியும். விளா இலைக் கொழுந்தை அரைத்து தேகத்தின்மேல் காணும் பித்த தழும்பு, வெய்யில் காலத்தில் காணும் வேர்க்குரு கொப்புளங்களுக்குத் தடவி வரலாம்.

குட்டி விளா என்னும் நில விளா இலையை அரைத்து குழந்தைகளுக்கு காணும் கண மாந்தை தோஷம், பூதகண பைசாச தோஷங்களுக்கும் உடம்பின்மேலே தலைமுதல் உள்ளங்கால் வரையில் தடவி அரைமணி கழித்து வெந்நீரில் ஸ்நானம் செய்விப்பது நமது கிராமிய பழக்கங்களில் ஒன்று.

விளாங்காய் உள் சதையை மட்டும் எடுத்து சிறிது வேக வைத்துக் கொடுக்க பேதி, சீத பேதிகள் நிற்கும். இந்தக் காய் துவையல், பச்சடி போன்ற உணவு பதார்த்தமாகச் செய்வதும் நமது நாட்டு வழகமாகும்.

## பழம்

எல்லாவித கனிகளை காட்டிலும் விளாங்கனி உண்பதற்கேற்றது. உடலுக்குக் கெடுதலைச் செய்யாது. அதுமட்டுமல்ல; உடலுக்கு வலுவையும் ஆயுள் பெருக்கத்தையும், சித்த விருத்தியையும் உண்டாக்கும். புத்திக்கு தெளிவைத் தரும். ஆகையால் தான் " என்ருகிலும் கனிமேல் இச்சை வைத்துத் தின்பது என்ருல் விளாங்கனியைத் தின் " என்று அகத்தியரே பாடியுள்ளார்.

இக்கனிமேல் " இச்சை வைக்கின் போகம் என்ற கனிமேல் இச்சை போகாது " என்பார்கள். விளாங்கனியால் கல்லீரல், மண்ணீரல்கள் கோளாறு நீங்கும் வாய்நாற்றம், வாயில் நீர் ஊறுதல், தொண்டையில்வரும் புண்கள், பல் ஈறுகளில் ரணம், இவைகள் ஆறும். பித்தத்தால் வந்த பிணிகளான நுரையீரல், குடல் கோளாறு, பாண்டு காமாலை முதலிய நோய்களுக்கும் ஏற்றது. நாட்டு வைத்தியர்கள் இப்பழத்தை லேகியங்களில் கலந்து கொடுப்பதும் உண்டு.

விளாம்பழ மணப்பாகு என்பது பித்த ரோகங்களுக்கு எல்லாம் சிறந்ததாகும். விளா மரப்பட்டையை ஒரு ரூபாய் எடை எடுத்து இடித்து ஒரு குவளை நீரில் கஷாயமிட்டு தினம் இரண்டு வேளை குடிக்க காபி, டீ, புகையிலை விடத்தால் வந்த பித்தவாந்தி, குமட்டல் ஆகியவை போகும்.



## விட்டதடி உன்னுசை விளாம்பழம் ஓட்டோடு

இது நம் நாட்டு பழமொழி. இதன் பொருள் என்னவென்று தெரியுமா? தாசி ஒருத்தி ஆசைநாயகனுக்கு இடு மருந்து வைத்து மயக்கி விட்டாள்! பிரபுவான ஆசைநாயகன் மருந்தீடு செய்கையால் அவளைப் பிரியமுடியாமல் தவித்தார். அவர் ஒரு சமயம் சித்தர் ஒருவரைச் சந்தித்தார். அவர் இந்த பிரபுவின் நிலையை உணர்ந்து கொண்டு, "அப்பா நீ அந்த தாசியிடமே சொல்லி, எனக்கு விளாம்பழத்தில் மிகுந்த ஆசை; ஆகவே தினமும் ஒரு விளாம்பழத்தைக் கொடு! என்று கேட்டு ஓட்டுடன் பழத்தை உண்டுவா. உனது குறை யாவும் தீரும்" என்று சொல்லிப் போய்விட்டார்.

அது போலவே ஆசைநாயகியிடம் சொல்லி தினமும் ஒரு பழத்தை ஓட்டுடன் சாப்பிட்டு வந்தார். சில நாட்களுக்கெல்லாம் ஆசை நாயகியின் சொல்லைத் தட்டி நடக்க ஆரம்பித்தார். அந்த தாசி, "என்ன வர வர என்மேல் உங்களுக்கு ஆசை அலுத்து விட்டதா?" என்று கவலையுடன் கேட்டாள். அதற்கு அந்த பிரபு சொன்னாராம், "விட்டதடி உன்னுசை விளாம்பழ ஓட்டோடு" என்று சொல்லி அவ்விடத்தை விட்டு அகன்றாராம்.

விளாம்பழத்தை தினம் ஒரு பழம் ஓட்டுடன் சாப்பிட்டுவர இடு மருந்தின் தோடமெல்லாம் முறிந்து விடும் என்பது வாகட நூல்களின் சாராம்சம். வேண்டுமானால் இடுமருந்து தோஷத்தால் அவதியுறும் அன்பர்கள் செய்து நற்பயன் அடையலாம். ஆனால் ஒரு பழத்தை ஓட்டுடன் சிறிதும் சேதப்படுத்தாமல் சாப்பிடுவது அவசியமாகும்.

### பி சி ன்

விளாமரத்தின் 'பிசின்' மேக ரோக எரிச்சல்கள், மேக வெள்ளை ஒழுக்கு, மூத்திர சிறுநீர்தாரை எரிச்சல்கள் யாவும் நீங்கி சூடு தணிய வைக்கும். அதாவது கீழாநெல்லி போலவே ஸ்திரீ ரோகங்களில் உள்ளுறுப்புக்கள் ரணம், அதிசாரபேதி பெண்களுக்கு காணும் பெரும்பாட்டு உதிரப்போக்கு ஆகியவைகளைப் போக்கும்.

### முறை விபரம்

விளாம் பிசினைத் தேவையான அளவு எடுத்து உலர்த்தி தூள் செய்து ஒரு புட்டியில் சேகரித்து வைத்துக்கொண்டு இரண்டு சிட்டிகை அளவு பசும் வெண்ணையுடன் கலந்து காலை மாலை



சாப்பிட்டு உப்பு, புளி, காரம் நீக்கி இருக்க இரண்டு முதல் நான்கு நாட்களில் மேல் குறிப்பிட்ட வியாதிகள் தீரும். இந்த தூளை தேனில் குழைத்து கொடுக்க சீணுக்கிருமல், வரட்டிருமல், ஈளை, கபம், நெஞ்சு எரிவு, பித்த சுரம் ஆகியவைகள் போகும். சித்த வைத்தியர்கள் விளாம்பிசினில் பல சரக்குகளை சேர்த்து மாத்திரைகளாக செய்து குழந்தைகள் முதல் பெரியோர் வரை பல பிணிகளுக்கு கொடுத்து நோயைக் குணப்படுத்துவார்கள்.

"நல்ல விளாம்பிசினை நற்பாகம் செய்தருந்த
தொல்லை தரும் பல்பிணிகள் தொல்லையுமன்றே —
மெல்லியரால்
வந்த வெள்ளை தன்னுடனே மாதர் பெரும்பாடும்
உந்து நீர்ப் போக்கும் விளம்பு"

— கும்பமுனி

இதன் பொருள் :— மாதர்களின் இச்சையால் வந்த பிணியை விளாம்பிசின் போக்கிவிடும் என்பதாம்.



# பிரம்மதண்டு

நமது நாட்டின் மூலிகைகளுக்கு பெரும்பாலும் பெயர்கள் காரணப்பெயராகவே இருக்கிறது என்பது இப்பகுதியை தொடரும் அன்பர்களுக்கு எடுத்துச் சொல்ல வேண்டிய அவசியமில்லை. தமிழ்ச் சித்தர்களில் சிலர் முருங்கைக்கு பிரம்ம விருக்ஷம், புகையிலைக்கு பிரம்ம பத்ரம் என்றெல்லாம் பெயரிட்டழைத்து சிருஷ்டி கர்த்தாவாகிய பிரம்மாவுக்கு சிறப்பு செய்துள்ளார்கள். மரம், செடி இனங்களில் மட்டும் இருந்தால் போதாது என்று என பூண்டு இனத்திலும் பிரம்மாவின் நாமத்தை புகுத்தி விட்டனர் போலும்! இந்த பிரம்மதண்டு மூலிகையை குடியோட்டுப் பூண்டு என்று தமிழ் மருத்துவ அகராதிகள் குறிப்பிடுகின்றன. குசும்பை, இருமல் என்றும் வேறு பெயர் உண்டு. இதை சமஸ்கிருத மொழிகள் பிரமதண்டி என்றும்; கன்னடத்திலே அரசினுஉம்மாட்டா என்றும் தெலுங்கு தேசங்களில் பசுமசெட்டு, மலையாளத்தில் ஊமதண்டம் என்பதாகவும் சொல்லுவார்கள். தமிழ் நாட்டில் அதன் வழக்குப் பெயர் பிரம்மதண்டு என்றே அழைப்பார்கள். ஆக அத்தனையும் கருத்தில் கொண்டு ஆராயுமிடத்து இப் பூண்டு இனம் இந்தியாவிலே எங்கும் பரவி வளர்கிறது என்பதைத்தான் எடுத்துக் காட்டுகிறது.

பிரம்மதண்டு உன்மத்தன் மூலிகை இனத்தைச் சார்ந்தது. ஒரு அடி உயரம் முதல் மூன்றடி வரையில் வளரும். தாதுவளை கண்டங்கத்திரி போல நிறைய முள் அடர்ந்தது. இதன் பூக்கள் ஆவாரம் பூவைப் போல மஞ்சள் நிறமும் ஐந்து இதழ்களை உடையது. இலை பப்பாளி இலை வடிவமும் சாம்பல் கலந்த பசுமை நிறம். இலை முழுவதும் கூர்மையான முட்கள் நீண்டு நிறைந்து காணும். இலையின் மத்திய நரம்பு அருகில் நாமக்கோவைக்கு உள்ளது போலவே பால்நிறக் கோடுகள் காணும். அகோர பசியால் வாடும் ஆடு மாடுகள் கூட இதனை அணுகாது. இதன் காய்களும் முட்கள் நிறைந்தது. உருண்டை வடிவமான ஊமத்தன் காய்களில் முட்கள் அடர்ந்து எப்படி இருக்குமோ, அதே போல் ஆனல்



பிரம்ம தண்டு (அல்லது) குடியோட்டுப் பூண்டு.

பூக்குடலை போல, ஏறத்தாழ பாகற்காய் போல் நிறைய முட்களுடன் காணும். இந்த காய்கள் காய்ந்ததும் குவளைக்கு மேல்புறம் உள்ள வாய் திறந்து கொள்ளும். அதன் உள்ளே கருமையும் பளபளப்பு மான விதைகள் நிறைய இருக்கும். கடுகு என்ன அளவோ அதே அளவு எண்ணெய் பசை உடையதாக இருக்கும். ஒரு காயில் ஒன்று முதல் அரை அவுன்ஸ் எடை இருக்கக்கூடிய விதைகள் இருக்கும். அந்த மூலிகை வளர ஆரம்பித்தால் தூதுவளைப் போன்றே ஏக்கர் கணக்கில் பரவி தன் இனத்தைப் பெருக்கிக் கொள்ளும். இதை கிராமப் புறங்களில் பாழடைந்த வீட்டுச்சுவர், மதில் ஆகியவைகளின் மேல் முளைத்து இருப்பதை பலர் பார்த்து இருக்கலாமே! குடியை ஒட்டிச் சுவர்களின் பேரில் முளையும் இதற்கு குடியோட்டுப் பூண்டு என்று பெயரிட்டதில் வியப்பொன்று மில்லை அல்லவா ?

## உபயோகமும் குணமும்

பொதுவாக பிரம்மதண்டு வேர்கள், காய், பூ, விதை, இலை (சமூலம்) யாவும் மருத்துவப் பயன் உடையதே. தூதுவளையைப் போல முட்கள் நிறைந்ததாக இருக்கும். சமையலுக்கு பயன் படுத்த முடியாது. ஆனாலும் மருத்துவப் பயன் பலவித நோய் களுக்கும் பயன்படுத்தப் படுகிறது. முக்கியமானது இதிலிருந்து கசியும் பால் போன்ற மஞ்சள் நிறமான திரவம், சர்மரோகங்களுக்கு நற்பயன் அளிக்கும். இதன் சாறு மேக நோய்களையும், உடல் மனவேதனைகளையும் சாந்தப்படுத்தும். விதை ரணங்களை ஆற்றும் தூக்கத்தை உண்டாக்கும், பேதியை உண்டு செய்யும். விதையை இடித்து எண்ணெ தயாரித்து தீராத நாள்பட்ட நோய்களுக்கும் கொடுக்கலாம்.

## விஷக் கடிகளை நீக்கும்

பிரம்மதண்டு இலைகளை இடித்துக் கசக்கி தேள் கொட்டின இடத்தில் தேய்க்க விடம் இறங்கி வலி குறையும். இதுவும் சித்தர் களின் ரகசிய முறைகளில் ஒன்று. ஒரு அடி உயரம் வளர்ந்த செடிகளாக எடுத்து வேருடன் உரலில் போட்டு இடித்துச் சாறு பிழிந்து அரை முதல் ஒரு அவுன்ஸ் சாற்றை பாம்புகடி விஷங் களுக்கு உள்ளுக்கு கொடுத்து, இலையை கடிவாயில் வைத்துக் கட்ட, தும்பையைப் போலவே எல்லாவித பாம்பு கடிவிடங்களும் முறிந்து வாந்தியும், பேதியும் ஆகி கடியுண்டவருக்கு குணமாகும். தும்பைக் கட்டுரையில் குறிப்பிட்டபடி பத்தியம் அனுசரிக்க வேண்டும்.



கரப்பான், பேய்சொறி, நமட்டுச் சிரங்கு, உள்ளங்கை கால் பாகங்களில் வரும் பெருவிரணங்கள் ஆகியவைகளுக்கு இதன் இலையை அரைத்துக் கட்டிவர அவை ஆறிவரும்.

## பூ

பிரமதண்டு பூக்களை 10முதல் 20வரை எடுத்து தண்ணீரில் போட்டு, இரண்டு மணி நேரம் ஊறிய பின்பு தலைக்கு ஸ்நானம் செய்து வரவேண்டும். இப்படி ஒரு மண்டலம் செய்ய கண் ரோகங்கள் விலகிப் பார்வை தெரியும்.

## இலை

கிளைக் காம்புகளை ஒடிக்க மஞ்சள் நிறம் போன்ற பால்வரும். இதை நாள் தோறும் ஒரு துளி கண்ணில் விட்டுவர கண் வலி, சதை வளருதல், சிவத்தல், அரிப்பு, கூசுதல், குறுகிவிடல், நீர் வடிதல், எரிச்சல்களை நீக்குவதில் சிறப்புடையது. கண் ரோகங் களுக்கு பொன்னாங்கண்ணி, நாயுருவி, சோற்றுக் கற்றாழை, கரி சாலை ஆகிய மூலிகைகளுக்கு ஒப்பானது இதன் பால் என்பது மருத்துவ நூல்களின் சாராம்சமாகும்.

## இருமலுக்கு இருமல்

இருமால் என்ற பிரம்மதண்டு நுரையீரல் சம்மந்தப்பட்ட நோய்களுக்குத் தூதுவளைப் போல உதவக்கூடியதே.

இலையை உலர்த்தி இடித்துப் பொடி செய்து 4 அரிசிஎடைப் பிரமாணம் தேன் கலந்து காலை, மாலை சாப்பிட்டுவர க்ஷயரோக இருமல், நுரையீரல்கபம், சளி, இருமல் ஆகியவைகள் போம் (அ) இதன் கடுகு போன்ற விதையை உலர்த்தி பொடிசெய்து வைத்துக் கொண்டு 2 முதல் 3 அரிசி எடை தேன் அனுபானத்துடன் சாப்பிட்டு வரலாம். தற்கால ஊசி மாத்திரைகளுக்கு உள்ள பின் விளைவுகள் (ரியாக்ஷன்) கெடுதல் ஏற்படாது என்பதை திடமாக நம்பலாம். பிரம்மதண்டு விதையில் இருந்து எடுக்கும் எண்ணெ யை க்ஷயரோகங்களுக்கு 3 துளிமுதல் 6 துளிவரை சர்க்கரையுடன் கலந்து உள்ளுக்குக் கொடுத்து குணப்படுத்துவதும் நமது நாட்டின் பண்டைய பழக்கமாகும். விதையைப் பொடி செய்து நெருப்பி விட்டு வரும் புகையை வாய் திறந்து காட்ட பல் சொத்தை, பல் ரோகங்கள் குணமாவதாக கிராம வாக்கு.

## உலர்த்தி எரித்த சாம்பல்

பிரம்மதண்டு செடியை உலர்த்தி (இலை, பூ, காய் வேர் யாவும்) வேண்டிய அளவு சேர்த்து சுத்தமான தரையில் கொளுத்தி எரித்து ஆறியபின் சாம்பலகளை ஒன்று சேர்த்து எடுத்து மெல்லிய துணியில் வஸ்திரகாயம் செய்து எடுத்து பத்திரப் படுத்தவும்.

### உபயோகம்

1) இரண்டு முதல் நான்கு அரிசி எடை தேனில் கொடுத்து வர ஆஸ்துமா, இரைப்பு, இருமல், காசம், கபரோகம், நுரையீரல் ரோகம் தீரும்.

2) இந்த சாம்பல் கொண்டு நாள்தோறும் பல் துலக்கிவர தந்தரோக சம்மந்தமான சொத்தைப் பல், பல் ஆட்டம், பல்லில் ரத்தம்வடிதல், சீழ்வடிதல், கரைதல் போன்ற நோய்கள் விலகும்.

3) சாம்பல் 5 அரிசி எடை எடுத்து சுத்தமான பன்னீர் 2 அவுன்ஸ் எடுத்து அதில் தெளிவிறுத்து எல்லாவித கண் நோய் களுக்கும் இரண்டு துளி விட்டு வரலாம்.

4) சாம்பல் 10 அரிசி எடை பசு வெண்ணெயுடன் கலந்து காலையில் 40 நாள் சாப்பிட்டு இச்சாபத்திய முடனிருக்க குட்ட நோய்கள் குணமாகின்றன என்பதாக வழக்கு.

பிரம்மதண்டு வேரை (குப்பை மேனி வேரைப் போலவே) எடுத்து இடித்து 10 அரிசி எடை வெந்நீரில் உள்ளுக்குக் கொடுக்க மலத்தில் காணும் புழுக்கள் ஒழியும். வேரைப் பச்சை யாகவே எடுத்தரைத்துத் தேள் கொட்டின வாயில் வைத்துக்கட்ட குடைச்சல் வலி குறைந்து விடமிறங்கும்.

க்ஷயரோகத்தில் வரும் சுரங்கள் மேகரேகை, காங்கை, உட் சூடு ஆகியவை தணிய 1 பலம் எடுத்து இடித்து இரண்டு குவளை நீரில் போட்டுக் காய்ச்சி 1 குவளையாக்கி 1 முடக்கு வீதம் குடித்து வர சுரம் தணிந்து கபமும் நீங்கி சுகம் காணலாம்.

சிலர் 'நம் நாட்டின் மூலிகையில்' பிரம்மதண்டு சேர்த்தி அல்ல இது வெளிநாட்டிலிருந்து பிளகாயைப் போலவே வந்த தாகும் என்றும் கூறுவர். முதன் முதல் அமெரிக்க நாட்டில் மெக்ஸி கோ என்ற இடத்திலிருந்து வந்ததாகக் கூற்று. எனவேதான்



இதற்கு மெக்ஸிகன் பாப்பி, ஆர்ஜிமோன் மெக்ஸிகானு என்ற ஆங்கிலப்பெயர் வந்துள்ளது என்பதாக பறைச்சாற்றுவர். இக் கூற்றுக்கு தக்க ஆதாரம் உள்ளதாகத் தெரியவில்லை. மேலும் இப்பூண்டு மிகப் பழமையாகவே நமது நாட்டில் இருந்து வந்துள்ள தற்குப் போதிய சான்றுகள் உள்ளன.

இதன் வழக்குச் சொல் பிரம்மதண்டு 'பிரமை' என்றால் உன் மத்தம் என்று பொருள். பிரம்மதேவனுடைய ஒரு தலையை சிவ பெருமான் பிய்த்து எடுத்து விட்டபடியால் அவருக்கு பிரம்ம ஹத்தி தோஷம் ஏற்பட்டு பித்தனாகி (உன்மத்தம்) திரிந்தாராம். இந்த தோஷம் ஊமத்தன் செடியின் மலரை அணிந்தபடியால் சாந்த மானதாக வரலாறு 'மத்தமும் மதியமும் வைத்திடும் அறன்மகன்' என்பதாக அருணகிரியாரின் திருப்புகழ் கூறுகிறது. இந்த பிரம்ம தண்டுக்குப் பேய் ஊமத்தன் என்ற பரிபாஷையும் உண்டு.

இந்த மூலிகையும் அஷ்டகர்ம மூலிகையாம்! இந்த மூலிகை யைக் குறிப்பிட்ட கிழமைகளில் முறைப்படி காப்பு கட்டி உயிர் கொடுத்து எடுத்து மந்திரம் ஓதி உச்சாடனம் செய்து பேய்களை ஓட்டுவார்கள். இன்னும் பேய் ஓட்டும் வழக்கம் நமது நாட்டில் உள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

"மூலத்தில் பிரம்மதண்டி வடவேரை வாங்கிதானே
பூணவே குளிசமாடி புகழ்ச்சியாய் கட்டிவிட
தோன்றியதாமே
மாமே ஆய்ந்தனர் முன்னோர்தாம் அறிவினாலறிந்து
பாரே!"

வெள்ளெருக்கு முளைத்த இடத்திலே குடியிருக்க முடியாது போலவே, இந்த பிரம்மதண்டு முளைக்குமிடம் குடியை ஓட்டுமாம் என்பலேதான் இதற்கு குடியோட்டுப்பூண்டு என்று பெயர் வந்த தாம்! இப்பூண்டைக் கொண்டு நம்முடலில் குடிபுகுந்த நோய் களை ஓட்டலாமே.



# சீதேவி செங்கழுநீர்

[நெய்ச் சட்டி கீரை]

தென்னகத்திற்கே உரிய மூலிகை இனங்களில் இந்த சீதேவிச் செங்கழுநீர் என்ற இனமும் ஒன்று. மிகுந்த குளிர், மிகுந்த பனி, வெய்யில் போன்ற பிரதேசங்களில் இந்த மூலிகை காணுவது அரிது. எனினும் நமது நாட்டில் மழைக்காலங்களில் சதுப்பு நிலங்கள், வாய்க்கால், வயல்வெளி, ஈரப்பசை மிகுந்த சமவெளிப் பிரதேசம் ஆகிய இடங்களில் குப்பைமேனி போன்று தன்னிச்சையாகவே ஏராளமாக வளரும் செடி (பூண்டு) இனத்தை சார்ந்தது. இதன் இலையின் வடிவம் சற்றேறக்குறைய குப்பைமேனி போலவே காணும். ஆனால் இலை குப்பைமேனியைப் போல வெளிர் பச்சை நிறமாகவும் மெல்லியதாகவும் இல்லாமல் சற்று தடிப்பாகவும் நல்ல பசுமை நிறம் காணும். குப்பைமேனிச் செடியைக் காட்டிலும் இருமடங்கு உயரமாக வளரும். இலையின் மேல் பக்கம் நெய் தடவியது போல பசுமையான (இலை மேல்) பளபளப்புக் காணும். எனவே இந்த மூலிகைக்கு கிராமப் புறங்களில் நெய்ச்சட்டி கீரை என்று வழக்கமாக குறிப்பிடுவர்.

இந்த மூலிகையில் உணவு சத்து நிறைய இருப்பதால் கிராம மக்கள் பொதுவாக அன்றாட உணவில் சேர்த்துண்ணுவது வழக்கமாகும். நாட்டு வைத்தியர்களுக்கும் இது மருந்தாகப் பயன்படுகிறது. மேலும் மாந்திரீக விஷயங்களுக்கும் குப்பைமேனியை போலவே உபயோகமாகிறபடியால் மந்திரவாதிகளும் இதனைத் தேடி மூலங்களை குறிப்பிட்ட நாள், கிழமை பார்த்து உயிர் எழுத்துக்களை உச்சாடனம் செய்து எடுத்து மாந்திரீகத்திற்குப் பயன்படுத்துகிறார்கள்.

நெய்ச்சட்டி மக்களுக்கு உணவாகவும், மருத்துவர்களுக்கு மருந்தாகவும், மாந்திரீகர்களுக்கு வசியமாகவும் பயன்படும் பாக்கியத்தைப் பெற்ற சிறப்புடைய மூலிகை என்றால் மிகையாகாது. இத்தகைய முப்பேறும் பெற்ற மணி, மந்திர, ஔஷத மூலிகைகள் நமது நாட்டில் தான் உண்டு. மற்ற நாடுகளில் வளரும் மூலிகை; மூலிகை அல்ல! வெறும் பச்சிலை (பசுமையான இலைகள்) தான்.



"சீதேவி செங்கழுநீர்"

தெய்வீகத் தன்மை கிடையாது! அதனால் தான் அங்கு வாழும் மக்களுக்கு தார்மீக எண்ணமும், தன்னம்பிக்கையில் தடுமாற்றமும் உண்டாகிறது. எனவே தான் அடுத்தவரைக் கண்டு அவநம்பிக்கையும், அரக்க குணத்தால் ஆர்ப்பரிக்கிறார்கள். பச்சிலைகள் வாடுவது போல் அவர்களும் வாடி வதங்கிப் போவார்கள்! மூளை கெட்ட மனிதனை தற்கால நவீன மருத்துவம் மண்டையை உடைத்து ரிப்பேர் செய்கிறது. அது போல அரக்க குணம் படைத்த எதிரிகளையும் நம் நாட்டு மூலிகைகளில் கோழைகளாக்கி அடித்து ஆடு மாடு விரட்டுவது போல விரட்டி அடிக்கலாம்.

குப்பைமேனிக்கு 'பூனை வணங்கி' என்ற பெயர் உண்டு என்பதை முன்பே குறிப்பிட்டுள்ளது. பூனையை ஆக்ரஷணம் செய்து கோழையாக்கி விடுகிறது குப்பைமேனி! மதம் கொண்டு ஓடும் யானையைக் கூட வணங்கச் செய்து விடுகிறது ஓர் மூலிகை; ஆம், உண்மையே! பெரு நெருஞ்சில் மூலிகையை யானை மிதித்தவுடன் கோழையாகி விடுகிறது. இதனால் யானை வணங்கி என்ற பெயர் பெற்றது பெரு நெருஞ்சில். குப்பைமேனி போல் வளரும் இந்த சீதேவி செங்கழுநீர் ராஜவசியத்தை செய்துவிடும். அதாவது படை வெல்லும் மூலிகைகளைப் பற்றி அகஸ்திய முனிவர்—1200 என்ற நூலில் கூறுகிறார்.

"சீதேவிச் செங்கழுநீர் நிலவூமத்தை
செம்மையா யெருக்குடன் விஷ்ணுக்கிரந்தி
நன்மைபெறக் கருஞ்செம்பை வெள்ளைகுன்றி
நானிலத்தில் தகரையுடன் யுருவியாமே!"

சித்தர் நூல்களில் இதுபோல இன்னும் அநேக மூலிகைகள் காணக்கிடக்கின்றன! படைகளை சொறி பிடித்து நமைச்சலை உண்டாக்கி படைக்கலன்களை எடுக்கமுடியாதவாறு சதா சொறிந்து சொறிந்து ரணமாகி அழித்திடக்கூடிய சக்திவாய்ந்த மூலிகைகளும் நம் நாட்டில் உண்டு.

சீதேவிச் செங்கழுநீர் என்னும் இந்த நெய் சட்டியை முறைப்படி பூசித்து வலக் கையில் கட்ட ராஜவஸ்யத்தையும் வீரத்தையும் மனோதைரியத்தையும், துணிச்சலான காரியங்களில் உற்சாகமூட்டும் என்பதில் ஐயமில்லை. இத்தகைய சக்திவாய்ந்த மூலிகையை நாட்டுக்கும் நாட்டு மக்களுக்கும் அறிமுகப்படுத்துவது இன்றியமையாத கடமையாகும்.



## மருத்துவப் பயனும் குணமும்

இலை, பூ, வேர் யாவும் மிகுந்த மருத்துவப்பயன் தரக்கூடியது. உடலுக்கு வலுவைத்தரும். விடத்தை முறிக்கும். புழுக்களைக் கொல்லும். வியர்வை உண்டாக்கும் வீரிய விர்த்தி செய்து உற்சாகத்தையும் பலத்தையும் தரும்.

இதன் கீரையை பருப்புடன்சேர்த்து புளிவிடாமல் கடைந்து உணவுடன் நெய் சேர்த்துண்ண மேல்கண்ட குணங்களைத் தருவதுடன் கண்ணுக்கு ஒளியைத் தந்து புத்திக்கு தெளிவையும் உண்டாக்கும். உடலுக்கு அழகு தரும். பசியை உண்டாக்கும் மேகரோகத்தால் வந்த பிணிகள் வெள்ளை வெட்டை, உடல்சூடு, அழற்சி தாகம், பித்தசூடு இவைகளை தணிக்கும்.

## சர்ம நோய்கள் தீர

நீரடி முத்து எண்ணை 1 கிலோ எடுத்து இரும்புவாணலியில் விட்டு காய்ச்சி கொதிக்கும்போது நெய் சட்டிக் கீரையை ஐந்து பிடி அளவு எடுத்து கொஞ்சம் கொஞ்சமாக போட்டுவர சட சட என்ற சப்தத்துடன் பொரிந்து அடங்கும். வாய் விளங்கம் என்ற கடை சரக்கு 1 பலம் இடித்து தூள் செய்து அதனுடன் போட்டு சடசடப்பு அடங்கியதும் எடுத்து ஆறவைத்து ஒருகண்ணாடி புட்டியில் பத்திரப்படுத்தவும். மேக ரோகத்தாலோ அல்லது தேக உஷ்ணத்தாலோ வந்த எல்லாவித சொறி, சிரங்கு, தேமல், படை, வெடிப்பு, சர்மரணங்கள் எதுவாயினும் மேலே தடவி நான்குமணி கழித்து வழக்கம்போல் குளித்துவர சர்ம ரோகங்கள் யாவும் தீரும். எளிய முறை யாவரும் செய்து நற்பயனடையலாம்.

இளம் செடியை வேருடன் எடுத்து அலசி ஒரு குவளை நீர் விட்டுக்காய்ச்சி பாதியாக சுண்டவைத்த கஷாயத்தை தினமும் காலை மாலை குடித்துவர பித்த சுரங்கள் நீங்கி உணவு குறிப்பில் கண்ட நோய்களையும் போக்கும். நரம்புச் சிலந்திகளுக்கு இதன் இலையை அரைத்து கட்டிவர குணமாகிறதாக தெரிகிறது.

## கண் நோய்களுக்கு

நெய்ச்சட்டியின் பூ ஒற்றைக்கல் மூக்குத்திப் போல் நீல நிறமாகவும் கொத்துக் கொத்தாகவும் பூக்கும். இந்த பூக்களைச் சேகரித்து கசக்கி கண்களில் ஒரு சொட்டு விட கண் சிகப்பு கண் அருகல் வலியாவும் நீங்கும்.

## வீக்கங்களுக்கு

வேரை பச்சையாக ஒரு பிடி எடுத்து சிதைத்து நீருடன் சேர்த்து மண் சட்டியிலிட்டு காய்ச்சிய கஷாயத்தை 2 அவுன்ஸ் தினம் 2 வேளை குடித்துவர, வீக்கங்கள் கரைந்து போகும். இதன் வேரை சித்தர்முறை சர்வமேக ராஜாங்க எண்ணைகளில் சேர்க்கிற படியால் நாட்டுவைத்தியர்கள் காலாகாலத்தில் இதனை சேகரித்துப் பக்குவப்படுத்தி வைத்துக்கொண்டு நோய்களில் உபயோகப் படுத்துவார்கள்.

## ஸ்னான தைலம்

நெய்ச்சட்டி வேர், இலை, பூ யாவும் சேர்த்து இடித்து பிழிந்த சாறு 1 படிக்கு சமமாக நெல்லெண்ணை சேர்த்து நீர்சுண்டகாய்ச்சி வடித்துக்கொண்டு வாரம் இருமுறை ஸ்னானம் செய்துவர, தீராத உஷ்ணம் தணிந்து சர்மம் நெய்ச்சட்டி இலைபோல் பளபளப்பாக வும் கண் குளிர்ச்சியும் உண்டாக்கும். தேரையர் தைல வர்க்கத் தில் நெய்ச்சட்டி பிரதான அங்கம் வகிக்கிறது என்பதை சித்த வைத்தியர்கள் அனைவரும் அறிவார்கள்.

## மாந்தரீகம் ராஜவசியம்

பாரதப்படையில் சேர்ந்து நாட்டைக்காக்கும் நமது தமிழக வீர மைந்தர்களுக்காக இந்த வசீய மந்தரம் வெளியிடப்படுகிறது.

ஞாயிற்றுக்கிழமை எழுந்து குளித்து காலை 6-மணிக்குமேல் 7-மணிக்குள் ( இந்த மூலிகை இருக்குமிடத்தை முன்கூட்டி தெரிந்து வைத்து ) அங்கே சென்று கிழக்கு முகமாக நின்று பக்தி யுடன் மானசீகமாக சத்குருவை நினைத்துக்கொண்டு,

1) " ஓம் கணேசாய நம " ஐந்துதடவை உச்சரித்து

2) " ஓம் சர்வ சக்திமூலி " உன் உயிர் உடலில் நிற்கக்கட
" ஸ்ரீம் ஓம் ஸ்வாஹ " என்று 21 தடவை
உச்சரித்த பின் ஊதுபத்தி தூபம் காண்பித்த பிறகு

3) " ஓம் சக்திசாபம், சர்வேஸ்வரன் என்ற சர்வ சித்தர் சாபம், நசி மசி, நசி மசி, நசி மசி ஓம் பட்டு ஸ்வாஹ என்று 21 தடவை சொல்லி,



வேர் அறுமல் எடுத்து மண்ணைத் துடைத்து உதறி, சுத்த மான இடத்தில் காயவைத்த பிறகு சிறுதுண்டுகளாகச் செய்து வெள்ளி கவசத்திலடைத்து வலக்கரத்தில் கட்ட ராஜவசீகரம் உண்டாக்கும். கழுத்தில் கட்ட மனோதைரியம் உண்டாகும். கம்பீர நடைபோட்டு அஞ்சா நெஞ்சத்துடன் போரிட துணியும். திடமும் உண்டாகி எதிரிகளை கதிகலங்க வைப்பான். எதிரிகள் இவனைக் கண்டால் எலிபோல் பதுங்கி ஓடுவார்கள். இது சித்தர் சொன்ன சாராம்சம். இன்றும் இம் முறையைச் செய்து பலன் காணலாம்.

நெய்ச்சட்டி மூலிகை விந்தியமலைக்கு கீழ் முதல் தென்னாடு வரை எங்கும் கிடைக்கும். மேற்குத் தொடர்ச்சிமலை, கேரளம், ஆந்திரம், தமிழ்நாடு எங்கும் ஆடி மாதம் முதல் தை மாதம் வரை வளர்ந்து வரும்.



# சா கா மூ லி

## [ஆகாச கருடன்]

ஆகாயத்திலே வட்டமிட்டுச் சுழன்று வரும் கருடனை நம் அனைவருக்கும் தெரியும். இதன் பெயரைக் கொண்ட மூலிகையும் நம் நாட்டில் உள்ளது. "யானை வணங்கி" என்ற கட்டுரையை 1968-ம் ஆண்டு தினமணி சுடரில் எழுதியபோது வெண்குட்டத்திற்கு உபசரக்காக இந்த மூலிகையைக் குறிப்பிட்டுள்ளது பல வாசக அன்பர்கட்கு நினைவிருக்கலாம்.

மண்ணில் திருவடியையும் விண்ணில் திருமுடியையும் வைத்துக் காட்சி தந்தருளும் திருமால் வாகனமாகி நின்ற கருட பகவானின் பெயருக்கும் இந்த சாகா மூலி என்ற கருடனுக்கும் குணப் பொருத்தம் ஏதோ ஒன்று இருக்கக்கூடும். இல்லாவிடில் நம் முன்னோர்கள் இப்படியான ஒரு பெயரை இதற்கு சூட்டி இருக்க மாட்டார்கள்.

உண்மையில் இந்த ஆகாய கருடனுக்கு மாபெரும் சக்தி இருக்கத்தான் செய்கிறது. சாகா மூலி என்ற பெயரும் இதற்கு உண்டு. ஆமாம் இந்த மூலிகை சாகாது. மனிதன் மூச்சுவிட மறந்து விட்டால் 24 மணி நேரங்கூட தாங்காமல் ஊரைக்கூட்டி இறுதி சடங்கை நடத்திவிடுவார்கள். ஆனால் இந்த மூலிகையின் கிழங்கை எடுத்து ஒரு கயிற்றிலே கட்டிவிட சாகாது! முளைவிட்டு வீடெல்லாம் கொடி ஓடிப்படரும்! நீர் இல்லாமல் சாரம், சத்து ஏதுமின்றி அந்தரத்திலே கட்டிவைத்த இந்த கிழங்கு கொடி படர்ந்து ஓடுகிறது என்றால் நமக்கு ஆச்சரியமாகத்தான் இருக்கும்.

1961ம் ஆண்டு மார்ச் மாதம் 12 தேதி காலை 11-மணிக்கு ஒரு குருவிக்காரன் சில கிழங்குகளுடன் கூவிக் கொண்டு வீதி வழியே சென்றான். அவனைக் கூப்பிட்டு அடிபடாமல் இருந்த



ஆகாச கருடன்!

ஒரு கிழங்கை வாங்கி வீட்டுக் கூடத்திலே உயரத்தில் கட்டி வைத்தோம். அது 1965-ம் ஆண்டு 7-ந் தேதி டிசம்பர் மாதம் வரை கொடி வளர்வதும் வாடுவதுமாக இருந்து வந்தது. அன்று வீட்டுக்கு வெள்ளை அடிக்க ஏணி போட்டபோது கிழங்கின்மேல் பட்டு அறுந்து கீழே விழுந்து அடிப்பட்டுபோனது. அந்த கயிற்றிலே முடித்து வைத்த காகிதத் துண்டை பிரித்துப் பார்க்க 12-3-61 என்ற குறிப்பைக் கண்டோம். ஏணி பட்டு இந்த சாகா மூலிக்கு விபத்து வந்ததே என வருந்தி அதை மண்ணில் புதைத்து நீர்விட்டு வந்தும் பயனில்லாமல் போனது.

கோவைக்கொடி இனத்தைச் சேர்ந்த இந்த மூலிகைக்கு பேய்சிந்தில், கருடன், கொல்லன் கோவை என்று வேறு எந்த பெயர் இருந்தாலும்கூட, பாமர மக்களிடையே ஆகாச கருடன் என்றுல் தான் விளங்கும். இந்த மூலிகை குத்துச்செடி அடர்ந்த சிறுமரக் காடுகளில் தன்னிச்சையாக வளரும் கொடி. குறிப்பாக குருவிக்காரர்கள் காடு, மலைகளுக்குச் சென்று பல அருமையான மூலிகைகளை எடுத்து வரும்போது இந்த ஆகாச கருடன் கிழங்கையும் மறவாமல் எடுத்து வந்து நாடு நகரங்களில் கூவி விற்பார்கள். அவனைக் கூப்பிட்டு "இந்த கிழங்கு எதற்கு உதவும்" என்று கேட்டால் போதும், உடனே அவன் நின்று உபயோகத்தைப் பற்றி அரை மணி நேரம் தன் கொச்சை தமிழ், இந்தி ஆகிய மொழிகளில் கலந்து, விளக்குவான். மெடிக்கல் காலேஜ் புரொபசர் கூட அம் மாதிரி லெக்சர் கொடுக்கமாட்டார். தொண்டை நீர் வரட்சியாகும் வரை கத்திவிட்டு, சாமி ஒரு கெயங்கு வாங்கிக்கோங்கோ; இது வூட்லே இருந்தா ஆபத்துக்கு ஒதவும் என்பான். இறுதியாக அவன் பேச்சில் லயித்தவர்கள் அவன்பேச்சை நம்பமாட்டார்கள்! ஏழையின்சொல் அம்பலம் ஏறுமா? இதே சொல்லை நவீன மருத்துவர்கள் சொன்னுல் அதுவே ஒரு புதிய ஆராய்ச்சியாகிவிடும். இதுவும் காலத்தின் கொடுமையே!

## பயனும் குணமும்

இந்த சாகா மூலிகை காடுகளில் வளர்வதால் கொடி, இலை, பூ, பழம் இவைகளைப் பற்றி அனேகர் கண்டிருக்க மாட்டார்கள். எனவே இதன் உபயோகங்களைவிட கிழங்குதான் நாட்டில் நிறைய உபயோகமாகிறது. ஆனுலும் இதன்கொடி இலை இவைகளுக்கும் நல்ல பலன் உண்டு. ஆகாச கருடன் இலை கோவை இலை போலவும் இதன் பூக்கள் மிகவும் சிறியதாகவும் மிக விரைவில் உதிர்ந்து பிஞ்சு உண்டாகி பழுத்தவுடன் பவள நிறத்துடன் காணும்.



கிழங்கை ருசித்தால் சிறுகைப்புடன் இருக்கும். இதன் முக்கிய செய்கை விட நாசினி, சிறப்பாக கொடியவிடத்தன்மை உடைய பாம்புக்கடி விடங்கள் தேள் பூரான் ஆகிய விடங்களை முறித்து விடும். அதோடு இளைத்த உடலை தேற்றவும் பலம் பெறவும் செய்து சூட்டைத் தணிக்கும்.

## பாம்புக் கடி விடங்களுக்கு

எலிக்குச் சத்துரு பூனை, கீரிக்குச் சத்துரு பாம்பு, பாம்புக்குச் சத்துரு கருடன். ஆகாயத்திலே வட்டமிடும் கருடனின் நிழல் ஒரு பாம்பின்மேல் பட்டால் போதும்! அதன் விடசக்தி யாவும் குன்றி விடுமாம். இத்தகைய சக்தி இம் மூலிகைக்கும் உண்டு. பாம்பு கடித்தவுடன் இந்த ஆகாசகருடன் கிழங்கை ஒரு எலுமிச்சங்காய் அளவு எடுத்து மென்று தின்ன வேண்டும். சில நிமிடங்களில் இரண்டொரு தடவை வாந்தியும் பேதியும் ஆகும். உடன் விடம் முறியும். தும்பைக் கட்டுரையில் குறிப்பிட்டபடியே பத்தியம் இருத்தல் அவசியம். எந்த வகை பாம்பு கடிகளுக்கும் ஆகாச கருடன் கிழங்கு ஏற்றது.

மண்ணுளிப் பாம்பு என்று ஓர் இனம். இதில் பல பிரிவுகள் உடைய பாம்புகளுண்டு. செப்பிடுவித்தை காட்டிப் பிழைக்கும் பாம்பாட்டிகளிடம் இம்மாதிரி பாம்புகளைக் காணலாம். இவை கடிக்க வேண்டியதேயில்லை. பூமிக்குள்ளேயே சில வாழ்வதால் இவைகளுக்குப் பற்களும் இறைவன் படைப்பதில்லை. இத்தகைய பாம்புகளில் சிலவகை நாக்கினுல் மனிதர்களை நக்கித் தீண்டினுல் போதும்; இதன் கொடிய விடம் சிறுக சிறுக உடலில் பரவி வெண் குஷ்டம், கருமேக ரணங்கள், பயங்கரமான குட்டம், சர்ம நோய் களை உண்டுசெய்து தீராத ரோகங்களாக முடிவதும் உண்டு. சர்ம ரோகங்கள் சிலருக்குப் பரம்பரை வழியில் இருக்காது. நல்லொழுக் கமும், தூய்மை மனது உடையவர்களாகவும் இருப்பார்கள். இவர்கள் விதிவசத்தால் காணுக்கடியாக இப்பாம்பு நக்கலுக்கு ஆளாகிவிட, தீராத சர்மரோகம் ஆரம்பித்து விடும். இம்மாதிரி விடக்கடிகளை கருடன் கிழங்கு நிச்சயமாக அறவே போக்கி விடும்.

## முறை விபரம்

நல்ல முற்றின கிழங்கு எடுத்து அதன் மேல்தோலைச் சீவி குறுக அரிந்து வெய்யிலில் உலர்த்தி அதனைத்தூள் செய்து வைத்துக்கொள்வும். தினம் காலை, மாலை வெறும் வயிற்றில் 10 கிராம்

அளவு வரயிலிட்டு வெந்நீர் பருகி வரவேண்டும். ஒட்டல் பல காரம், எண்ணெய், கடுகு, காரம், புளி ஆகியவைகளை நீக்கி இச்சா பத்தியமாக இருக்கவேண்டும். நாள் பட்டு உடலில் தங்கிய விடம் எதுவாயினும் சரியே. ஒரு மண்டலம் சாப்பிட விட பூரிதமான உடல் தூய்மையாகும். இந்தத் தூளையே மேகரோகத்தால் விளைந்த கிரந்தி நமச்சல் தீராத வெள்ளை ஒழுக்கு முதலானவை களுக்கும் கொருக்கப் புண், லிங்கப்புற்று ஆகிய நோய்களுக்கு கொடுக்க விலகிவிடும்.

## இலையின் உபயோகம்

இதன் இலையை அரைத்து, துடைவாழை, அரையாப்பு, கழலைக் கட்டிகள், கண்டமாலை, கை கால் சந்துகளின் உள்பக்கம் உண்டாகும் கட்டிகள், ரத்தக்கட்டிகள், ஆகியவைகளுக்கு வைத்துக் கட்டிவர அவை பழுத்து உடைந்து மேல்கண்ட ரணம் ஆறிவிடும்.

உலர்த்தி தூள் செய்த இலையை ஒரு புட்டியில் பத்திரப் படுத்திக்கொண்டு அக்கிப்புண், அழிந்த ரணம், தேக உஷ்ணம், எரிவு, கரப்பான், சிரங்குகள் ஆகியவைகளுக்கு தேங்காய் எண்ணெ யுடன் கலந்து இரண்டுநாள் வெய்யிலில் வைத்த பிறகு மேலுக்குப் பூசி வரலாம்.

கருடன் கிழங்கு, கொடி இலையுடன் சேர்த்து ஒரு மண்சட்டி யில் கைப்பிடி அளவுடன் போட்டு மிளகு சீரகம் சிறிதளவு தட்டிப் போட்டு கஷாயம்வைத்து தினம் இருவேளை உட்கொள்ள பாண்டு, சூலை நோய், வாதப்பிடிப்பு, வயிற்றில் வலி ஆகியவைகள் சாந்த மாகும். இந்த இலையை ஆமணக்கெண்ணெய் விட்டு வதக்கி கை, கால் மூட்டு வீக்கங்கள், வலி ஆகியவைகளில் ஒற்றடம் கொடுத்து வரலாம்.

ஆகாசக்கருடன் கிழங்கால் பாதரசம் கட்டும். சித்தர்கள் இந்த வித்தையைக் கையாண்டு பல அற்புத சித்திகளை பெற்று சித்து விளையாட்டுக் காண்பித்து இறுதியில் இறைவன் திருவடி நிழலை அடைவார்கள். பிடிக்கு அகப்படாமல் ஓடும் ரசத்தையே கட்ட வல்லது ஆகாச கருடன்என்றால் மக்களுக்குவரும் நோயைக் கட்டிவிடும் என்பதைக் கேட்கவா வேண்டும். நாட்டு வைத்தியங் களில் பல ரகசிய முறைகள் அழிந்து போனாலும், பரம்பரை வழி வந்த கிராமங்களில் உள்ள வைத்தியர்கள் இந்தக் கருடன் கிழங்கு எண்ணெயைக் காய்ச்சி, பல நாள்பட்ட வியாதிகளுக்குக் கொடுத்து



குணப்படுத்தி வருகிறார்கள். இந்த எண்ணெ குடிப்பதற்கு குமட்ட லும் கசப்புமாக இருந்தாலும் உடம்பில் உள்ள கசப்புகளையும் விட பூரித துர்நீர்களையும், ரணம், புரைகள் உண்டாக்கும் கிருமிகளையும் அழித்து தூய்மைப் படுத்தும் என்பதில் ஐயமில்லை.

ஆண்டவனையே தாங்கும் ஆகாசக் கருடன் பறக்கும் போது சில அன்பர்கள், கிருஷ்ணா கிருஷ்ணா என்று தரிசித்து தாடையில் போட்டுக் கொள்வார்கள். இதன் பொருளை உணர்ந்த நம் முன்னோர்கள் இம் மூலிகைக்கும் ஆகாச கருடன் என்று பெயரிட்டு போற்றி வருவது வியக்கத் தக்கதாகும். இறுதியாக அடியேனு டைய அனுபவத்தையும் கூறிவிடுகிறேன். கட்டுரை ஆரம்பத் திலே ஆகாச கருடனை கட்டி பல வருடங்களாக இருந்தது எனக் குறிப்பிட்டேனல்லவா? அந்த காலம் வரை வீட்டின் உள்ளே விடப் பூச்சிகள் நடமாட்டமே இல்லை. ஆனால் சுண்ணாம்பு அடித்து வீடு சுத்தம் ஆகிய பிறகும் பொங்கல் கழித்து ஒரு வாரத் திற்குள்ளே வீட்டின் கூறையிலிருந்து ஒரு தேள் தொப்பென்று கீழே விழுந்தது! மற்றொன்று, அந்த கிழங்கு இருந்த வரையில் வீட்டிலே சண்டை சச்சரவு இல்லாமல் இருந்தது. இது உண்மை யான அனுபவம். நீங்களும் சோதனை செய்ய விரும்பினால் ஆகாசக் கருடனை ஒரு குறவிகாரனிடம் வாங்கி அனுபவத்தில் உணருங்கள். பிறருக்கும் அதன் பலனைச் சொல்லி வையுங்கள்.

'' துட்ட விடம் பாண்டு வெப்பு சூலை வாதங்கிரந்தி
குட்டம் அரிப்பக்கி கோண் குடல்நோய் - கெட்ட கண்ட
மாலை போம் கொல்லன் கோவைக்கிழங்கால் முத்தோட
வேலை போம் பாரில் விளம்பு '' (கு. மு.)



# மந்தாரை

மந்தாரை என்ற மரத்தின் மனைவி வன்னி. என்னடா? மரங்களுக்கும் உறவை தேடி வைக்கிறேனே என நினைக்கிறீர்களா? ஆம்! இந்தக் கணவன் மனைவி உறவு இன்று—நேற்றல்ல. யுக யுகாந்திரமாகி விட்டது. வேம்பும் அரச மரமும் ஒன்று சேர்ந்த இடம் தெய்வத் தன்மை வாய்ந்தது போல இந்த கணவன் மனைவி உறவு கொண்ட 'விருட்சங்களைப் பல சிவஸ்தலங்களில் காணலாம்.

பிறவி என்பதே ஆன்மாவிற்கு ஒரு சட்டை போல. நமது சட்டை கிழிந்து விட்டால் வீசி எறிந்து விடுகிறோமல்லவா? அது போல ஆன்மாவும், உடம்பு(எ)சட்டை கிழிந்த பின்னர் வேறு ஒரு புதிய சட்டையை (உடலை) நாடிச் செல்கிறது. இப்படி பிறவி தோறும் செய்த வினைகளுக்கு ஏற்ப மறுபிறவி வாய்க்கும். மரமாகி இருந்த ஆன்மா மனிதராகலாம். மனிதராகி இருந்த ஆன்மாக்கள் கல்லாகி, புல்லாகி, பறவை, பாம்பு, புழுக்கள் போன்ற பல பிறவி ஆகிவிடுவது, அவைகளின் பூர்வ கர்மாக்களின் நற்செயல், தீயச் செயல்களைப் பொறுத்தவையாகும்.

இங்ஙனமே முனிவர் கூட்டத்திலிருந்த சதி — பதிகளான சமி என்பவளும் — மந்தாரன் என்பவனும், ஒருசமயம் புருசண்டி என்ற முனிவர் உடல் உருவத்தைக் கண்டு ஏளனம் செய்து கை கொட்டி எள்ளி நகையாடினர். அம் முனிவருக்கு வந்த கோபத்தில் இருவரையும் மரங்களாகிவிடச் சபித்தார். இந்த சாபத்தை பிரம்மா-விஷ்ணு-ஈஸ்வரன் மற்றும் யாராலும் நிவர்த்தி செய்ய முடியாமல் போகவே, இறுதியாக கணேசர் முன்வந்து அவர்களுக்கு அருள் செய்து, மீண்டும் "பிறவி" எய்தாமல் தன்னுடன் ஐக்கியம் செய்து கொண்டதாக வரலாறு.

பஞ்ச தருக்களில் மந்தாரையும் ஒன்று என்பதனை நமது கட்டுரையைத் தொடரும் அன்பர்கள் அறிந்த ஒன்று. இந்த மந்தாரை விருட்சத்தைப் பற்றிய விளக்கமும், அதன் மருத்துவப் பயன்களையும் இந்தக் கட்டுரையில் காணலாம்.



மந்தாரை விருட்சத்தில் பலவிதம் உண்டு. வெள்ளைப் பூவையுடையது 'கொக்கு மந்தாரை' என்றும், சிவப்பு நிறமுடையது சிறப்பு மந்தாரை, மஞ்சள் நிறமுயைது அந்தி மந்தாரை. காட்டு மந்தாரை என்னும் கொடி மந்தாரை, இது பெரும்பாலும் காடுகளில் பயிராகி, இதன் இலைகள் சாப்பிடவும் மற்றும் உணவுப் பண்டங்களை கட்டி அனுப்பவும், சேகரித்து நகரங்களுக்கு அனுப்பப்படுகிறது. இந்த இலையை வாங்கி சாப்பாட்டு இலை தைத்து ஜீவனம் செய்வது நமது நாட்டு வழக்கம். ஆனல் இங்கு குறிப்பிட்டது நாடுகளிலும் நகரங்களிலும் வளர்ந்து வரும் நடுத்தர மர வகுப்பைச் சேர்ந்த மந்தாரை இனங்களாகும். வெள்ளை, சிகப்பு, மஞ்சள் ஆகிய நிறமுடைய பூக்கள் சுமார் ஒரு ரோஜா மலர் போன்று, ஆனல் முழுவதும் மலராமல் சிறிது குவிந்தபடியே கீழ்நோக்கி இருக்கும். இதன் இலைகள் நாம் பரிமாறி சாப்பிடுகிறோமே பெரிய மந்தாரை இலை அது போல், ஆனல் ஒன்று முதல் இரண்டங்குல நீள அகலமும் இலை மிருதுத் தன்மையும் உடையதாக இருக்கும். பொதுவாக இவைகளின் மருத்துவ குணங்கள் ஏறத்தாழ ஒன்று போலவே இருக்கும்.

## உபயோகமும் மருத்துவப் பயனும்

மந்தாரை இலை பூ, பட்டை, வேர் ஆகியவைகள் மருந்தாகப் பயன்படுகிறது. இலை, பூ, வேர் ஆகியவைகள் செரிப்புண்டாகும் மலமிளக்கும். வாந்தியை நிறுத்தும். இதன் மரப் பட்டை உடலை தேற்றும். உடல் உரம் பெறச் செய்து பலத்தைக் கொடுக்க கூடியது. பட்டை பூச்சி கொல்லி, கிருமி நாசினி செய்கை உடையதாகும்.

## இலை

இலையுடன் இஞ்சி, கொத்தமல்லி, உளுந்தம் பருப்பு சிறிது பழம்புளி சேர்த்து உணவுடன் உப்பு மிளகாயும் சேர்த்து வதக்கி துவையல் போலச் செய்து அரைத்து பகல் சாப்பாட்டில் கலந்து முதலிரண்டு பிடி சாப்பிட்டு வர உணவு மணம் பெறும். துவையல் நல்ல கருவேப்பிலை வாசனையுடன் இருக்கும். நாள்பட்ட வாய் குமட்டல், நீருரல், வாந்தி அஜீரணம் முதலியவைகள் நீங்கி நல்ல பசியை உண்டாக்கும். மந்தம் நீங்கி உற்சாகம் ஏற்படும். மந்தாரை இலையைச் சமையலில் சேர்ப்பது நமது பழங்கால உணவு முறைகளில் ஒன்று. இன்னும் சிலர் பழக்கத்திலே கை கொண்டு வருகின்றனர்.



இதன் இலையை உலர்த்தி இடித்து தூள்செய்து கொண்டு ஓயாத வாந்தி, குமட்டல், நாள்பட்ட அரோசிகம், பெண்களுக்கு காணும் மசக்கை வியாதிகளில் இரண்டுசிட்டிகை தூளை தேனுடன் குழைத்துச் சாப்பிட அவை நீங்குவதுடன் பசியும் உண்டாகும். பொதுவாக இலையின் சிறப்புக் குணம் யாதெனில் உணவுக்குழலில் சென்ற ஆகாரத்தை மீண்டும் வெளியே கொண்டு வராமல் தடுக்கும் சக்தி உடையது.

விநாயகருக்கு உரிய அர்ச்சனை பத்திரங்களில் மந்தாரை இலையும் ஒன்று. பக்தர்களின் இஷ்டகாரிய பூர்த்தியும் கணேசன் அருளும் உண்டாக மந்தாரை இலையில் அர்ச்சனை செய்வது நன்மை தரும்.

## மலர்

மந்தாரை மலர்களில் வெள்ளை நிறமும், சிகப்பு நிறமும் மருத்துவச் சிறப்புடையதாகும். அன்றியும் இந்த மலர் ராஜவசியம் செய்யும் தன்மை உடையது. கண்களுக்கு குளிர்ச்சியையும், ஒளியையும் தரும். மந்தாரைப்பூ, பொன்னாங்கண்ணி இவைகளை சமமாக எடுத்து அரைத்து நல்லெண்ணையுடன் கலந்து முறிய காய்ச்சி தலைக்கு தடவிவர கண் ரோகம் நீங்கும். கண் எரிச்சல், பார்வை மங்கல் யாவும் குணமாகும்.

## சகல உதிரப் போக்கும் நிற்க

மந்தாரை மலர் மொக்குகளை சேகரித்து 2 பலம் எடுத்து சிதைத்து இரண்டு குவளை நீரில் கலந்து காய்ச்சி 1 குவளையாக்கி காலை மாலை இரண்டு வேளை குடித்து வர பெரும்பாடு இரத்தப் போக்கு, இரத்த மூலம், சிறுநீர் தாரையில் ரணமாகி ரத்தமாகவே போகும் ரத்த வெட்டை, சீதபேதி, ரத்தபேதி, மூக்கில் ரத்தம் வடிதல், ரத்த வாந்தி ஆகியவைகள் நிற்கும். இதற்கு சிவப்பு பூ மிகவும் பயன் உடையதாகும்.

## மலச் சிக்கலுக்கு

இதன் பூவை நிறைய சேகரித்து உலர்த்தி இடித்து செம்பரத்தைப் பூ போலவே தூள் செய்து, சர்க்கரையுடன் கலந்து இரண்டு சிட்டிகை அளவு தேனில் குழைத்து உண்ண மலத்தை இளக்கி வெளியே தள்ளும். நாட்பட்ட மலச்சிக்கலுக்கு தொடர்ந்து 20, 40 நாள் சாப்பிட்டு வரவும்.

## பட்டையின் பலன்

(1) மந்தாரை மரத்தின் பட்டையை 1 பலம் எடுத்துஇடித்து 1 குவளை தண்ணீரில் கஷாயமிட்டு அரைக் குவளையாக்கி குடிக்க அசீரண பேதி, உஷ்ண பேதிகள் நிற்கும்.

(2) இந்த கஷாயத்தில் புண் புரைகளையும், அழுகி துர்நாற்ற மெடுக்கும் ரணங்களையும் கழுவிவர அவை ஆறும்.

(3) ஷ பட்டை, சுக்கு சாம்பிராணி இவைகளை சமமாக அரைத்து கழுத்தைச் சுற்றி வரும் கண்டமாலை கட்டிகள் அக்குள் தொடை இடுக்குகளில் வரும் ரத்தக் கட்டிகளுக்கு பூசி வைக்க அவை தீரும்.

(4) மந்தாரைப் பட்டை, மாதள பூ, கருவேலம் பட்டை இவைகளை சமமாக எடுத்து சிதைத்து கஷாயமிட்டு அந்த நீரை வாய் கொப்பளித்துவர வாய் நாற்றம், பல் தொந்தரவுகள், டான்சில் வீக்கம், தொண்டைப்புண், வாய் நீரூறல் ஆகியவைகள் எளிதில் குணமாகிவிடும்.

## வேர்

மந்தாரை மாந்திரீக உச்சாடனத்திற்கு மிகவும் முக்கிய மானது. குறிப்பிட்ட திதி, நட்சத்திரம், வாரங்களில் இதன் வடக்கு வேரை. (அதர்வண முறைப்படி) வாங்கி மாந்திரீக உச்சாடனம் செய்து இதன் இஷ்ட தேவதையை ரசமாக்கிக் கொண்டு பற்பல வேடிக்கைகளை காண்பித்து பிழைப்போரும் நமது நாட்டில் உண்டு.

## சகலவித கட்டிகள் உடைய

(1) மந்தாரைபட்டை, பூ, வேர் இவைகளை சரிஎடை எடுத்து காடி அல்லது கழுநீர் விட்டு அரைத்து பழுத்து உடையாத கட்டி கள் மீது கட்டிவர அவை பழுத்து உடைந்து ஆறும்.

(2) உடல் பருத்து ஊளைச்சதை உடையவர்கள் வேரை 1 பலம் அரைத்து தினமும் கஷாயமிட்டு குடித்துவர தேவையற்ற சரீரம் கரைந்து மெலிந்து விடுவதைக் காணலாம்.

(3) நாள்பட்ட குன்மம், வயிற்று வலி ஆகியவைகளுக்கும் இதன் வேர் கஷாயம் துணை மருந்தாகும்.



## மந்தாரை புல்லுருவி

மந்தாரை மரத்தில் புல்லுருவி முளைப்பது உண்டு. இந்த புல்லுருவியை ஆயில்யம்(அ)உத்திராட நட்சத்திரத்தில் ஞாயிற்றுக் கிழமை கூடிய தினங்களில் அனுஷ்டானத்துடன் எடுத்து ரட்சை தரிக்க ராஜவசியமும் சர்வ ஜன ஆகர்ஷணமும் உண்டாகும் என்பதை சித்தர் உரை விளக்கம் கூறுகிறது.

மந்தாரை மரம் பொதுவாக நம் நாட்டு வழக்கில் பூஜைக்கும் உணவு மருத்துவமாகும். மாந்திரீக செய்கைகளுக்கும் பயன்பட்டு வந்திருக்கிறது என்பதனை பழங்கால நாட்டு வைத்தியர்கள் நன்கு உணர்வார்கள்.

மந்தாரை பத்திரத்திலும் மலர்களாலும் இறைவனை நாள் தோறும் அர்ச்சித்து பூஜை செய்துவர வறுமை, பிணி, கவலையெல் லாம் நீங்கி மன அமைதியும், வசீகரமும் மகிழ்ச்சியான வாழ்க்கை யும் உண்டாகும் என்பதில் ஐயமே இல்லை. ஒரு மண்டலம் செய்து பலனை பிறர்க்கும் உபதேசம் செய்யுங்கள்.

"மந்தாரைப் பூ குளிர்ச்சி மன்னர் வசியமுமாம்
செந்தாமரைத் திருவே! செப்பக்கேள் - மந்தாரங்
கண்ணுக்கு
மாகுளிர்ச்சி காணுங் கொதிப்பகற்றும்
மண்ணில் நறும் பூவன எண்."



# காக்கணம் கொடி

கொடி வகையில் உத்தாமணி, கட்டுக்கொடி, கோவைக் கொடி, பிரண்டை, முசுமுசுக்கை ஆகியவைகளைப் பற்றி முன் கட்டுரைகளில் தெரிந்து கொண்டவர்கள் இந்தக் காக்கணம் கொடியைப் பற்றித் தெரிந்து கொள்வது அவசியத்திலும் அவசிய மாகும். ஏனெனில் இந்த காக்கணம் கொடி மேலே கூறப்பட்ட கொடிவகைகள் போலவே எங்கும் எளிதாகக் கிடைக்கக்கூடியது. சுலபமாகப் பயிரிட்டும் வளர்க்கலாம்.

சில பூங்காத் தோட்டங்கள், வள மனைகளின் தோட்டங்கள் ஆகிய இடங்களில் இந்தப் பூவை அழகுக்கு வளர்ப்பதும் உண்டு. எனவே இக்கொடியை எளிதாக அனைவரும் தெரிந்துகொள்ள லாம். கிராமப் புறங்களில் தோட்டம், துரவு முள்வேலி ஓரங்களில் இந்த காக்கணங்கொடி தன்னிச்சையாகவே வளர்ந்துவிடுகின்றது.

பொதுவாக இதன் வழக்குப் பெயர் காக்கட்டான். காக் கணங்கொடி, காக்கணத்தி என்றும், சில பகுதிகளில் சங்கு புஷ்பம் என்றும்கூட சொல்வதுண்டு. இதன் மெல்லிய கொடிக் காம்பு தந்தி கம்பி போன்று சுருண்டு ஒன்றைப் பற்றி இடது புறமாக சுற்றிக் கொண்டு மேலே படரும். பற்றுக்கோடு இல்லாத இடங் களில் கொடிகள் அடர்த்தியாக குத்துச் செடிபோல் மேல்நோக்கிப் பரவும். இதன் இலைகள் சுமார் ஒரு மேசைக் கரண்டி அளவு விட்டு கொடிக் காம்பிலிருந்து (படத்தில் காட்டியபடி) நேருக்கு நேராக ஜதை இலைகள் இரண்டு நான்காக விட்டு, இலைக்காம்பு முனையில் ஒரே இலை இருக்கும். ஆக ஒரு காம்பிற்கு மூவிலை, ஐந்திலைகளாக கொடிக் காம்பிலிருந்து இரண்டு முதல் நான்கு அங்குலத்திற்கு ஒரு இலைக்காம்பு விட்டு வளரும். இந்த இலைக் காம்பிற்கும், கொடிக் காம்பிற்கும் இடையே பூக்கள் அரும்பு விட்டு மலரும். இந்தப் பூவின் சங்குகளின் வாய் உதடுகளில் வரிவரியாக இருப்பதுபோல இதழில் வரிகள் ஓலை விசிறி போன்றிருப்பதால்



இதற்கு நமது முன்னோர்கள் சங்கு புஷ்பம் என்ற பெயர் வைத்தனர் போலும்! இந்த சங்கு புஷ்பம் பார்வைக்கு மிகவும் கவர்ச்சிகரமானதாக இருக்கும். இதைக் கையில் எடுத்துக்கொண்டு பார்க்க பூக்காம்பு பசுமை நிறமாகி அதிலிருந்து மயில் தோகை விரித்து இருப்பது போன்ற ஒரே பெரிய இதழ் அகலமாகி இருக்கும். அதன் நடுவே (தமிழகத்தின் தனிப்பெரும் தெய்வமாம் திரு முருகன் மயில் வாகனத்தில் அமர்ந்திருப்பது போன்று) ஒரு சிறு மொட்டு மயில் தன் தோகையின் நடுவே தலையை நீட்டி இருப்பது போல் காணும். இப்பூவைக் கையில் எடுப்போருக்கு மனதில் தெய்வீகப்பற்றும், பக்தி பரவசமும் உண்டாகும் என்பதில் ஐயமே இல்லை. பூக்கள் பூத்து இதழ் உதிர்ந்த பின்பு பிஞ்சுகள் நீண்டு வளரும். முதிர்ந்த நிலையில் இதன்காய்கள் சுமார் நான்கு அங்குல நீளமாகி பார்வைக்கு, ஆவாரை (அ) பீன்ஸ் போலவும் விதை முற்றியவுடன் கருப்பாகி காராமணியைப் போன்ற அளவில் இருக்கும்.

இந்த காக்கணக் கொடியில் இரண்டு விதம் உண்டு. ஒன்றின் பூ சுத்த வெள்ளை நிறமாகியும், மற்றொன்று இதழ்களின் ஓரங்களில் எல்லாம் சுத்த நீல நிறமுடையதாகி சிறுமொட்டு அருகே செல்லச் செல்ல நீல நிறம் குறைந்து வெண்மை நிறமுடையதாகக் காணும். இதனை வெண் சங்கு புஷ்பி, மருஞ்சங்கு புஷ்பி என்றும் கூறுவர். அல்லது கருங் காக்கணம், வெண் காக்கணம் என்பார்கள்.

## உபயோகம்

பொதுவாக இதன் இலையும், வேரும், விதையும் மருத்துவப் பயனுடையதாகிறது. புஷ்பம் தெய்வ வழிபாட்டிற்கு உகந்தது. குறிப்பாக சிவார்ச்சனைக் குரியது. குமாரக் கடவுளுக்குப் பிரிய புஷ்பம் என்று பெரியோர் கூறுவர். மருத்துவ குணத்தில் இருவித காக்கணமும் ஒரே செய்கையுடையதாகும்.

## குணமும் பயனும்

இதன் வேர், விதை ஆகிய இரண்டும் மலத்தை இளக்கி நீராக்கி வெளித் தள்ளுவதில் குமரி (சோற்றுக் கற்றாழை) ஆமணக்கு நெய், குப்பைமேனி, மூக்கிரட்டை போன்றவைகட்கு சமமானது. சிறு நீரைப் பெருக்கித் தள்ளுவதில் நெருஞ்சில், நாயுருவி, கீழாநெல்லி ஆகியவைகளைப் போன்று வேலை செய்யும்.



உடல் உள்ளுறுப்புகளில் உண்டாகும் அழற்சிகளை நீக்குவதில் பிரண்டையைப் போன்று பயன் தரக்கூடியது. இலை, உடல் உஷ்ணத்தைத் தணிக்கவல்லது. வீக்கங்களை கரைத்து விடுவதில் உத்தாமணி, செம்பை, வாத நாராயணன் ஆகியவைகளுக்கு நிகரானது.

## சுரம் தலைவலிகட்கு

இதன் வேரை எடுத்து பச்சையாகவே 1 பலம் எடுத்துச் சிதைத்து 2 குவளை நீரில் போட்டு 1 குவளையாகும் வரைக் காய்ச்சி ஒரு முடக்கு வீதம் 2-மணிக்கு ஒரு முறை 6 தடவை சாப்பிட ஒரே நாளில் சுரம், தலைவலிகள் மற்றும் மலச்சிக்கலால் வந்த உஷ்ண வியாதிகள் தீரும். வேர் கிடைக்காதபோது, காக்கணம் இலை, நுணா இலை, ஆடாதொடை இவைகளை சமமாக ஒரு பிடி எடுத்து கஷாயமிட்டு முன்போல் கொடுத்து வரலாம்.

## வெள்ளை பிரமேக ஒழுக்குகளுக்கு

காக்கணம் கொடி வேர் 1 பலம் எடுத்து அதைப் பாலில் வேகவைத்து பால் விட்டரைத்து வேளை ஒன்றுக்கு சுண்டக்காய் அளவு தினம் 2 வேளை பால் அனுபானத்துடன் சாப்பிட்டுவர மேக ரோக சம்மந்தப்பட்ட வெள்ளை ஒழுக்கு பிரமேகம், தந்திமேகம், மூத்திர தாரையின் அழற்சி எரிச்சல் யாவும் தீரும்.

## தீராத வெள்ளை ஒழுக்கு நிற்க

வெள்ளை காக்கணம் கொடி வேர், கட்டுக்கொடி இலை, கீழா நெல்லிச் செடி வேருடன், ஆனை நெருஞ்சில் இலை, அருகம்புல் ஆக ஆறு மூலிகையும் ஒரு பிடி எடுத்து அதனுடன் 6 மிளகு சேர்த்து மைபோல அரைத்து ஒரு நெல்லிக்காய் அளவு ஆழாக்கு கட்டி எருமைத் தயிரில் காலை, பகல் ஆக இரண்டு வேளை கொடுத்து, புளி, காரம் நீக்கி பத்தியமிருக்க பல ஆண்டுகளாக போகும் வெள்ளை போக்கு, மேகரோக சம்மந்தப்பட்ட ரணங்கள், கட்டிகள் அரையாப்பு, கொருக்கு, இத்யாதி கொடும் வியாதிகளை ஒழித்துக் கட்டிவிடும். மேலும் பென்சிலின், ஸ்டெப்டோமைசின் சல்பா ஆண்டிபயாடிக் ஊசி, மாத்திரை மருந்துகளின் பின் விளைவுகளால் மேக ரோகங்கள் சிக்கலாகி பல தொல்லைகளை அனுபவித்தவர் களுக்கும் மேல்கண்ட சிகிச்சை செய்து பூரண குணம் பயனளிக்க வல்லது. இப்படி சிகிச்சை செய்து பூரண குணம் கண்டவர்கள் மீண்டும் மீண்டும் தப்புத் தண்டாக்களில் மாட்டிக்கொண்டு விடாமல் எச்சரிக்கையாய் இருப்பது அவசியம்.

## கருங்காக்கணம் கொடி வேர்

இந்த வேரைப் பாலில் வேகவைத்து, எடுத்து உலர்த்தி இடித்து தூள் செய்து வைத்துக்கொண்டு வாத நோய்கள், வாய்வு வலி, சீதளம், வாதசீதளம் இவைகளுக்கு இரண்டு சிட்டிகை வேர் தூளுடன் ஒரு சிட்டிகை சுக்குத் தூளும் சேர்த்து வாயிலிட்டு வெந்நீர் குடித்துவர நீங்கும். குழந்தைகளுக்கு காணும் வாய்வு, மந்தம், மலச்சிக்கல் இவைகளுக்கு 5 அரிசி எடை வேர்த்தூளும் சுக்குத் தூளும் கொடுக்க ஆபத்தினின்று இலகுவில் நோய் நீங்கும்.

## மலச்சிக்கலுக்கு விதை

பொதுவாக நம் நாட்டு வழக்கில் இன்றும் உபயோகத்தில் இருந்து வருகிறது. வெள்ளை, அல்லது கருங்காக்கணம் விதைகள், மாசி, பங்குனி, சித்திரை மாதங்களில் தான் கிடைக்கும். இவைகளைச் சேர்த்து பொன் வறுவலாக ஆமணக்கு நெய்விட்டு வறுத்து எடுத்து (வஸ்திர காயம்) தூள் செய்து வைத்துக்கொள்வார்கள். அன்று பிறந்த குழந்தைகளுக்குக்கூட 2 அரிசி எடைமுதல் 5, 10 அரிசி எடை வயதுக்கு தக்கபடி வெந்நீர் கலந்து கொடுப்பார்கள்! காக்கணம் விதை குழந்தைகளை ஆமணக்கு நெய்போல் காப்பாற்றக் கூடிய நிகரற்ற மருந்து. குழந்தை வியாதிகளுக்கென்றே இறைவனின் இன்னருளால் படைக்கப்பட்ட நுணா, நொச்சி, பொடுதலை, மூக்கிரட்டை, குப்பைமேனி, கற்றாழை, ஆமணக்கு போன்றவை போல் இந்த காக்கணம் கொடியும் சிறப்பு வாய்ந்தது. குறிப்பாக வாய்வு வாத சீதங்களால் மலச்சிக்கலும் கபமும் உண்டாகி, சுரம் அடித்து இழுப்பு மூர்ச்சை, நரம்பு இழுப்பு வலிகள் வரும் குழந்தைகளுக்கு கைகண்ட மருந்து. கிராமப்புறங்களில் பிரசவ மருத்துவம் பார்க்கும் மருத்துவச்சிகளிடம் இந்த காக்கணம் சூர்ண மாத்திரைகள் அவசியம் இருந்தே தீரும்.

## யானைக்கால் வீக்கத்திற்கு

காக்கணம் விதை தூள் 2 தோலா, இந்துப்பு 2 தோலா, மாவு சுக்கு அரை தோலா இவைகளைத் தனித்தனியாக இடித்து தூள் செய்து கலந்து வைத்துக்கொண்டு தினம் 1-க்கு ஒரு வேளை கால் தோலா சாப்பிட்டுவர மலம் நீராகி யானைக்கால் வீக்கம் சிறிது சிறிதாக கரைந்து வரும். மேலுக்கும் இதன் இலைகளை எண்ணெய் விட்டு வதக்கிக் கட்டிவர வீக்கத்தை அதிகமாக்காமல் குறைத்து விடும்.



## இலை

காக்கணம் இலை வீக்கங்களையும் கட்டிகளையும் கரைத்து விடும் குணமுடையது. குறிப்பாக இதை ரத்தக்கட்டிகள், சுரத்துடன் வரும் நெறிக்கட்டிகள் ஆகியவைகளுக்கு எண்ணெயுடன் வதக்கிக் கட்டி வரலாம். மற்றும் இதன் இலைச்சாறு, தேன், இஞ்சி ரசம் இவைகளை சம அளவு எடுத்துக் கலந்து தேக்கரண்டி வீதம் உள்ளுக்குக் கொடுக்க பித்த உஷ்ணத்தால் வரும் வேர்வை, இரவில் மழை காலத்திலும் காணும் வியர்வை நீங்கி உடல் உஷ்ணம் தணியும்.

## பொன் கரையும் மூலிகை

காக்கணம் இலை பொன்னைக் கரைத்துவிடும் என்றால் நீங்கள் நம்ப மாட்டீர்கள். உண்மைதான், சித்த மருத்துவர்கள் தங்கத்தை நீற்று பஸ்பமாக்கி மருந்துகளைச் செய்ய காக்கணத்தியை நாடுவார்கள். பொன்னை நீற்று சாம்பலாக்குவதில் சிறப்புடையது காக்கணத்தி. காக்கணம் என்று ஏன் பெயரிட்டார்கள் என்பதை நாம் ஆராய்ந்து பார்ப்போமானால், சில உண்மைகள் நமக்குப் புலப்படும். கால்கணம் காக்கணம் கால் என்பது (காற்று) வாய்வைக் குறிக்கும். கணம் என்பது சூட்டை அதாவது அக்கினியை குறிக்கும். எனவே உடல் வாயு வாதம், ஆகியவைகளால் அக்கினி மந்தப்பட்டு சேரும் நோய்களைக் குறிக்கும் அடைமொழியாகவே இதற்கு காக்கணம் கொடி என்று பெயரிட்டு இருக்கலாம்.

அகத்திய முனிவர் சில மூலிகைகளுக்கு 'மா' என்ற எழுத்தை முன் வைத்துப், பட்டப் பெயர் கொடுத்துள்ளார். மாமூலி என்று இந்த காக்கணம் கொடியை அழைக்கின்றார். மற்றும் முசுமுசுக்கை, திப்பிலி போன்றவைகளுக்கும் இந்தப் பெயர் உண்டு.

அவர் பாடலைக் கவனியுங்கள் :—

"மாதரால் வந்த வெட்டை வன்மேகஞ் சென்னி வலி
ஓதுசுரம் விழிநோயோடுங் காண் - பேதியோடு
மாக்கட்டாஞ் சீதமறு மாமுனியாம் வெள்ளைக்
காக்கட்டான் வேரைக் காண்."

"மாஞ்சங் கிருமியடல் வாதங்கய இனமுஞ் சேர்ந்த
மலக்கட் டுஞ் சிதையுங்காண் - சூழ்ந்த அருங்காகக்
குவடுகளி லண்டாமயிலே ! கருங் காக்கட்டான்
விதையைக் கண்டு."

(கு. மு.)

## விழி நோய்களுக்கு

கண் படலம் மங்கல், நீர் அருகல், பார்வைக் கோளாறு, கண் வலி ஆகியவைகளுக்குப் பல ஆங்கில மருந்துகளைப் போட்டு கண்களை கெடுத்துக் கொள்ளாமல் காக்கணம் இலையை மைபோல் அரைத்து அதை இரவில் நெற்றியின் மேல் பற்று போட்டுக் கொண்டு வர கண்ரோக சம்மந்தமான நோய்கள் விலகும். கண்களில் போடவேண்டாம். குணம் தெரிந்தவர் மற்றவர்களுக்கும் சொல்லி வையுங்கள் காக்கணம் கொடியை.



# சிலந்திநாயகன்

நாயகன் என்றால் தலைவன் என்பது உங்கள் அனைவருக்கும் தெரியும். ஆனால் சிலந்தி நாயகன் என்று மூலிகை பற்றித் தெரியுமோ என்றால், தெரியாது என்ற விடைதான் அநேகமாகக் கிடைக்கும். காலம் செல்லச் செல்ல, நாகரீகத்தின் முதிர்ச்சியால் வழக்கொழிந்த மூலிகைகள் பல! சில அபூர்வ மூலிகை இனங்கள் இயற்கைப் பாதுகாப்பின்றி அதன் இனமே அழிந்துவிட்டது! சப்பாத்தி போன்ற முட்புதர்களுக்கு ஒருவித நோய்பிடித்து அழிந்த காரணத்தால் நல்ல பல மூலிகைகளை ஆடு மாடு மேய்ந்து வம்ச விர்த்தி இல்லாமல் போனது. மேலும், மக்கள் நவீன நாகரீக ஊசி மாத்திரைத் தேடச் செல்லும் ஆர்வத்தில், நான்கில் ஒரு பங்காவது இயற்கையில் வளரும் தாவர இனங்களில் கவனம் செலுத்தியிருப்பின் நாட்டின் ஆரோக்கியத்திற்குப் பங்கம் ஏற்பட்டிருக்காது அல்லவா?

சிலந்தி நாயகன் என்ற மூலிகை தரையில் படர்ந்து வளரும் செடியினத்தைச் சேர்ந்தது. கலியாண முருக்கன் பள்ளிச் சிறுவர்களுக்கு நண்பன் என்று முன்னமே கூறியுள்ளேன். அதுபோல இந்த சிலந்தி நாயகனும் பள்ளிச்சிறுவர் அனைவருக்கும் தெரிந்த ஒன்றுதான் இப்படிச் சொன்னவுடன் வாசக அன்பர்கள், தம் வீட்டில் உள்ள பள்ளிச் சிறுவர்களை அழைத்து "தம்பீ...! உனக்கு சிலந்தி நாயகன் தெரியுமா?" என்று கேட்டால், அவர்கள் திருதிருவென்றுத்தான் விழிப்பார்கள்! எனவே இவர்களுக்கென்றே ஓர் தனிப் பாஷை உண்டு. அதாவது கலியாண முருங்கையை, நெருப்புக்கொட்டை மரம் என்பது போல், சிலந்தி நாயகனுக்கு "பட்டாஸ் காய்செடி" என்று சொல்வார்கள். இப்படிச் சொன்னால் போதும். இந்த மூலிகையை எங்கிருந்தாலும் ஒரு நொடியில் கொண்டுவந்து விடுவார்கள். சில மூலிகைகளை நாம் தெரியாமல் விழிக்கும்போது பையன்கள் எனக்குத் தெரியும் என்று சொல்லிக் கொண்டு, உடனே நமக்கு நேரில் காட்டுவது நமக்கு வெட்கமாக இருக்கும். இவ்வளவு வயதாகியும் இதை நாம் தெரிந்துக்கொள்ள முடியவில்லையே என வருந்துவோம்.


சிலந்திநாயகன்



இந்த பட்டாஸ் காய் செடி, சிறுவர்கட்கு வேடிக்கையான பொழுதுபோக்கு! இதன் இலை மத்தியில் அகலமாயும், இலைக் காம்பிலும், முனையிலும் குறுகி சுமார் ஒரு தேக்கரண்டி முதல் மேசைக்கரண்டி அளவுடன் தட்டையாகி நல்ல பசுமை நிறத்துடன் காணும். இலைகள் நேருக்கு நேராக எதிரே ஜதை ஜதையாக காம்பிற்கு இரண்டங்குலம் இடைவெளி விட்டு வளரும். செடிக் காம்பிற்கும் இலைக் காம்பிற்கும் மத்தியில் பூக்கள் மொட்டுகள் விட்டு பிறகு மலரும். இம்மலர் சில இடங்களில் நீல நிறமாகவும், வெள்ளை நிறமாகவும் இருப்பதுண்டு. மலர்கள் உதிர்ந்ததும் அதிலிருந்துதான் சிறுவர்கள் கூறும் இந்த பட்டாஸ் காய் பிஞ்சு விடுகிறது! முதலில் பச்சை நிறமாக பெரிய கோதுமை அளவுடன் இருக்கும். முற்றிக் காய்ந்ததும் பழுப்பு நிறமாக உலர்ந்திருக்கும். இந்தக் காய் மேல் தண்ணீர் பட்டால் 'பட்' என்ற சப்தத்துடன் வெடிக்கும். எனவே பள்ளிச் சிறுவர்கள் இதைச் சேகரிக்கும் பொருட்டு தேடித் திரிந்து எடுத்து வந்து மற்ற சிறுவர்களிடம் உமிழ்நீரால் அதை நனைத்து 'பட்' என்று வெடிக்க செய்வார்கள்.

மழைக்காலத்தில் இந்த பட்டாஸ் காய் செடியின் உலர்ந்த காய்கள் வெடித்து, அதன் உள்ளே இருக்கும் விதைகள் நாலாப் பக்கமும் சிதறி தன்னிச்சையாக இனத்தைப் பெருக்கிக்கொள்ளும். சிலந்தி நாயகன் செடி தொட்டால் சிணுங்கி வகுப்பைச் சார்ந்தது. மனிதர் தொட்டால் இந்தச் செடியின் இலை, கிளை யாவும் வதங்கிப் போகும். ஆனால் காற்றடிப்பதாலோ, மற்ற செடிகளின் இலைகள் எது பட்டாலும் தொட்டால் சிணுங்கி வாடுவதில்லை. மனிதரின் ஸ்பரிசம் பட்டால் மட்டுமே வாடுகிறது. அது போல இந்த சிலந்தி நாயகன் காய்கள் சும்மா இருக்கும் போது வெடிப்பதில்லை. தண்ணீர் பட்டால் போதும்! 'பட்... பட்...' என்று வெடிக்கிறது. உத்தாமணி, எருக்கன் இவைகளின் காய்கள் வெடித்தால் விமானத்திலிருந்து பாராச்சூட்டுகள் குதிப்பது போல் காற்றில் பறந்து பல மைல்களுக்கப்பாலும் சென்று தன் இனத்தைப் பெருக்குகிறது. இறைவனின் திருவருட் செயல்களை இத்தகைய காட்சிகளால் நாம் காணும்போது மனித சக்திக்கும் மீறிய பல அற்புத படைப்புகளை அவர் இனங்களில் புகுத்தி நமக்கு நல்ல பல பாடங்களை ஆண்டவன் கற்பிக்கின்றார் என்றே எண்ணத் தோன்றுகிறது.

## பொதுக் குணங்கள்

இந்த பட்டாஸ் காய் செடிக்கும் நல்ல பல மருத்துவக் குணங்களை இறைவன் அருளி இருக்கின்றான். பொதுவாக இதன்

இலைச்சாறு கண்களுக்குத் தெரியாத கிருமி இனங்களையும், நுண் புழுக்கூட்டங்களையும் அழிக்கும் சக்தி கொண்டது. சீதளத்தைப் போக்கும்; உஷ்ணத்தை உண்டாக்கும். புற்று நோய்களைக் குணமாக்கும் சக்தி கொண்டது. ரத்தத்தில் சேர்ந்த குற்றத்தை தூய்மைபடுத்தும். பாம்புகடி விடங்களும் இதன் இலையால் தீரும். அன்றியும் கண்ணுக்குத் தெரியாத உட்புண்கள், ரணம், கட்டிகள் ஆகியவைகளை போக்கும் சக்தி உண்டு. இதன் வேருக்கு பூதப் பிரேத, பைசாச, ஆவியுலக மருள் போன்ற தோடங்கள் விலகும்.

## முறை விவரங்களில் சில

நகக்கண் சுற்று ;—விரல்களின் முனையில் ஊதிப் புடைத்து சிவந்து விண், விண் என்று வலியும் குடைச்சலும் உண்டாகி தாங்கமுடியாத வேதனை தருவது இந்த நகக்கண் சுற்று. இதை ஆஸ்பத்திரியில் கொண்டு போய் காட்டி ஆபரேஷன் செய்து சில சமயம் தையல் கூடப் போடுவதுண்டு. இந்த ரணம் ஆறுவதற்கு மாதங்கள் பலவாகும். இப்படி ஒரு கலையாக நோயை வளர்த்து விட்டது நவீன மருத்துவம். சிலந்தி நாயகன் இலையை எடுத்து வந்து, நீர் விடாமல் அரைத்து இந்த நகச்சுற்று விரலில் கட்டி வைக்க பட்டாஸ்காய் எப்படி வெடிக்குமோ, அதுபோல கட்டியை உடைத்து, அதிலிருந்து ரத்தம், சீழ், முளை யாவும் வெளியே இழுத்துக்கொண்டு வந்து நாலு நாளில் விரலை முன்போல் செய்து விடும். இது கைகண்ட பழங்கால முறை.

## கட்டிகளுக்கு தலைவன்

சிலந்தி என்றால் வீட்டின் கூரைகளில் உள்ள சிலந்திப்பூச்சிகளைக் குறிப்பதாக பொருள் கொள்ளக் கூடாது. இங்கு சிலந்தி என்றால் கட்டிகள் என்று பொருள். இரத்தத்தின் மாறுதல்களால் தூய்மை கெட்டு உடலில் ஆங்காங்கே தங்கி கட்டிகளாகக் கிளம்புகின்றன. கட்டிகளில் பலவிதமுண்டு. அது எந்தவிதமான கட்டியானாலும் சரி, இந்த சிலந்தி நாயகன் அவைகளுக்கு எல்லாம் தலைவன். கட்டிகள் எங்கேயிருந்தாலும் சரி, கவலையை விடுங்கள் இலையை இடித்துப் பிழிந்து சாறெடுத்து ஒரு தேக்கரண்டி அளவு சம அளவு காய்ச்சிய பசும்பாலில் காலை மாலை வெறும் வயிற்றில் சாப்பிட்டு வரவும். மேலுக்கும் கட்டிகளின் மேல் நீர் விடாமல் அரைத்து கட்டி வரலாம். உள்ளுக்குச் சாப்பிடுவதால் ரத்தத்தில் உள்ள கண்ணுக்குத் தெரியாத கிருமிகள் அழித்து கட்டிகளை உண்டாக்காதவாறு தடுத்தும், ஏற்பட்ட கட்டிகளைக் கரைத்துத்



தள்ளிவிடும். உடலின் உள்ளுறுப்புகளில் காணும் புற்றுநோய் ரணங்களும் கூட இதன் இலைச் சாற்றால் குணமாகிறது. மேலும் இரத்தத்தில் உள்ள சர்க்கரையும் குறைந்து விடுகிறது என்பது ஆச்சரியப்படும் விஷயமாகும்.

## கண் ரோகங்களுக்கு

பட்டாஸ் காயின் பூக்களையும், இளம் பிஞ்சு காய்களையும் சிறிது எடுத்து ஒரு அவுன்ஸ் சுத்தமான பன்னீர் விட்டு அதில் பொரித்த படிகாரம் 4 அரிசி எடை அளவு சேர்த்து நன்றாக கலக்கி 4-மணி நேரம் வைத்தபிறகு கண் கோளாறு கண்வலிகள், பார்வை மங்கல், சிவப்பு நிறமாகி கூசுதல், போன்ற கண் ரோகங்களுக்கு தினம் 1க்கு 4 தடவை இரண்டு துளி விட்டுவர அவையாவும் நீங்கி கண் சுத்தமாகும். நல்ல பார்வையும் காணும்.

## வேர் குணம்

அஷ்ட கர்ம மூலிகைகளில் சிலந்தி நாயகனும் ஒன்று. அதாவது பூதமாரண மூலிகையாகும். அகால மரணத்தால் உடலில் இருந்து நீங்கிய உயிர்கள் தன் அபிலாஷைகளை (விருப்பங்களை) நிறைவேற்றக் கருதி உலகில் உள்ள மானிடர்களை பற்ற முயற்சிக்கும். இப்படி அருவமாக உலவும் ஆவிகளுக்கு பூதகணங்கள் என்பர். தூய்மையற்ற பூதப்பிரேத பைசாச ஆவிகள் கோழை நெஞ்சுடையவர்களையும், பயங்கொள்ளியாக இருப்பவர்களையும் பிடித்து (உடலோடு மனிதர்களாக இருந்தபோது) நிறைவேறாமல் போன காரியங்களை பூர்த்தி செய்ய முயற்சிக்கும். இதைப் பேய்ப் பிடித்துள்ளது பிசாசு பிடித்துள்ளது என்பது உலக வழக்கு. இத்தகையபூத கணங்களின் செய்கையை முறித்துவிட பூதமாரண சக்தி கொண்ட மூலிகைகளின் மூலங்களில் சிலந்திநாயகன் வேரும் பயன்படுகிறது. முறைப்படி இதனைக் காப்பு கட்டி வேர் அறாமல் எடுத்துஉடலில் தரிக்க, எந்த பூத கணங்களும் அந்த உடலைப் பற்றாமல் ஓடிப்போகும்! இதை பொய் புரட்டு என்று சொல்வாருமுண்டு. இதோ பாருங்கள் கும்பமுனியின் பாடலை :

"சீதமறு மாவிடமும் தீரும் விழி நோய்களும்
பூதமொடு மருளும் போகும் காண் —மேதினியுள்
ஆயகத்துப் புண்கிரந்தி யாறுமயிலே! சிலந்தி
நாயகத்தினாலே நவில்" (கு. மு.)

## பாம்புக்கடி விடங்களுக்கு

சிலந்தி நாயகன் தும்பையைப் போல சகல பாம்புகடி விடங்களையும் போக்கும்.

### முறை விபரம்

செடியை வேருடன் எடுத்து அலசி இடித்துச் சாறு பிழிந்து 2 அவுன்ஸ் உள்ளுக்கும் கொடுத்து திப்பியை அரைத்து கடிவாயில் கட்டிவிட விடம் யாவும் முறிந்து விடும். பத்தியக் கட்டுப்பாட்டை தும்பைக் கட்டுரையில் கண்டு அதன்படி அனுசரிக்கலாம்.

சிலந்தி நாயகனை உபசரக்காக மேகராஜாங்க எண்ணைகளில் கலந்துகாய்ச்சுவது நாட்டு வைத்தியர்கள் பரம்பரை வழக்கமாகும். எனவே இதைத் தெரியாத நாட்டு வைத்தியர்கள் இருக்க முடியாது என்று துணிவாகக் கூறிவிடலாம். மகா மூலிகை எண்ணையிலும் இது சேர்க்கப்படுவது குறிப்பிடத் தக்கதாகும்.

சிலந்தி நாயகனை தெரியாதவர்கள் இனியாகிலும் வெட்கப் படாமல் பள்ளிச் சிறுவர்களைக் கேட்டு அதனை தெரிந்து வைத்தால் பலருக்கும் நன்மை செய்யும் வாய்ப்பு கிடைப்பதுடன் தனக்கே ஆபத்துக் காலத்தில் உதவுமல்லவா ?





# கொன்றை !

மனித சமுதாயத்திற்கு மிகவும் பயன்தரக்கூடிய மூலிகைகளை மக்கள் என்றும் மறக்கக் கூடாது என்பது நம் முன்னோர்களின் கருத்து. எனவே இத்தகைய மூலிகைகளில் இறையருட் சக்தி உள்ளது என்பதை காட்ட சிலாரூபமாக வழிபடும் இறைவனுக்கே அர்ப்பணம் செய்து வழி காட்டினர். சிவபெருமானுக்கு பிரிய மலர் களில் சிறப்புடையது கொன்றை! இன்றளவும் சிவாலயங்களில் கொன்றை மலர்களை குவித்து திரிபுரமெரித்த விரிசடை பித்தனும் சிவபெருமானை வணங்குவது வழக்கமாயுள்ளதல்லவா ?

"பொன்னார் மேனியனே புலித்தோலை யரைக்கசைத்து
மின்னார் செஞ்சடைமேல் மிளிர்கொன்றை யணிந்தவனே"

— தேவாரம்.

இங்ஙனம் இறையருட்சக்தியோடு இணைந்த இந்த கொன்றை யைப் பற்றியும் விரிவாக நாம் தெரிந்து கொள்வது அவசியமே. கொன்றை என்பது மரவகுப்பு. இதில் அநேகஉட்பிரிவுகள் உண்டு சிறு கொன்றை, சரக்கொன்றை, செங்கொன்றை, மயில் கொன்றை, கருங்கொன்றை, மந்தாரக்கொன்றை, முட்கொன்றை, கிளிமூக்கு கொன்றை, புலிநகக் கொன்றை என்பன போன்றவைகள் உண்டு. மேற்கூறிய இனங்களில் தற்போது கவனிப்பார் இன்றி சிலசண்ணல் காண்பதுகூட அரிதாகி விட்டது! பொதுவாக கொன்றை இனம் யாவும் ஆவாரை குடும்பத்தைச் சார்ந்தது! ஏறத்தாழ இதன் பூக்களும் இலையும் ஆவாரைச் சாயல் உடையதாயினும் ஆவாரை குத்துச்செடி, கொன்றை சிறுமர வகுப்பு.

கொன்றையில் உட்பிரிவுகள் பல இருந்த போதிலும், இவை களை இரண்டு விதமாகப் பிரிக்கலாம். ஒன்று சிறுகொன்றை, அடுத் தது பெருங்கொன்றை. சிறுகொன்றைக்கு இலைகள் ஆவாரைப் போன்றே இருக்கும். பூக்கள் ரோஜா நிறமாகி இருக்கும். இரண் டாவது பெருங்கொன்றை, இதற்கு சரக்கொன்றை என்ற பெயரும்

## கொன்றை






உண்டு. கிராம மக்கள் இதனை கொண்ணை மரம் என்பார்கள் இந்த சரக்கொன்றைக்கு இலை நுனை இலை போன்றும் பூக்கள் சரம் சரமாக மஞ்சள் நிறமாகி தொங்கும். இந்த சரக்கொன்றையைப் பிறகு கவனிக்கலாம். முதலில் சிறுகொன்றையைப் பற்றி இங்கு நாம் தெரிந்துகொள்வோம்.

சிறு கொன்றையின் ஒரு கிளையை எடுத்துப் பார்த்தால் இந்த படத்தில் காட்டியபடி இருக்கும். இலைகளின் இடையே பூக்காம்பு களில் செந்நிறமான பூக்கள் மொட்டுகள் நிறைந்து இருக்கும். இப்பூக்களில் மயில் தலையில் கொண்டை இருப்பதுபோல பூக்களின் இதழ் எதிரே மகரந்தக் காம்புகள் 4 முதல் 6 வரையில் நீண்டு மிருக்கும். இத்தகைய பூக்கள் உள்ள இனத்தை மயில் கொண்ணை என்றும் கூறுவது கிராம வழக்கு. சிறுகொன்றை, செங்கொன்றை, மயில்கொன்றை என்பது எல்லாம் ஒரே இனமாகிய கொன்றையை பற்றித்தான் குறிப்பிடுகிறார்கள் என்பது ஆய்ந்தவர்களுக்குப் புலனாகும். கொன்றைக்காய் முருங்கக்காய் போல சிறிது சப்பை யாக செங்கருமை நிறத்துடன் காணும்.

### குணாதிசயம்

கொன்றையின் இலை, பூ, மரப்பட்டை, வேர்ப்பட்டை ஆகி யவைகள் மருத்துவப் பயனாகிறது. பொதுவாக தேகத்தை அழிக் கும் கிருமி கூட்டத்தை ஒழிக்கும் கிருமிநாசினி யாகிறது. வாய்வு நீக்கி கோழையைபோக்கும். உடலை உரமாக்கும் சக்தி கொண்டது. சுருங்கக் கூறின் ஆவாரைக் கட்டுரையில் குறிப்பிட்ட குணங்கள் இந்த கொன்றைக்கும் உண்டு.

### வேர் பட்டை

செந்நிற பூவுள்ள இந்த கொன்றை மரத்தின் வேர்ப் பட்டை யை 100 கிராம் எடுத்து பச்சையாக இடித்து 4 குவளை தண்ணீர் விட்டு 1 குவளையாகும் வரைக் காய்ச்சி தினம் இருவேளையாகக் குடிக்க சரீர பலமும், அழகும் வசீரகரமும் உண்டாகும். மேலும் உஷ்ணத்தால் வந்த சொறி, தினவு, நமட்டுச் சிரங்குகள், மேக ரணம், வாத, வாய்வு வலிகள் யாவும் குணமாகும்.

### மரத்தின் பட்டை

மரப் பட்டையை எடுத்து 100 கிராம் அளவு பச்சையாக இடித்து 2 குவளை நீர்விட்டு காய்ச்சி அரை குவளையாக்கி தினம் 1 வேளை சாப்பிட்டுவர மலச்சிக்கலை நீக்கி, வயிற்றிலுள்ள பூச்சிகளை

போக்கும். இத்துடன் நிலாவிரை, சுக்கு, வகைக்கு 20 கிராம் தூள் செய்து போட்டுக் கொள்வது மலத்தை நீராக்கி வெளித்தள்ள உதவும்.

## வெண் குஷ்டத்திற்கு

கொன்றை மரப்பட்டை, வேர் பட்டை, வில்வப்பழ ஓடு இவைகளை உலர்த்தி சம எடை நிறுத்தி, இடித்து தூள் செய்து வைத்துக்கொண்டு அரை தேக்கரண்டி வாயில் போட்டு இளம் சூடான பசும் பால் குடித்து வரவேண்டும். இப்படி காலை, மாலை (40) நாள் 1, 2, மண்டலம் தவருமல் சாப்பிட்டுவர வெண்குஷ்டம் மேகத்தால் வந்த சர்ம வெளுப்பு சொறி, தினவு ஆகியவைகள் நீங்கும். இந்த தூளையே மேலுக்கு தேங்காய் எண்ணெயுடன் கலந்து காய்ச்சி தடவிவர சர்ம வெளுப்பு மாறி இயற்கை நிறம் காணும்.

## சுவாச காசம் நீங்க

கொன்றை பட்டை, தூதுவளை சமூலம் இவை இரண்டும் சம எடையாக எடுத்துலர்த்தி, இடித்து தூள்செய்துவைத்துக்கொண்டு திரிகடி பிரமாணம் (15 அரிசி எடை) தேனில் குழைத்து சாப்பிட்டு பின் காய்ச்சிய பசும் பால் குடித்து வரவேண்டும். இங்ஙனம் காலை மாலை இரண்டு வேளையாக தொடர்ந்து சாப்பிட்டு வர ஆஸ்துமா, சளி கபக்கட்டு கஷ்ட சுவாசம் நீங்கிவிடும்.

## இலை

இலையை அரைத்து கண்களின் இமைகளில் வைத்துக் கட்டலாம். இதனல் கண் சிகப்பு, தொற்று நோயாக வரும் கண்ணேய்கள் யாவும் நீங்கும். இலையை இடித்து பிழிந்த சாற்றை அளவுடன் சர்க்கரை சேர்த்து அரை அவுன்ஸ் குடிக்க மூலரோகம், மலக்கட்டு நீங்கி ஆசனத் தினவு, கடுப்பு ஆகியவை போகும். தேக கட்டும் அழகும் உண்டாகும் என்பதை சித்தர் நூல்களில் காணலாம்.

## பூ

கொன்றை பூவைப்பற்றி பாடாத சைவசமய நாயன்மார்களே கிடையாது எனலாம். பூவின் ஆராய்ச்சியில் நம்நாட்டு சித்தர்களை விட சைவசமய பெரியார்கள் ஒருபடி மேலே சென்று ஆய்ந்து



உள்ளனர் என்பதை துணிவாகக் கூறலாம். கொன்றைப்பூவில் தேன் மிகுதியாம்! அந்த தேனின் குணம் பிறப்பைஅறுத்து பெரு வாழ்வு தருமாம்! திருவாசத்தின் மணிவாசகத்தை பாருங்கள் :

"தேனோடு கொன்றை சடைக்கணிந்த சிவபெருமான்"

(திருப்பூவல்லி)

"கள்ளும் வண்டும் அருமலர்க் கொன்றையான்"

(திருச்சதகம்)

சிவபெருமான் தலையில் அணிந்து கொண்ட பொருள்களுக்கு அபார சக்தி உள்ளது என்பதை அடியார்கள் பாக்களால் பாடி விளக்கம் தந்துள்ளனர். கொன்றைப் பூவின் தேனுக்கு மேக ரோகங்கள் பித்த உஷ்ணம், கண் ரோகங்கள், காதுநோய் முதலியவைகள் யாவும் நீங்கிவிடும். காது நோய் நீங்க கொன்றைப் பூக்களை சேகரித்து எள் எண்ணெயில் போட்டு காயவைத்து தினம் 2 துளி விட்டுவர வேண்டும். கண்நோய்கள் தீர புதிய பூக்களை எடுத்து கண்களின் இமையில் வைத்து கட்டிவர வேண்டும்.

## பித்த மேகம் உஷ்ணம் எரிச்சல் நீங்க

நல்ல சிகப்பான பூக்களை 200 கிராம் எடுத்து மைபோல அரைத்து பசு வெண்ணெயில் கலந்து காலை வெறும் வயிற்றில் சாப்பிட்டுவர மேக அனல், ரணம், உட்சூடு, மேகநீர் ஒழுக்கு நீங்கும். ஒருசில சர்க்கரை வியாதிகளில் கூட இது நல்ல குணம் கொடுப்பதாக கிராமவாசிகளின் நம்பிக்கை, சர்க்கரை வியாதிக்கு புளித்தமோர் கலந்து கொடுத்தல் அவசியமாகும்.



# நஞ்சு முறிச்சான்

நஞ்சு முறிச்சான் என்ற மூலிகை கொடி வகையைப் போன்று வளரும் ஒரு பூண்டு. உத்தாமணியைப் போல இது எங்கும் வளரக்கூடியது. இதை கிராம மக்கள் 'கக்குப்பாலை' என்றும் "நஞ்சா முஞ்சா கொடி" "நஞ்சறுப்பான்" என்றும் பல வகையாகக் கூறுவது உண்டு. பாலைக் கொடியினத்தைச் சார்ந்த இந்த மூலிகைக்கு அகராதிகளில், கொடிப்பாலை, நஞ்சு முறித்தான், கொண்டைச்சாணி என்று குறிப்பிடப்படுகிறது. ஆங்கில வார்த்தையில் "ஆசில்பியஸ் பிரோலி பெரா" (Ascelpius Prolifera) என்று கூறுவர்.

இந்தக் கொடிவகையின் இலைகள் ஒரு சிறிய ஆலம் இலை போல நீண்ட வடிவாக இருக்கும். கொடிக்காம்பில் இலைகள் நேர் எதிராக இரட்டையாக இலைவிட்டு ஆறங்குல இடைவெளிக்கு இலைகளை விட்டு வளரும். இலையின் அடிப்புறம் மிருதுவாகவும் தொட்டால் பட்டுப்போன்றும் இருக்கும். மேல் பக்கம் பச்சை நிறமாகவும் சிறிது சொற சொறப்பும் காணும்.

இம் மூலிகையின் பெயரைக் கேட்ட மாத்திரத்திலேயே இதன் செய்கையையும் ஒருவாறு ஊகித்து அறியலாம். நஞ்சு முறித்தான் என்றால் விடத்தை முறிக்கும் தன்மையை உடையது என்று பொருள். விடத்தால் பாதிக்கப்பட்டவர்களுக்குத்தான் இது விடத்தை முறிக்குமே தவிர, விடமில்லாத ஆரோக்கிய உடம்பினருக்குப் பயன்படாது. மற்றும் உணவு பதார்த்தமாக இதனை உபயோகப்படுத்துவது வழக்கில் கிடையாது. எவ்வளவு பொருத்தமாக இம் மூலிகைக்கு பெயர் கொடுத்துள்ளனர் நம் பழம் பெரும் சித்தர்கள். கூர்ந்து கவனியுங்கள்.

விடத்தையெல்லாம் முறிக்கக் கூடிய தன்மை வாய்ந்த இந்த மூலிகைக்கு நஞ்சறுப்பான், நஞ்சு முறித்தான் என்ற பெயர் எவ்வளவு பொருத்தம் பாருங்கள்! இதன் வேர் முதல் கொடிக்காம்பு, இலை அனைத்திற்கும் வாந்தி உண்டாக்கும் செய்கையும், உடம்பில் சகல உறுப்புக்களிலும் பாய்ந்துவிட்ட விடத்தைத் முறிக்கும் சக்தியும் உண்டு.



## உபயோக முறை

மனிதர்களுக்கு உடம்பில் விடம் வியாபிக்க மூன்று வழிகள் உண்டு. ஒன்று பலவித ஜந்துக்களின் விடக்கடியால் உண்டாவது. இரண்டு தாவர வகைகளிலே விட பூரிதமான சிலவகை கிழங்கு வேர், புஷ்பங்கள் உண்டு. இவைகளை தின்றவர்களுக்கு விடம் ஏறி மரணம் சம்பவிப்பது உண்டு. மூன்றுவதாக ரச, பாஷாண ரசாயன வகைகளால் உண்டாகும் விடம். ஆக இந்த மூன்றுவித விடத்தன்மைகளை உடம்பில்இருந்து இந்த நஞ்சறுப்பான் மூலிகை முறித்து விடுமாம்! இதனை அகத்திய பெருமகனர் மிக அழகாக வர்ணித்துள்ளார்.

"தொடு நஞ்சு நாவார துய்க்கு நஞ் சுமற்றோ
றிடு நஞ்சுந் தாவர நஞ்சேறிப் — படுநஞ்சுங்
கூண்டுடனே காதோ குயின் மொழியாய்!
நஞ்சறுப்பான்
பூண்டுதனை நீ யெடுக்கும்போது"

அரசாங்க மருத்துவ மனைகளில் இம்மாதிரியான ஆபத்துக்கு உதவும் மருந்துகளையெல்லாம் வைத்துப் பயன்படுத்த வேண்டும்! எங்கே செய்கிறார்கள்?

சில கிராமங்களில் இந்த நஞ்சருப்பான் மூலிகையை வைத்து கொண்டு விடக்கடிகளுக்கு வைத்தியம் செய்வார்கள். இவர்களுக்குப் பாம்புகடி வைத்தியர் என்று பெயர். பாம்பு கடித்து விட்டு மயக்கமாகி வாயில்நொப்பும் நுரையும் தள்ள சவம்போல எடுத்துக் கொண்டு அந்த வைத்தியர்வீட்டு அருகே கொண்டு போய்ப்போடுவார்கள். அந்த வைத்தியர் இந்த மூலிகையின் வேரை ஏற்கனவே பக்குவப்படுத்தி சூரணமாக செய்து வைத்திருப்பார். மெல்ல 2 சிட்டிகை எடுத்து மூக்கின் துவாரத்தில் வைத்து உள்ளே ஊதுவார் சில நிமிடங்களுக்கெல்லால் தூங்கி எழுந்தவன் போல சுற்றும் முற்றும் பார்ப்பான் நோயாளி. பின்பு அந்த நோயாளி உடம்பிலுள்ள விடம் வெளியாக நஞ்சு முறிச்சான் இலையை அரைத்து எலுமிச்சங்காய் அளவு உள்ளுக்கு கொடுக்க விடம் எல்லாம் பச்சை நிறமாக வாந்தியாகி நோயாளி பிழைப்பான். கடிவாயில் இதைத் தான் வைத்துக் கட்டுவார்கள். ஆனால் அந்த வைத்தியரை அணுகி, 'இது என்ன மூலிகை' என்று கேட்டால் போதும்!



உடனே அவர் முகத்தை சுளித்துக்கொண்டு, "போய்யா! உன் வேலையைப் பார்த்துக்கொண்டு" என்று பாம்பு போல சீறி விழுவார். இப்படி எல்லா மூலிகைகளையும் ரகசியமாக்கித் தான் இன்று ஆங்கிலயரின் ஊசி நம்மைப் பதம் பார்க்கின்றது.

பாம்பு போன்ற கடும் விட ஜந்துக்களின் விடம் முறிய 10 வகை மூலிகைகள் உண்டு. நஞ்சு முறித்தான் முக்கியமானதும் தும்பை போன்று முதல் சிகிச்சைக்கு உரியதுமாகும். இது சித்த வைத்தியர்கள் அவசியம் தெரிந்துகொள்ள வேண்டிய ஒன்றாகும்.

## விட ஜந்துக்களின் கடிகளுக்கு

எந்த விட ஜந்துக் கடியானாலும் இதன் இலையை அரைத்து சிறுவர்களுக்கு நெல்லிக்காய் அளவும், பெரியோர்களுக்கு எலுமிச்சங்காய் அளவும் உள்ளுக்குக் கொடுத்தல் வேண்டும். உடனே வாந்தியாகி, விடம் முறியும். கடித்த இடத்தில் இதே இலையை அரைத்துக் கட்டி உப்பில்லாப் பத்தியம் 3 நாளைக்கு வைக்க வேண்டும். நோயாளி மயக்க நிலையில் இருப்பின் இதன் வேரை உலர்த்தி தூள்செய்து மூக்கின் வழியாக விட்டு ஊதிவிட நினைவு வரும். பிறகு மேல் கண்ட சிகிச்சை செய்க.

## தாவர விடங்கள் முறிய

நாபி, கலப்பைக் கிழங்கு, அரளி விதை, வேர் ஆகியவைகளை தவறி உண்டவர்கள், தற்கொலை நோக்கத்துடன் செய்தவர்கள் ஆகியவர்களுக்கு உண்டான விடங்களும் இம் மருந்துகளால் உடல் நலம் கெட்டவர்களுக்கும் நஞ்சு முறிச்சான் இலை, கொடி, வேர் யாவும் எடுத்து உலர்த்தி வைத்துக்கொண்டு காலை, மாலை இரண்டு சிட்டிகையளவு தேனில் உண்ணக் கொடுத்து, கடும் பத்தியம் வைக்க, விடங்கள் யாவும் முறிந்துவிடும். இடு மருந்து செய்கை முறிய சமபாகம் விளாம்பழ ஓடு தூள் செய்து சேர்க்கலாம்.

## ரசம், வீரம், பூரம் போன்ற பாடாணங்கள் விடம் முறிய

ரசம், வீரம், பூரம் போன்ற இயற்கைப் பாடாணங்களைச் சில வைத்தியர்கள் சுத்திமுறைபடி செய்யாமல் மருந்து கொடுப்பார்கள்.

இதனால் வாய் பிடிப்பு, உடல், குடல் எல்லாம் வேக்காடாகி, இவைகளில் விடம் நாள்பட்டு உடல்ஆரோக்கியத்தைக்கெடுக்கும். இந்த விதமான விடங்களின் தீச்செயல் நீங்க இந்தச் செடியின் இலை வேர் கொடியை எடுத்து உலர்த்தி சமபாகம் கெட்டி மிளகுத் தூளையும் சேர்த்து தினம் இரண்டு வேளையாக இரண்டு சீட்டிகை அளவு தேனுடன் கொடுத்து உப்பில்லாத மோர் சோறு பத்தியத் தில் வைக்க ரசபாடாண வேகங்கள் தணியும்.

நஞ்சு முறிச்சானை ஆரோக்கியமுள்ளவர்களுக்குக் கொடுத் தல் கூடாது. என்றாலும் விடத்தால் ஆபத்து நிலையில் உள்ளவர் களுக்கு அமுதமாகும் என்பதனை மறக்கலாகாது.



# நேத்திரப் பூண்டு

மனிதனுக்கு மிக முக்கியமான அவயம் கண்கள். என்ன தான் இருந்தும், கண்கள் இல்லாதவன் வாழ்க்கை இருளிக்குச் சமம் அல்லவா? எனவே இறைவன் சிருஷ்டியில் கண்களுக்கும் பயனாகும் சில வகை மூலிகைகளைப் படைத்தார். அவைகளுக்குப் பொருத்தமான பெயர்களையும் சித்தர்கள் மூலம் கொடுத்துள்ளார்.

நேத்திரம் என்பது சம்ஸ்கிருதப் பெயர். கண்கள் என்று தமிழில் பெயர். நேத்திரப்பூண்டு என்பது கண்களுக்குப் பயன் படும் என்ற கருத்துடன் வடமொழிச் சொற்களைப் பயன்படுத்தி நமது நாட்டின் சித்தர்கள் இதற்கு 'நேத்திரப் பூண்டு' என்ற பெயர் கொடுத்துள்ளனர்.

நேத்திரப் பூண்டு என்ற இந்த மூலிகைக்கு அகராதியில் என்ன பெயர் உண்டோ, இல்லையோ? ஆனால் கிராமப் பொது வழக்காக இதனைக் காண்பித்து, 'இதற்கு என்ன பெயர்' என்று கேட்க, நேத்திரப் பூடு, நேத்திரப் பூண்டு, நேத்திரம் துலக்கி என்றுதான் கூறுவார்கள்.

இந்த நேத்திரப் பூண்டு மற்றைய நாடுகளில் உண்டா இல்லையா, என்பது சர்ச்சைக்குரிய விஷயமாகும். ஏனெனில் இந்திய மூலிகைகளைப் பற்றி நன்கு ஆராய்ந்து வெளியிட்ட வட நாட்டு மூலிகை நிபுணர்களான-நாட்டினி, சோப்ரா. கோரா போன்ற அறிஞர்கள் எழுதிய நூல்களிலும் இந்த நேத்திரப் பூண்டு இடம் பெறவில்லை. எனவே இந்த நேத்திரப் பூண்டு தென் னாட்டிற்கே உரிய விசேஷப் பூண்டு என்றால் மிகையாகாது. இந்தப் பூண்டைப் பற்றிய உண்மைகளை மொழி பாஷ்யங்களைக் கற்று பாண்டித்தியம் பெற்ற ஆயூர்வேத பண்டிதர்களைக் கேட்டால் கூட, அவர்கள் விபரம் தெரியாதவர்களாகத்தான் இருக்கிறார்கள். வடமொழியே தவிர வடமொழி அகராதிகளிலும் இந்தப் பூண்டு காணக் கிடைக்கவில்லை.

## நேத்திரப் பூண்டு





கரப்பான் பூண்டு, திகைப்பூண்டு, அறிவாள்மனைப் பூண்டு சாம்பிராணிப் பூண்டு, எழுத்தாணிப் பூண்டு, கணப்பூண்டு, குடியோட்டுப்பூண்டு, குளித்திப் பூண்டு, பல்லிப் பூண்டு, வெள்ளை பூண்டு என்ற பெயர்கொண்ட பூண்டினம் யாவும் தமிழகத்தின் சிறப்புள்ள அம்சங்களான மூலிகைகள் என்று திடமாக நம்பலாம்.

நேத்திரப் பூண்டு என்பது கொடியோடிப் படரும் இனம். ஏறத்தாழ சிலந்திநாயகம் போன்று இலைகளை உடையது. ஆனால் பொடுதலை இலைக்கு உள்ள வரி வடிவம் போன்ற பற்கள் இலையின் ஓரம் உண்டு. அறுகம்புல் கொடிபோல ஓடிப் படர்ந்து ஒவ்வொரு கணுவிலும் வேர்களை விட்டு மேலே கொத்தாக எதிர் எதிராக நான்கு இலைகளை விட்டு, ஒரு பச்சைப் பூ போன்று அழகாகப் படத்தில் காட்டியபடி இருக்கும். இது சாதாரணமாக சதுப்பு ஈரப்பசை உள்ள வாய்க்கால், நீரோடைகள், நஞ்சை நில வரப்பு ஓரங்களில் ஏராளமாமக் கிடைக்கும்.

### குணதிசயம்

இலை, கொடி, வேர் இவைகள்தான் மருத்துவப் பயன் உடையதாகிறது. கண் ரோகங்களான, பார்வை மங்கல், எரிச்சல் புகைபோல மறைதல். கண் சிகப்பு, தொற்று நோய்கள், கண் பீளை கட்டி இமை திறக்க முடியாத கண்களுக்கும், மற்றும் வயதானவர்களுக்கு உண்டாகும் வெள்ளெழுத்து (சாளேச்ரம்) முதலியவைகளைப் போக்கி, பார்வைக்குத் தெளிவையும், குளிர்ச்சியையும் உண்டாக்கிவிடும். கண் நரம்புகளுக்குப் புத்துணர்ச்சியைத் தந்து கண்களில் உள்ள அழுக்குகளை வெளியேற்றி பார்வையையும் விழிகளையும் சுத்தப்படுத்தும்.

### உபயோக முறை

இந்தப் பூண்டை கொடி, இலை, வேருடன் எடுத்து சுத்தமான நீரில் அலசி, சிறுகச் சிறுக அரிந்து 5 பலம் எடுத்து ஒரு மெல்லிய துணியில் இளகலாக முடிச்சு போட்டு, அதை ஒரு பீங்கான் ஜாடியில்வைத்து அதில் 10பலம் அசல் எள் எண்ணையை விடவும் பிறகு மேல் வாயை துணிகொண்டு கட்டி, 15 நாளைக்குக் கடும் வெய்யிலில் வைத்துக் கொள்க. இதில் காலை மாலை இரண்டு துளி கண்களில் விட்டு வரவும். முதலில் சிறிது கண் எரிச்சலாகிக் கண்களிலிருந்து நீர் வடிந்தபின் எரிச்சல் அடங்கி குளிர்ச்சியாகும்.






இதன் விதை விசேடமாக உணர்ச்சியைத் தூண்டி சுக்கில விருத்தி யாகி காமத்தைக் கிளப்பும் குணமுள்ளதாகும். சிறுநீரைப் பெருக்குவதில் கீழாநெல்லி, நாயுருவி, நெருஞ்சில் ஆகியவை களுக்கு ஒப்பிட முடியாது என்ருலும் நீரை பெருக்கி தள்ளுவதில் முதலிடத்தை நீர் முள்ளிக்குத்தான் கொடுக்கலாம். மூத்திர அடைப்பு, வாத விக்கங்கள், நீர் குளுவான், பாண்டு, வாத சுரங்கள் ஆகியவைகளைத் தடுக்கும்.

## நீர்முள்ளிக் குடிநீர்

நீர் முள்ளிச் செடியை இளசாக வேருடன் எடுத்து அலசி அதை அப்படியே இடித்து மண்சட்டியில் போட்டு ஒரு பக்கா படி தண்ணீர் விட்டு அதோடு நெருஞ்சில் விதை, சோம்பு, தனியா, கொத்தமல்லி விதை வகைக்கு 50 கிராம் அளவு சிதைத்து போட்டு கொதிக்கவைத்து கால்படி நீராகும் வரை காய்ச்சிய குடிநீரை வேளைக்கு இரண்டு அவுன்ஸ் (100 மி. லிட்டர்) வீதம் தினம் 4 முறை கொடுத்துவர நீர் ஏறி ஊதிப் பெருத்த சரீரம் கரையும். அத்துடன் வாத வீக்கங்கள், கீல்வாதம், முட்டிகள் வீங்கி பெருக்கும் நரித்தலை வாதம், மூத்திர நீர்த்தாரை அடைப்பு ரணம் அழற்சி முதலியவைகளும் 3 நாளில் தீரும். மகோதரம் என்ற நீர்கோர்த்து வயிறு பெருத்து வீங்கி காணும் தீராத ரோகங்களுக்கு 8 முதல் 12 நாட்கள் கொடுக்க மகோதர விக்கம் கரைந்துபோயுள்ளது.

## ஊறல் குடிநீர்

நீர்முள்ளி இலையை மட்டும் எடுத்து நிழலில் உலர்த்தி ஒரு பிடி எடுத்து அதை ஒரு மண் சட்டியில் போட்டு கால்படி புளித்த கழுநீர் காடி விட்டு அத்துடன் நாயுருவி இலையும் 10 போட்டு மூடி 48 மணி நேரம் கழித்து எடுத்து வடிகட்டி வைத்துக் கொண்டு வேளைக்கு கால் அவுன்ஸ் (25 மி. லிட்டர்) 2 மணி நேரத்திற்கு ஒரு முறை 3 நாள் கொடுக்க நீர் கோர்வை, மூத்திர விடப்பூண்டு, மகோதரம் சகலவிதமான வீக்கங்கள் மூத்திர அடைப்புகள் யாவும் நீங்கிவிடும்.

இதுபோல நீர்முள்ளி வேரை மட்டும் தனியாக 1 பங்கு எடுத்து இடித்து கொதிக்கும் நீர் 10 பங்கு சேர்த்து மூடி 24 மணி நேரம் ஊரவைத்து 1 அவுன்ஸ் 2 மணிக்கு ஒரு தரம் கொடுத்து வர மேற்கூறியவை விலகும்.

## நீர்முள்ளி உப்பு

பிரண்டை, வல்லாரை, நாயுருவி போன்ற மூலிகைகளில் உப்பு எடுக்கும் முறைபோலவே இந்த நீர் முள்ளியைக் காய வைத்து கொளுத்தி எடுக்கும் சாம்பலில் உப்பு இருந்து வந்தது. இவை எல்லாம் தற்காலம்நாகரீக மருத்துவ முறைகளால் மக்களும், மருத்துவர்களும் மறந்தே போயினர். இந்த நீர்முள்ளி உப்பை தகுந்த அநுபானந்தில் ஒரே ஒரு அரிசி எடை கொடுக்க எடை கூடுதலாகி உடம்பில் ஏறிய உப்புநீர் வாத, பித்த சிலேத்தும நீர் யாவும் சூரியனைக் கண்ட பனி போல் நீங்கும். மகோதர வியாதிக்கு நவீன மருத்துவத்தால் சலாகை போட்டு வெளியே நீரை எடுக்கும் முறைகள் எல்லாம் அந்த காலத்தில் இத்தகைய உப்புக்களால் எளிய முறையில் தீர்த்து வைத்துள்ளனர் என்றால் மிகையாகது.

## நீர்முள்ளிச் சாம்பல்

மேற்கூறிய முறையை தயாரிப்பது கடினம். மேலும் சித்த மருந்துவ முறை தெரிந்தவர்களால்தான் உப்பு தயாரிக்க இயலும். ஆனல் நீர்முள்ளியை வேருடன் எடுத்து தேவையான அளவு உலர்த்திக் கொளுத்திய சாம்பலை வேண்டிய அளவு சன்னமாக தூளாக்கி ஒரு புட்டியில் வைத்துக் கொள்ளவும்.

இந்த சாம்பலில் தினம் இருவேளை காலை, மாலை 1 டீஸ்பூன் அளவு எடுத்து வென்னீரில் கலக்கி கொடுக்க மேற்கூறிய வியாதிகள் நாளடைவில் நீங்கிவிடும் என்பதில் ஐயமில்லை. ஆனால் இதற்கு இச்சாபத்தியமும் பொறுமையும் அவசியமாகும்.

## சாம்பல் பற்று

இந்த நீர்முள்ளிச் சாம்பல் கை, கால்களில் காணும் நரித்தலை வாதம் கீல்வாத விக்கம், விடப்பாண்டு, விக்கம் மகோதரம் ஆகியவைகளுக்கு வென்னீரில் கரைத்து காலை மாலை பற்றுபோட்டு வர வீக்கங்கள் யாவும் கரைந்து விடும்.

## விதை

நீர்முள்ளி விதை எளிதாக எல்லா நாட்டு மருந்துக் கடைகளில் கிடைக்கும். எனவே மூலிகை பச்சையாக கிடைக்காத இடங்களில் கடைகளில் வாங்கி உபயோகிக்கலாம். நீர்முள்ளி



விதை 1 பலம் நெருஞ்சி விதை அரைபலம், வெள்ளரி விதை கால் பலம் இவைகளை உலர்த்தி சுத்தம் செய்து அரைப்படி நீரில் போட்டு கால்படியாகும் வரை காய்ச்சி அதில் பனங் கல்கண்டு ஒருபலம் சேர்த்து காலை மாலை இரண்டு வேளை 1 முதல் 6 நாள் சாப்பிட்டுவர உடலில் எந்த காரணத்திலும் உண்டான துர்நீர்கள் கழியும். மூத்திர எரிச்சல், தடைமூலம், மேகநீர், வாதநீர், உடல் காங்கை ஆகியவைகள் நீங்கி சப்த தாதுக்களும் வலுவடைந்து உடல் பலமும் தாது புஷ்டியும் உண்டாகும்.

இதன் விதையை தாதுபுஷ்டிலேகியங்களில் முக்கிய உப சரக்காக சேர்ப்பது சித்த மருத்துவத்தின் பொது விதியாகும்.

## நீர்போலாகிய சுக்கிலமும் கட்ட

நீர்முள்ளி விதை அரை பலம் பாதம் பருப்பு 4 மட்டும், வெள்ளரி விதை கால்பலம் கசக்கசா கால்பலம் இவைகளைப் பசும் பாலில் ஊரவைத்து ஒரு மணி மணிநேரம் கழித்து அரைத்து ஆழாக்கு பசும் பாலில் காய்ச்சி இரவு நேரம் அரை முதல் ஒரு மண்டலம் சாப்பிட்டுவர, நீற்றுப்போன தாது கட்டி உடல் பலமும் கலவி இன்பத்தில் நிர்வாகமும் உண்டாகும்.

" பாண்டு குளுப்பை யறும் பாரில் வரு நீரேற்றம்
மாண்டுவிடும் நீர்க்கட்டு மாறுங்காண் பூண்டதொரு
வீக்கமெலாம் நீராய் விடுமே நீர் முள்ளிக்குத்
தாக்குமயில் விழியாய் காற்று " (கு. மு.)

நீர்முள்ளி அகராதிப் பெயர்களாவன. துரகமூலம் இக்குரம், காகண்டம், முண்டகம். நிகதம் என்பனவாகும், வாசக அன்பர்கள் வீக்கம் கரையும் மூலிகைகளில் நீர்முள்ளி ஒன்று என்பதை நினைவில் கொள்ளுதல் அவசியமே.



# புளிய மரம்

புளிய மரத்தை தெரியாதவர்கள் இல்லை எனலாம். ஆனால் அதன் மருத்துவப் பயனறியாதார் எத்தனையோ பேர்! புளிய மரமா வெட்டிமுறி! எவ்வளவு விறகாகும், கரியாகும் என்று எடை போடுவதில் தான் பலரும் குறியாயிருக்கிறார்கள். விறகு, கரி பஞ்சம் அவ்வளவு உச்சநிலை அடைந்துள்ளது.

புளியமரம் இமயம் முதல் குமரி வரை இந்தியாவில் எங்கும் காணக்கூடியதே. ஆனாலும், வாழை, தென்னை போன்று இதுவும் தென்னாட்டிற்கே உரியதாகும். இதில் உள்ள மருத்துவப் பயன்கள் நாகரீகப் போக்கால் மறைந்மொழிந்து போயின. ஆனி, ஆடி, ஆவணி மாதங்களில் இதன் இலைகள் உதிர்ந்து துளிர்விடும் புரட்டாசி, ஐப்பசி, கார்த்திகையில் பூத்துக் குலுங்கும். மார்கழி, தை, மாசியில் காய்த்துத் தொங்கும். பங்குனி, சித்திரை, வைகாசியில் பழுத்து உதிரும். ஆக நான்கு பருவங்கள். ஆண்டு ஒன்றுக்கு ஒரே தடவை காய்க்கக்கூடியது. பல்லாண்டு நின்று வளரக்கூடிய மாபெரும் விருட்சங்களில் புளியமரமும் ஒன்று இதை பண்டைய மக்கள் மனைக்குள், முருங்கை, வேம்பு போன்று விரும்பி வைத்து வளர்த்ததாக தெரியவில்லை. ஆனால் ஊர் ஒதுக்குப் புறங்களான தோப்பு, துறவு, காடு, மலை பெருவழிச் சாலைகள் ஆகிய இடங்களில் கவனிப்புயின்றியே இவை வளர்வதைக் காணலாம். புளியமரம் நிழல் தரும் மரமானாலும்கூட இதனடியில் தங்கி இளைப்பாறுவது கெடுதல்தான்! இம்மரத்தினடி உஷ்ண வாயு சம்மந்தப்பட்டது. புளிய மரத்திலுள்ள பூச்சிகள் கடித்தால் அதற்கு வீரியமும் கெடுதலும் அதிகம்.

"புளியம் பூ நாகம், என்று ஒரு பாம்பு இருக்கிறது. இது கடிப்பதே தெரியாது. கொடுமையான நஞ்சுடையது" என்றும் ஒரு சிலர் சொல்வதுண்டு. இதற்காக ஒரு சமயம் பல மரங்களில் தேடியும் இந்த புளியம்பூ நாகத்தைக் கண்டுபிடிக்க முடியவில்லை. இதைப் பற்றி அனுபவமுள்ள பெரியாரைக் கேட்டதில் அவர் சொன்னதாவது :- இப்படி ஒரு நாகம் புளிய மரத்தில் கிடையாது.



புளியம் பூவைப் போன்ற நிறத்தை யொத்த பாம்புக்கு இம்மாதிரி பெயர் உண்டு என்று விளக்கி, அந்தப் பாம்பை ஒரு பாம்பாட்டியிடம் காண்பித்தார். அதில் புளியம் பூ நிறம் உடலெங்கும் காணவில்லை! நாகம் படமெடுத்து ஆடும் போது உள்பக்கம் நாமம் போன்ற இடத்தருகேதான் புளியம் பூவைப் போன்ற நிறமாக இருந்தது. இந்த விஷயம் தெரியாமல் புளிய மரங்களைத் தாவிடுமே என்று வெட்கமாகி விட்டது! போகட்டும். "இடித்த புளி மாதிரி" ஒரே இடத்தில் இருக்காமல் சுற்றி அலைந்ததால் தானே விஷயம் விளங்கிற்று.

## குணாதிசயம்

புளிய மரத்தின் பட்டை, பழம், கொட்டை, ஓடு, காய், பிஞ்சு, பூ, இலை, துளிர் யாவும் மருத்துவப் பயன் உடையதே, பழம், பழ ஓடு இவை பலத்தை இளக்கும். இலைக் கொழுந்தும், ஓடும் பித்தத்தை சாந்தம் செய்து சூட்டைத் தணிக்கும், முற்றிய இலைகள், பிஞ்சு. உஷ்ணத்தை உண்டாக்கும். கொட்டையும் தோலும் உஷ்ணத்தைத் தணித்து தசை நார், நரம்புகளை இறுக்கி உடலை உரம்பெறச் செய்யும் சிறப்புடையது.

புளிய மரத்தின் உறுப்புக்களை மருத்துவத் துறையில் அனேகமாகக் கையாளுவதும் மருந்துகளில் சேர்ப்பதும் அரிது. பொதுவாக இம்மரம் மக்களிடையே உணவு மருத்துவமாகவே பயன்பட்டு வந்துள்ளது.

## புளியந் துளிர்

புளியந்துளிர் ஆடி, ஆவணி, புரட்டாசி மாதங்களில் சிவந்த நிறமாகத் துளிர்க்கும். இம்மாதங்களில் பருவ நிலையும் காற்றடித்து ஓய்ந்து நாடு நகரங்களில் வாணிபம் மந்தமாகிவிடும். "ஆடிப்பட்டம் தேடி விதை" என்ற பழமொழிக்கு இணங்க, மிச்சம் மீதி உள்ள தானியங்களை எல்லாம் வயல்களைக் கிளறிக் கொட்டி விதைத்து வானத்தைப் பார்த்துக் கொண்டு இருப்பார்கள் மக்கள் உடல் நலமும் இக்காலத்தில் அக்கினி மந்தப்பட்டு போகும்! இந்தக்காலத்தில் இயற்கையாகவே துளிர்க்கும் புளியந் துளிரை பறித்து, வாரம் இரண்டொரு முறை துவையல், குழம்பு போன்றவைகளாகச் செய்து சாப்பிட்டுவர உஷ்ணத்தை தணித்து, பித்த உபரி ஆகாமலும் குறையாமலும் சமன் செய்து பருவ நிலைக் கோளாறுகளைச் சரி செய்து விடும்.



## புளி இலை

இதன் முற்றிய இலை பலவிதங்களில் உதவுகிறது. உஷ்ண வாயு சம்மந்தப்பட்ட கை, கால் மூட்டுகளில் வீங்கி வலி எடுப்பது, திடீரென கால், கை, தோள்பட்டை, கழுத்து முதலிய இடங்களில் சுளுக்கு, பிடிப்பு ஏற்பட்டு அசைந்தால் அப்பாடி! ஆ! ஊ! என்று சத்தம்போடுவார்கள். இப்படி உண்டானவர்கள் பேசாமல் ஓய்வு எடுத்துக்கொண்டு பசுமையான புளி இலையை உருவி எடுத்து வலி வீக்கம் கண்ட இடத்தில் ஆமணக்கு நெய்யை தடவி விட்டு அதன் பேரில் இந்தப் புளி இலையைத் தட்டி விட்டால் ஒட்டிக்கொண்டு விடும். சுமார் இரண்டு மணி நேரம் கழிந்தபின் வெந்நீரால் உருவி விட்டு பின், சுத்தம் செய்து விடுங்கள். அன்று உணவில் சுக்கு, பூண்டு, மிளகு, பெருங்காயம் முதலியவை சேர்த்து குழம்பு செய்யச் சொல்லி சாப்பிடுங்கள். மறுநாள் வலி இருப்பது தெரியாது! நினைவு வைத்துக்கொள்ளுங்கள்.

இலையை இடித்துப் பிழிந்த சாற்றை ஒரு இரும்புக் கரண்டியில் விட்டு கொதிக்கக் காய்ச்சி வேளைக்கு ஒரு அவுன்ஸ் சிறிது பசும்பால் விட்டுக் குடிக்க ரத்தபேதி, சீதபேதிகள் நின்றுவிடும்.

இலையை ஆமணக்கு நெய் விட்டு இரும்பு வாணலியில் போட்டு வதக்கி மெல்லிய துணியில் கொட்டி பொறுக்கும் சூட்டில் கீல்வாதம் முடக்கு வாதம் முதலிய நோய்களில் ஒத்தடம் கொடுத்துவர வலிகள் சாந்தமாகி அடங்கும். உத்தாமணி இலை கிடைக்காத காலங்களில் புளி இலையும் ஒத்தடம் கொடுக்கச் சிறந்த சாதனமாகும்.

வேப்பிலை கஷாயத்தில் புண்கள், ரணங்களைக்கழுவி சுத்தம் செய்வது போல, இந்த இலையையும் சம அளவு வேப்பிலையுடன் சேர்த்து இடித்துக் காய்ச்சிய கஷாயத்தில் கழுவிவர, கண்நோய் முதல் நாள்பட்ட அழிந்த ரணம் யாவும் குணமாகிவிடும். இது போலவே புளி இலை, குப்பைமேனி இவ்விரண்டையும் சம அளவு சேர்த்தரைத்துத் தடவி குளித்துவர சொறி, சிரங்கு, படை, நமைச்சல் யாவற்றையும் போக்கிவிடும்.

## புளியம் பூ

புளியம்பூ இதழ்களில் மஞ்சள், சிகப்பு, வெள்ளை நிறங்களாக பார்ப்பதற்கு மிக கவர்ச்சியாய் இருக்கும். இந்த புளியம் பூவில்

பொன் செய்யும் ரசவாத வித்தை இருந்ததாக சித்தர்களின் சுவடிகள் கூறுகின்றன. இதை "பூவோ பூ, புளியம் பூ, பொன் ஆத்தாள் கொண்டைக்கு தாழம்பூ" என்ற சித்தர் கும்மிப் பாடல் விளக்குகிறது. பாமர மக்கள் பூவையும் புளியந் துளிரையும் துவையல் போலச் செய்து சாப்பிட்டு வருவார்கள். பூவினுல் பசியுண்டாகும். சலதோடம் போகும். சுறுசுறுப்பும் உற்சாகமும் உண்டாகும். கண்நோய் தொற்று நோய்களாகப் பரவும்போது இதன் பூவை அரைத்து கண்களைச் சுற்றிப் பற்றிட, சிகப்பு மாறி கண்வலி நீங்கும்.

## பிஞ்சு

கருவுற்ற மாதர்களுக்கு மிகவும் ருசியான பண்டம் இதுதான். மாதர்களின் மசக்கை காலத்தை இந்தப் பிஞ்சு உறுதி செய்துவிடும். இதையும் பூவைப்போல செய்து உண்பதும் நம் நாட்டு வழக்கமாயிற்றே! இதனுல் பித்தம் சாந்தமாகி, தும்மல், சலதோடம், உஷ்ணம் ஆகியன போகும்.

## காய்

புளியங்காயை முற்றிய பிறகு பயன்படுத்துவது அரிது. "மங்கும் காலம் மாங்காய், பொங்கும் காலம் புளியங்காய்" என்பது பழமொழி. இது பருவ காலங்களைக் குறிப்பிடும் பொருள் நிறைந்த சொற்கள். ஆண்டின் சந்திகாலம் பங்குனி, சித்திரை இந்த மாதங்களில்தான் இவ்விரு காய்களும் போட்டி போட்டுக் கொண்டு காய்த்துப் பழுக்கின்றன.

## புளியம் பழம்

காய் பழுத்தவுடன் மேல் ஓட்டிற்கும் பழத்திற்கும் சம்மந்தமின்றி, சுருங்கித் தனியாகி விடும். ஆனுல் ஓடு மட்டும் அப்படியே காய் போல இருக்கும்! பெண்டு பிள்ளை, வீடு, கன்று, மாடு, தனம் என நலம் பல பெற்றிருந்தும் சிலபெரியோர்கள் இந்த புளியம் பழம் போன்று பந்தபாசம் களைந்து, ஒட்டாமல் ஒட்டியது போல் காண்பார்கள்.

புளியம் பழமும், மாம்பழமும் உடலுக்குக் கெடுதலைத் தான் செய்யும். இதனுலேயே "காட்டில் கொல்வது புலி, நாட்டில் கொல்வது புளி! என்ற வழக்கு சொல்லும் உண்டு. புதிய புளி மிகவும் கெடுதல். டைபாயிடு போன்ற சுரம், 'நரம்பு வலி, நடுக்கல்



வாதம் உடல் பருத்து ஊதிவிடல், மட்டித்தனம் மந்தபுத்தி ஆகியன உண்டாவதுடன் சகல தாதுக்களும் அழியும். வெகு விரைவில் நரைதிரை உண்டாக்கி கிழப்பருவம் எய்தும் என்பதனை தேரையர் என்ற சித்தர் அழகாக விளக்குகிருர்.

" புத்தியே மந்தமாகும் பொருமியே உடலூதும்
பத்தியம் தவறும் சந்நி பாதமாம் சுரங்கள் வீறும்
சர்த்தியும்பித்த மிகும் தனுவெல்லாம் வாதம் ஏறும்
மந்தியாம் தாதழியும் தப்பாதுநரை திரைபுளிக்கே "

புதுப்புளியை புத்தாண்டு தினத்திலே காலையில் சிறிதளவு "மூலிகை பஞ்சாமிர்தத்தில்" சேர்க்கிருர்களே, அதோடு சரி! பத்திய மருந்துண்பவர்களுக்கும் புளி ஆகாது.

நமது நாட்டில் புளியை தினசரி உணவுடன் சேர்த்து வருகிருர்களே! இது கெடுதல் ஆகாதோ? என்ற ஐயப்பாடு கொள்ளலாம். புளியை கொட்டை நீக்கி உலர்த்தி ஓராண்டு வைத்து பழயதாக்கி, அப்பழம் புளியை மிதமான அளவுடன் உணவில் சேர்க்கலாம். பத்திய உணவு உண்பவர்கள் கூட இதைச்சுட்டு சேர்த்துக்கொள்ள மருத்துவர்கள் அனுமதிப்பார்கள்.

## பழம் புளி

பழைய புளியால் வாத பித்த, சிலேத்துமம் (திரிதோடம்) என்ற முக்குற்றமும் நீங்குவதுடன் சூலை, வாந்தி, குமட்டல் கண்விழி நோய் ஆகியவைகளும் போகும் என்பதை கீழ்காணும் அகத்தியர் பாடல் விளக்குகிறது.

" தீதில் பழம்புளியைச் சேர்க்கத் திரிதோடம்
வாதமொடு சூலை கபம் காணுேடும் சுரம்
சார்த்தி என்ற தோடமிவை சாந்தமாம் கண்நோய்
பித்தமென்ற பேர் ஒழியும் பேசு " [போம்

## உபயோக முறைகள்

(1) புளியஞ் சோறு: இதைப் புளிக்காய்ச்சல் என்றும் சொல்வதுண்டு. மிளகாயை எண்ணெயில் விட்டு நன்ருக வதக்கிக்

கொண்டு, அதில் உளுத்தம் பருப்பு, கடலை பருப்பு, கடுகு, கொத்தமல்லி விதை, கருவேப்பிலை, பெருங்காயம் முதலியவை களைப் போட்டு அளவுடன் பழம் புளியும் நீரில் கரைத்துக்கொண்டு அத்துடன் கலந்து பக்குவமாய், காய்ச்சி எடுப்பதுதான் இந்தப் புளிக் காய்ச்சல். இது பல நாள் கெடாமலும் இருக்கும். வேண்டும் போது புதிய சோற்றுடன் கலந்து சிலமணி கழித்துச் சாப்பிட வெகு ருசியாக இருக்கும். அத்துடன் மேலே குறிப்பிட்ட நோய்கள் எல்லாம் விலகும். இந்த புளியோதரை, கோயில் களில் சுவாமிக்கு நிவேதனமாக அர்ப்பணம் செய்து வரும் பக்த கோடிகளுக்குப் பிரசாதமாக வழங்குவது அனைவருக்கும் தெரிந்த விஷயமே.

## பொய்யாமொழி புலவரும், புளியஞ் சோறும்

பொய்யாமொழிப் புலவருக்கு புளியஞ்சோறு என்றால் வெகு பிரியம். இதையுணர்ந்த சீனக்கன் என்ற குறு நில மன்னன் இவருக்கு புளியஞ்சோற்றை விருந்துணவாக படைத்தனர். புலவர் அதன் சுவையைப் புகழ்ந்து, "வண்டு மொய்க்கும் மலர் மாலை அணிந்த அரசூர் மன்னன் சீனக்கன் இன்று மகிழ்ந்தளித்த புளியஞ் சோற்றின் சுவையை யான் செந்தமிழின் சுவையை ஆராயும் போதெல்லாம் அதற்கு உவமையாக மறவாது நினைவில் வரும்" என்று ஓர்கவியைப் பாடியதாக 'சோழமண்டல சதகம்' என்ற நூலின் கண்காணக் கிடைக்கிறது.

(2) பழம் புளியையும், பொற்கொடி என்ற கரிசலாங் கண்ணியையும் ஒரு அளவாகச் சேர்த்து அரைத்து இரண்டு நெல்லிக்காய் அளவு காலை மாலையாக 12 நாள் கொடுக்க பெண் களுக்குக் காணும் அடிதள்ளிய நோய் (கருப்பை நழுவிக் கீழே இறங்கி விடுதல்) முற்றும் குணமாகும்.

(3) டான்சில் என்ற உள்நாக்குச் சதை வளர்ச்சிக்கு நாள் தோறும் உப்பு, புளி இவ்விரண்டும் சேர்த்தரைத்து உள் நாக்கில் தடவி தேய்த்துவர, அறுவைச் சிகிச்சை ஆபரேஷன் இன்றியே டான்சில் கரைந்து போகும்.

(4) பழம் புளி அரை பலம், சீமை அத்திப்பழம் அரை பலம் இரண்டையும் பிய்த்து கால்படி பசும் பாலில் போட்டு, அத்துடன் ஏலக்காய் இரண்டு, லவங்கம் இரண்டு தட்டிப்போட்டு கொதிக்கக் காய்ச்சி வடிகட்டி சிறிது கல்கண்டு சேர்த்துக் குடிக்க, மலத்தை இளக்கித் தள்ளுவதுடன் உடல் சூட்டை தணிக்கும். கண்கள், கை, கால், எரிவு நீங்கி, பசியையும் தூண்டிவிடும்.



## பழ ஓடு

புளியம் பழ ஓடு, செம்பரத்தை பூ, மூக்கிரட்டை கீரை ஆகிய மூன்றும் சமமாக ஒருபிடி எடுத்து சிதைத்து சட்டியில் போட்டு இரண்டு குவளை தண்ணீரை ஊற்றி கொதிக்கக் காய்ச்சி ஒரு குவளை கஷாயமாக்கி அதை காலையில் பல் துலக்கினவுடன் குடிக்க வாயுவை கண்டிக்கும். பித்த சாந்தி செய்து விடும்.

## கொட்டை

புளியங்கொட்டை மிக நல்ல பொருள். இதற்கு பல குணங் கள் உண்டு. வெய்யில் காலத்தில் வெளியே சுற்றி அலைந்து விட்டு படுப்பதால், இராக் காலத்தில் சிலருக்கு உடல் ஒரே சூடாகி அனல் போல் பற்றி எரியும். சிறுநீர் தாராளமாக வராமல் தடைப் பட்டு மோர் கலக்கியது போலவும், திரிதிரியாகவும், சிலருக்கு சிவந்தும் சொட்டு சொட்டாக வரும். ஒரு சொட்டு நீர் மூத்திர தாரை மூலம் வெளியேறும் போது நெருப்பை வாரி கொட்டுவது போல், தாளமுடியாமல் தவித்துப் போவார்கள். இந்த வேதனை உடனடியாகப் போக வேண்டுமானால், இரவு நேரங்களில் மருத்து வரை தேடி அலைய வேண்டாம். இரண்டு புளியங் கொட்டையை வாயில் போடுங்கள். உமிழ் நீரில் ஊறிய பின்பு முதலில் தோல் கரைந்து துவர்ப்பாக இருக்கும். சிறுகச் சிறுக மென்று சாப்பிட்டு உடன் எதையும் கீழே துப்ப வேண்டாம். இந்த கொட்டைகள் வாயிலிருந்து உள்ளே செல்வதற்கும், சொட்டு மூத்திரம் வலிகள் சாந்தமாவதற்கும் சரியாக இருக்கும். சோதனை செய்து பார்க்கலாம்.

இம்மாதிரி சிறுநீர் தொந்தரவுகள் அடிக்கடி காணுபவர்கள் பெரும்பாலும் தாதுவை ஏதாவதொரு வழியில் வீணாக்கியவர்களே! இந்தத் தொல்லையை நிரந்தரமாகவும் பூரண குணப்படுத்தவும் ஒரு முறையுண்டு. புளியங் கொட்டையை வறுத்து மேல்தோல் நீக்கி கொட்டையை மாவரைத்து (மெஷினில் அரைக்கக் கூடாது) சர்க்கரைப் பாகு செய்து மற்றும் சில தாது கட்டும் பொருள்களை (கீழாநெல்லி, நிலப்பனை, தூதுவளை) சேர்த்துக் கிளரி, தேனும், நெய்யும் கலந்து லேகியமாகச் செய்து தினம் இருவேளை சாப்பிட்டு வர நீரைப்போல் உடைந்த தாதுவைக் கட்டி வலுபடுத்தும். மற்றும் தேகத்திற்கு நோய்த் தடுப்பு சக்தியைக் கொடுத்து ஆரோக்கியத்தை உண்டாகும்.

புளியங்கொட்டையின் தோல் நீக்கிய வெண்ணிற பருப்பு ஏழை எளியோர்களுக்கு கிராமாந்தரங்களில் உணவாகவும் பயன்படுகிறது. இந்தப் பருப்பில் உடல் வளர்ச்சிக்கேற்ற பல தாதுப் பொருள்கள் இருப்பதாக நவீன ஆராய்ச்சியில் கண்டுபிடிக்கப் பட்டுள்ளது. எனவே இலவசமாக கிடைக்கும் எளிய கொட்டைகளின் மூலம் வசதியற்ற நாட்டுப்புற மக்கள் பலமும் ஆரோக்கியமும் பெற்று வாழ்க்கை நடத்துகின்றனர். எங்க வீட்டு பையனுக்கு உயர்தர டானிக், மாத்திரை, நல்ல சாப்பாடு எல்லாம் கொடுத்தும் எலும்பும் தோலுமாக இருக்கிறான். உணவுக்கு கஷ்டப்படும் பல குடும்பத்திலுள்ள பையன்களைப் பார்த்தால், கொழு கொழுவென்று காண்கிறார்களே! என அங்கலாய்த்துக் கொள்ளும் பெற்றோர்கட்கு இதுவே பதில். புளியங்கொட்டை மேல் தோல் நீக்கி இடித்த மாவும், சர்க்கரையும், நெய்யும் அளவாகக் கொடுத்துவர சிறுவர்களின் உடல் வளர்ச்சியையும், பலத்தையும் தூண்டும். அற்பம், விலை மலிவு என முடிவு கட்டும் புளியங்கொட்டை, கேழ்வரகு, தினை, கம்பு, சோளம் முதலியவைகளில் இயற்கையாகவே புஷ்டி தரும் தாதுக்கள் உள்ளனவே!

## கொட்டையின் தோல்
## துவர்ப்பு ருசியை உடையது

(1) இதன் தோல் மாதுளம் பழத்தோல் இரண்டும் சமமாக இடித்து தூள் செய்து வைத்துக் கொண்டு 10 அரிசி எடை வென்னீர் பசும்பால் ஆகியவைகளை அனுபானமாகக் கொள்ள, உஷ்ணத்தால் வாந்திபேதி, சீதபேதி, வாய்வு பொருமல் முதலியவை தீரும்.

(2) புளியங்கொட்டை தோல் வேண்டிய அளவு எடுத்து அதே அளவு கருவேலம் பட்டை எடுத்துலர்த்தி, இடித்து தூள் செய்து அந்த எடைக்கு எட்டில் ஒரு பாகம் சாதாரண உப்பு இடித்து சேர்த்து சல்லடையில் சலித்து வைத்துக்கொண்டு நாள் தோறும் பல் துலக்க உபயோகிக்கலாம். இயற்கையான இப்பற்பொடி பற்கூச்சம், ஆட்டம், சீழ், ரத்தம் வருதல், வாய் நாற்றம் ஈகிறு வீக்கம் போன்ற நோய்களைப் போக்கி பற்களை உறுதி செய்து பாதுகாக்கும்.

(3) சுத்தமான கொட்டை தோலை எடுத்து உலர்த்தி சன்னமாக இடித்து தூள் செய்து வைத்துக்கொண்டு 5 அரிசி எடை அளவு பசும்பாலுடன் (அல்லது) வென்னீரில் நாள் 1 க்கு 3 வேளை கொடுப்பதால் மூத்திர தாரை ரணம், அழற்சி, நீர்க்கடுப்பு வெள்ளை விழுதல், பேதி, ஆசனக்கடுப்பு முதலியவைகள் தீரும்.



மரப்பட்டையையும் இதேபோல கொடுத்து வரலாம். இதனால் அஜீரணம், வயிற்றுக் கோளாறுகள், குன்மம் முதலான நோய்கள் விலகும்.

புளிய மரத்தின் சிறிய கிளையும் உறுதி வாய்ந்தது. சுலபமாக ஒடியாது. செல்வச் சீமானும் கொடையுள்ளமும் வாய்க்கப் பெற்ற ஒருவரை நண்பராக அடைந்தவரைக்கண்டு "பிடித்தாலும் புளியங் கிளையாக பார்த்து பிடித்தாயப்பா!" என்று சொல்வதுண்டு அல்லவா?

புளிய மரம் பஞ்ச பூதங்களில் வாயு பூத அம்சமாக விளங்குகின்றது. நாட்டில் பருவமழை தவறாமல் பெய்யவேண்டுமானால் மரங்கள் நிறைய வளரவேண்டும். அதிலும் புளிய மரம் நிறைந்த இடங்களில் தான் கார்முகில் கூட்டங்கள் வளைய வந்து மழையை பொழியும். மேகங்களைக் கண்டு மயில் ஆடுவது போல, பசுமையான மரங்களைக் கண்ட மேகக்கூட்டம் மின்னி இடிஇடித்து மழை கொட்டச் செய்வது இயற்கை காட்சிகளில் ஒன்று. வாயு அம்சமான புளிய மரம் காற்றோடு செல்லும் மேகங்களை ஆகர்ஷணம் செய்ய வல்லது.

காலம் மாறிப்போச்சு! என்று சொல்வது சுலபம். பருவமழை தவறுவதெல்லாம் மரங்கள் அழிந்த காரணம் தான். எரிபொருள் தேவைக்காக மரங்களை வெட்டுவது மதியீனமல்லவா? நற்பயன் தரும் பெரும் விருட்சங்களை வெட்டக்கூடாது என்ற கொள்கையை அனைவரும் மேற்கொண்டால் நாடு சுபிட்ச பாதையில் செல்லும் என்பதில் ஐயமில்லை!



முருகா.




வேங்கை என்ற பெயர் முதலில் தாவர இனத்திற்கு வந்ததா? அல்லது மிருக இனத்திற்குத் தான் வந்ததா? இது சர்ச்சைக்குரிய விஷயமாகும். முதலில் மூலிகை இனத்திற்குதான் வந்திருக்கக் கூடும். தமிழ்க் காவலனுகிய முருகப்பெருமானே ஒரு சமயம் வேங்கை மரமாகி நின்ருர்! ஆமாம் இந்த நாரதர் பேச்சை கேட்டவர்க்கெல்லாம் இப்படி ஒரு தர்மசங்கட நிலைமை உண்டாகி விடும் என்பதில் சந்தேகமில்லை. 'கனி' என்று சொல்லி கலகம் விளைத்த நாரதர் பேச்சை நம்பி, வேடர்குலத் தலைவன் நம்பிராசன் மகள் வள்ளியைச் சிறை எடுக்கச் சென்று வேங்கை மரமாகி விட்டார்! ஏன் வேறுமரங்களாகக் கூடாது? இறைவனின் திருவிளையாடல்களிலே, (இன்றைய விஞ்ஞானிகளுக்கும் புரியாத) பல மெஞ்ஞான நுணுக்கங்கள் பொதிந்துள்ளன என்பதை ஞானவான்களாகிய சித்தர்களே உணர்வார்கள். இதனை உலகோர் குறிப்பறிந்து பயன்படுத்திக் கொள்வது சிறப்புடையதாகும்.

பொதுவாக வேங்கை மரம் பெருமரக் காடுகளில் வளரக் கூடியது. நாடுகளிலும் அரிதாகக் காணும். இதில் பலவகை உண்டு. சிங்கிட்டு வேங்கை, சடை வேங்கை, மணிமுத்து வேங்கை, உதிர வேங்கை என்பவை சிறப்புடையது. இதன் இலைகள், கடுக்கா மரத்தின் இலை போல இருக்கும். இம் மரங்கள் பூக்கும் காலத்திலே வேங்கைப் புலிகள் இம் மரங்களில் படுத்திருப்பது போல காட்சி அளிக்கும். காடுகளில் வசிக்கும் யானைக் கூட்டங்களின் கண்களுக்கு தூரத்துப் பார்வையில் இம் மரத்தின் மேல் வேங்கைப் புலி படுத்திருப்பது போல் பிரமை தட்டுமாம். கிலி கொண்ட யானை மதம் பிடித்து ஆவேசத்துடன் ஓடிவந்து மரத்தை மோதி அட்டகாசம் செய்யுமாம். சில சமயம் யானைத் தந்தங்கள் மரத்தில் புதைந்து எடுக்க முடியாமல் திணறும் சமயம் மற்ற யானைகளும் வந்து இதை மீட்கும் என்று காட்டுவாசிகள் கூறும் ஒரு விந்தை வழக்கு உண்டு.



வேங்கை மரம் பால் உள்ள மூலிகை. அதிலும் வேங்கையின் பால் செங்குருதி போல ரத்தச் சிவப்பு நிறமாக இருக்கும். முருகன் வேங்கை மரமாகி நின்று இந்தப் பாலை வள்ளிக்குக் காண்பித்த காரணத்தால் இம்மரத்தை வெட்டாதவாறு தடுத்தாள் போலும்!

வேங்கை மரம் மிகப் பழங்காலத்திலிருந்து காட்டில் வசிக்கும் மனிதர்களுக்கு மருத்துவப் பயனுக உதவி வந்துள்ளது என்பதனை வாகட நூல்களால் அறியலாம்.

## பயனும் குணமும்

பொதுவாக இதன் பட்டை, இலை, கோந்து ஆகியவைகள் பயன் தரக்கூடியவையாகும். இலைகள் வீக்கத்தைக் கரைத்து, கிருமிக் கூட்டத்தை ஒழிக்கும். பட்டை ரத்த சிதைவுகளை நிறுத்தும். பிசின் பலவித ரோகங்களுக்கும் மலச்சிக்கலுக்கும் ஏற்றதாகும். இவை யாவும் தற்காலம் வழக்கற்றுப் போயின.

## இலை உபயோகம்

இன்றளவும் காட்டில் வசிப்போருக்கு எந்தவித மருத்துவ வசதியும் கிடையாது. இயற்கை அன்னை உதவியால் இந்த வேங்கை இலையை அரைத்து கட்டிகளுக்கு போட அவை பழுத்து உடையும். ரணம் புண்புரையோடிய நாட்பட்ட புண்கள், சொறி சிரங்கு, எந்தவித சர்ம நோய் வந்தபோதிலும் இந்த இலையால் போக்கிக் கொள்வார்கள்.

## பட்டையின் பயன்

வேங்கை மரப் பட்டையை மண் பாத்திரத்தில் ஊரல் குடிநீராகப்போட்டு தினமும் 3, 4 வேளை குடிக்க, இரத்தபேதி, மூலம் கிரானி, சீதபேதி பேன்ற வயிற்றுக்கோளாறுகளும் விலகும். இந்த ஊரல் குடிநீர் சிவந்த நீல நிறமாகக் காணும். மரப் பட்டையை காயவைத்து இடித்து பொடியாக்கி சூரணம் செய்து வைத்துக் கொண்டு மேற்கண்ட நோய்களுக்கு மூன்று விரலால் எடுத்து வாயிலிட்டு வெந்நீர் குடித்துவர அவை விலகும்.

## மரத்தின் சாந்து

வேங்கை மரத்தின் தூளை நிறைய ஒரு பானையில் போட்டு 15 நாள் ஊற வைத்துப் பிழிந்து சக்கையை எடுத்து விட்டு அதை வாயகன்ற பாத்திரத்தில் ஊற்றி வெய்யிலில் பல நாள் வைத்து

எடுக்க நீரெல்லாம் சுண்டி செங்கருமையும் நீலமும் கலந்த கடின சாந்து ஆகி மாறும். இதனை தேங்காய் ஓட்டில் ஊற்றி வைத்துக் கொண்டு தினமும் நீர்த்துளி விட்டு குழைத்து நம் நாட்டு மாதர்களும் குழந்தைகளும் திலகமாக அணிவது வழக்கம். இதனால் சகல திருஷ்டியும், கண்ணூரம், கண் திருஷ்டியால் வந்த தோடம், பிரேதக் காற்று சேஷ்டைகள் விலகிப்போய் பூதகணங்களும் அருகில் வர அஞ்சும். என்னடா! மனுஷன் மூட்டை அளக்கிறானே என்று நினைத்து விடாதீர்கள். செய்து பார்த்தப்பின் அதன் பலனை பிறருக்கும் உபகாரமாகச் சொல்லுங்கள். நவீன அந்நிய நாகரீகம் பரவி வருவதால் ரசாயன வர்ணச் சாயங்களை முகத்திலும், உதட்டிலும் தடவி மேலும் முகத்தை அவலட்சணமாக்கிக் கொள்ளும் இந்தக் காலத்தில் நமது நாட்டின் மிகப் பழங்கால முறைகளால் மிகுந்த பயன் உண்டு என்பதை அனுபவத்தால் அறிந்து போற்றுங்கள். வேங்கை மரச் சாந்துக்கு பில்லி சூனியங்களும் அகலும் என்பதை ஒரு சித்தர் கூறியுள்ளார்.

## மரத்தின் கோந்து

கோந்து என்பது பிசின் ஆகும். பால் வடியும் மரங்களில் எப்போதும் பிசின் வழிந்து கட்டும். வேங்கை மரப் பிசினும் விசேட மருத்துவப் பயனுடையதாகும். நீங்கள் வேங்கை மரக் கோந்துக்காக காடுகளில் அலைய வேண்டாம். பிரபல நாட்டு மருந்துக் கடைகளிலே எளிதாகக் கிடைக்கும்.

1) சிகப்பும் கருமையும் கலந்த இந்த கோந்து சீழ் கொண்ட ரணங்களின்மேல் தூள் செய்து போட அவை ஆறும்.

2) இந்த கோந்து 1 பலம் வாங்கி அதை நெய்விட்டு வறுத்து எடுத்துத் தூள் செய்து வைத்துக்கொண்டு இரவில் ஒரு சிட்டிகை வாயில் போட்டு தவறாமல் பசும்பால் குடிக்க, மலச்சிக்கல் நீங்கும்.

3) கண் பார்வை மங்கல் அகன்று, கண்ணொளி வீசும்.

4) ஷை கோந்து நெய்யில் வறுத்த தூள் 1 பலம், சித்தரத்தை அல்லது சண்ராட்டகம் கால் பலம், லவங்கப்பட்டை கால் பலம் ஆகியவைகளைத் தனித்தனியாக இடித்துத் தூள்செய்து வைத்துக் கொண்டு 5 முதல் 10 அரிசி எடை தேனில் குழைத்துக் கொடுக்க பித்த வாந்தி, இருமல், கபம் இவை நீங்கும். இதே தூளை நெய் அல்லது வெண்ணெயில் கொடுக்க, நாட்பட்ட பேதி, சீதபேதி வயிற்றுக் கோளாறுக்கு மிக்க பயனுண்டு. இன்னொரு விஷயமும்



கூட, இந்த தூளை பல் நோய்கள், வலி, இரத்தம் கசிதல் போன்றவைகளுக்கும் பற்களில் வைத்துத் தேய்த்துவர அவை விலகும். ஆண், பெண்களுக்குக் காணும் வெள்ளை, இரத்தவெட்டை ஆகியவைகளுக்கும் இதனைத் தொடர்ந்து கொடுக்கலாம். இதனால் நன்மை ஒன்று தவிர இதர கெடுதல்கள் ஒன்றும் ஏற்படாது. வேங்கை மரத்தைப் பற்றி பிரமாதமாகக் கூறுகிறீர்களே, இதற்கு என்ன ஆதாரம் என்று ஒருசிலர் கேட்கக்கூடும். இதோ பாருங்கள்

“ குத்திருமல் வெட்டையொடு கூறுமுளமாந்தையிவை
எத்திசையும் வாரா திடையுங்காண் சத்தியமாய்
புண்ணிருமல் சீயொழுகின் போகும் மல மிறங்கும்
கண்ணொளிக்கும் வேங்கையிது காண்.” (கு. மு.)

## வீடுகள் கட்ட

குடியிருப்பு மனைகள், அழகிய மனை சாஸ்திர சம்பந்தமாக வீடுகளை கட்ட நம்முன்னோர்கள் வேங்கையைத்தான் உபயோகித்தனர். கதவு, கம்பங்கள், வாசல் கால், ஜன்னல் ஆகியவைகளை வேங்கை மரத்தால் செய்து போடுவதால், மனைக்குள் பேய்க்காற்று பூதகண சேஷ்டைகள் அணுகாது என்பது பெரியோர்' கருத்து. ஆனால் வாசற்படிக்குக் கீழே வேங்கையைப் போட்டு தாண்டி நடக்கக் கூடாதாம்! ஆமாம்! முருகனல்லவா வேங்கை! முருகனுக்குக் காவடி எடுக்கும்அன்பர்கள் நடக்க அவர்களை சாஷ்டாங்கமாக நாம் விழுந்து வணங்குகிறோம். காவடி நம்மைத் தாண்டிச் செல்வதால் சகல பிணிபாவங்களும் விலகுகின்றன என்பது தமிழர்களாகிய நமது அசைக்க முடியாத நம்பிக்கை! இப்படிப்பட்ட முருகனின் அம்சமாகி நின்ற வேங்கையை நாம் கீழே போட்டு தாண்டி வரத் தகுமோ? யாராகிலும் தவறி வாசற் படிக்குக் கீழே வேங்கையை போட்டிருந்தால் உடனே அப்புறப்படுத்திவிடுங்கள்.

மிருக இனத்தில் வேங்கை இரத்தத்தைக் குடித்துத்தான் ஜீவிக்கிறது. தாவர வேங்கை இரத்தம் போன்ற பாலைக் கொடுத்து ஜீவனைக் காப்பாற்றுகிறது! இதன் உட்பொருள் என்ன என்பதை தெரிந்து கொண்டீர்களா? மனிதனே! மிருகத்தைப்போல் நடவாதே! தாவர இனங்களாகிய மூலிகைகளைப் போல் பிற ஜீவனுக்கு உதவியாக இருங்கள் என்பதே அல்லவா?



உ

# பொருள் விளக்கத் தெளிவுரை!

62. சுப்பிரமணி (சுக்கு, இஞ்சி)

இதன் வழக்குப் பெயர்கள் : வேர் கொம்பு, அதகம், சௌவர்ணம், சுண்டி, கடுபத்திரம், சுச்சு, இஞ்சி, இலா கொட்டை, மதில், உலர்ந்த இஞ்சி மஹௌஷதம், உபபுல்லம், நவசுறு, ஆர்த்ரகம், விச்வபேஷஜம், அருக்கன், விடமுடி அமிருதம், சௌபன்னம் ஆகியனவாம். ஆங்கிலம் : Ginger, Zingiber, Officinalis, தெலுங்கு : Sonti, Allamu, மலையாளம் : Chukka, கன்னடம் : Ona Shanti, சமஸ்கிருதம் : Nigaram, இந்தி : Sunth, உருது : Zangeblarataba.

உபயோகம் : (இஞ்சி உலர்ந்தால் சுக்கு)

குணாதிசயம் : பசித் தூண்டி, செரிப்புண்டாக்கி, வெப்பமுண்டாக்கி, அகட்டு வாய்வகற்றி, உமிழ்நீர் பெருக்கி.

தீரும் நோய்கள் :

அஜீரணம், பித்தவாய்வு, பசியின்மை, சீதளம், சன்னி, கோழை, இருமல், ஓயாத வாந்தி, பித்த மயக்கம், புளியேப்பம், வயிற்று உப்பசம், குடல் கோளாறுகள், ஆஸ்துமா இருமல், நீரிழிவு, அதிக பசி, அதிக தாகம், வறட்சி, காபி தேயிலை பானங்களின் தீய குணங்கள், வாத ரோகங்கள், சிரநோய், வயிற்றுக்குத்தல், விலாகுத்தல், நீர் பீனிசம், நீர் ஏற்றம், கீல் பிடிப்பு, ஆசன நோய், தலைவலி, பல்வலி, காது குத்தல் ஆகியவைகள்.

63. புவி அரசன் :

இதன் வழக்குப் பெயர் : பூவரசு, பூளம், பம்பரக்காய் மரம். ஆங்கிலத்தில் : Thespesia-Populnea, Portia tree, Heart-wood. தெலுங்கு : Gangaraya. மலையாளம் : Puvvarasa. கன்னடம் : Kandarola. சமஸ்கிருதம் : Gharda, Bhanda, Supareshvak. இந்தி : Dumbla.

உபயோகம் : இலை, பூ, காய், பட்டை, விதை, வேர் ஆகியவை.

குணாதிசயம் : புழுக் கொல்லி, தூய்மையாக்கி, உரமாக்கி, நுட்புழுக் கொல்லி, புண்ணழுக்காற்றி.

தீரும் நோய்கள் :

மேகரோகம் யாவற்றுக்கும், சர்ம ரோகங்கள், சிரங்கு, கரப்பான், ஊரல், அரிப்பு, மேக தழும்புகள், படர்தாமரை, சொறி, நீர் ஒழுகுக் கரப்பான், கடுவன், குஷ்டம், வாதசூலை, விடபாகம், மகோதரம், கிரந்தி ஆகியவைகள்.

64. பொடுதலை :

இதன் வழக்குப் பெயர்கள் : பூற்சாதம், பொடுதிலை, பொடுதலங்கீரை, ஆங்கிலம் : Lippia Nodiflora, தெலுங்கு : Bokkana, மலையாளம் : Kattutippili, கன்னடம் : Nelahippali, சமஸ்கிருதம் : Vashira, இந்தி : Bakkau.

உப்யோகம் : சமூலம், இலை, காய்.

குணாதிசயம் : துவர்ப்பி, கோழையகற்றி, உரமாக்கி, சிறுநீர் பெருக்கி, வீக்கங் கரைச்சி, உள்ளழலாற்றி, நுட்புழுக் கொல்லி.

தீரும் நோய்கள் :

குழந்தைகளின் மாந்தம், கணை, கபசுரம், பித்தவாந்தி, வயிற்றுக் கோளாறுகள், சீதபேதி, சாதாரண பேதிகள், மலச்

சிக்கல், நெறிக்கட்டிகள், மேக ரோகம், மூல ரோகம், காச நோய், கோழிகளுக்கு வரும் நோய், தலையில் வரும் சிரங்கு, பொடுகு ஆகியன.

## 65. கோவைக் கொடி :

இதன் வழக்குப் பெயர்கள் : கோவை என்ற பெயர் தான் தமிழ் நாடெங்கும் வழங்கும். ஆனால் இதில் இனிப்பு, கைப்புக் கோவை, நாமக் கோவை, ஐவிரல் கோவை, மூவிரல் கோவை என்று பலவிதமுண்டு. ஆங்கிலத்தில் : Coccinia Indica, Cephalandra Indica. தெலுங்கு : Bimbika, Donda. மலையாளம் : Kova, கன்னடம் : Tonde-ballie, சமஸ்கிருதம் : Bimbi, உருது, பாரசீக மொழிகள் : Kabar-hinchi. இந்தி : Kanduru-ki-bel.

உபயோகம் : இலை, காய், வற்றல், தண்டு, கிழங்கு.

குணதிசயம் : வெப்பமுண்டாக்கி, கோழையகற்றி, இசிவகற்றி, வியர்வை பெருக்கி, முறைவெப்பகற்றி, சர்க்கரை கொல்லி.

தீரும் நோய்கள் :

கண் எரிச்சல், இருமல், நீரடைப்பு, சொறி சிரங்கு, புண் ரணம், மருந்துண்ட வேக்காடு வாய்பிடிப்பு, கரப்பான் நீரிழிவு, வறட்சி, கபரோகம், மார்புசளி குட்டம் ஆகியன.

## 66. பேய் மிரட்டி :

இதன் வழக்குப் பெயர்கள் : இரட்டைப் பேய் மருட்டி என்பார்கள். இதில் ஆண், பெண் என்ற இனம் உண்டு. பேய் மருட்டி, பேய் வருட்டி, வெதுப்படக்கி, பெருந்தும்பை, பைசாசம் என்பார்கள் சிலர். கிலுகிலுப்பைச் செடியையும் பேய்மருட்டி என்பதுண்டு. ஆனால் தும்பை இனத்தைச் சேர்ந்த இதற்குத்தான் பேய்மிரட்டி என்பதாம். இரட்டைப் பேய்மிரட்டி என்பதை கல்வியறிவு அற்ற கிராமத்திலுள்ளவர்



இதனை நெட்டைப் பனைமட்டை என்று கொச்சையாக இன்றும் கூறுவதை நாம் கேட்கலாம். ஆங்கிலப் பெயர் : Anisomeless Malabarica, Malabar cat-mint. தெலுங்கு : Moga-bira, Mabheri Chinnarana-bheri. மலையாளம் : Pey-Meratti, Perumthumba. சமஸ்கிருதம் : Alamoola. போர்ச்சுகீசிய மொழி : Mogbira-ka-patta. பொதுவாக தென்னிந்தியா வில் எங்கும் இதைக் காணலாம். மேற்கு தொடர்ச்சிமலை கடலோரம். மலையாளம் ஆகிய இடங்களில் தன்னிச்சையாக பயிராகும் செடி இனமாகும்.

உபயோகம் : இலை, சமூலம்

குணதிசயம் : பசித்தூண்டி, துவர்ப்பி, அகட்டு வாய் வகற்றி, வியர்வை பெருக்கி, வீக்கம் கரைச்சி.

தீரும் நோய்கள் :

கீல்வாதம், மூட்டு வலிகள், பல் முளைக்கும் போது ஆகும் பேதிகள், சீதவாதக் காய்ச்சல்கள், வயிற்று நோய்கள், காலரா ஆகியவை.

## 64. கொய்யா மரம் :

இதன் வழக்குப் பெயர்கள் : கொய்யா மரம்தான் தெலுங்கரும் கொய்யா மானு என்று, கொய்யா பண்டு என்றுதான் சொல்லுகிறார்கள், மலையாளம் : பீரா என்பார்கள் Pera. கன்னடம் : Pera Goyya. சமஸ்கிருதம் : Perala. இந்தி : Lal Sufrium.

உபயோகம் : இலை, பழம், பட்டை, வேர்.

குணதிசயம் : துவர்ப்பு, குளிர்ச்சியுண்டாக்கி, உரமாக்கி.

தீரும் நோய்கள் :

மந்தம், வாய்வு பொருமல், காலரா, வாந்திபேதி, வரட்சிதாகம், அஜீரணம், செரியா மந்தம், குடல் வாய்வு பல்வலி, பேதி ஆகியன.

## 68. மிளகாய் பூண்டு :

இதன் வழக்குப் பெயர்கள் : பேயாமணக்கு, நிலவா மணக்கு மிளகாய் பூண்டு என்ற இந்த குத்துச்செடி இதர நாடுகளில் கிடையாது என்றே கூறிவிடலாம். ஏனெனில் அகராதிகளில் பெரும்பாலும் இந்த பூண்டினம் குறிப்பிடவே இல்லை. மலையாளம், கன்னடம் ஆகிய இடங்களில் நில ஆமணக்கு என்றும், தெலுங்கில்: Dundiga என்றும் அழைப் பார்கள். இந்தியில் கூட இதற்கு பெயர் காணப்படவில்லை. ஆங்கிலத்தில் என்ன பெயரிட்டார்களோ ?

உபயோகம் : காய், வேர், சமூலம், எண்ணை.

குணுதிசயம் : மலநீராக்கி, பெருமலம் போக்கி வெப்பமுண்டாக்கி, வாதமடக்கி, புழுக்கொல்லி.

### தீரும் நோய்கள் :

மலச்சிக்கல், பசியின்மை, பாரிச வாதம், கண் கோளாறுகள், நெறிக்கட்டி, காய்ச்சல், வாதநோய்கள், இழுப்பு, இளம் பிள்ளை வாதம், மண்ணீரல், கல்லீரல் கோளாறுகள், சொறி சிரங்குகள், புண்புரைகள்.

## 69. ஆனைக் கன்று :

இதன் வழக்குப் பெயர்கள் : அத்திமரம், அதவு, அதம், கோளி, சுப்பிரதஷ்டம். தென்னிந்தியாவுக்குரிய மர வகுப்பு. ஆங்கிலம் : Country Fig, Ficus Glomarata, Roxb, Ficus Racemosa Wall. தெலுங்கு, மலையாளம், கன்னட மொழி களில் : Atti அத்திதான். சமஸ்கிருதம் : Udumbara, உருது : Jammaiz, Tinul Ahmar, பாரசீகம் : Samare-Pash-Shah, Anjire-Ahmar, உருது : Gular, அரேபியா, ஆப்கானிஸ்தானம், பலுசிஸ்தானம் ஆகிய இடங்களில் ஒரு வித அத்தி மரம் உண்டு. அவைகளின் பழம் மிகப்பெரியதாக இருக்கும். அதற்கு "சீமை அத்திப்பழம்" எனப் பெயர். நம் நாட்டு அத்திப்பழம் சுண்டை, நெல்லி அளவுதானிருக்கும். பாலுள்ள மரம்.



உபயோகம் : பிஞ்சு, காய், பழம், பால், பட்டை, மது.

குணுதிசயம் : துவர்ப்பி, மலமிளக்கி, குருதிப் பெருக்கி, உள்ளழலாற்றி, கற்கரைச்சி, உடற்தேற்றி, உரமாக்கி தாது வெப்படக்கி.

### தீரும் நோய்கள் :

பேதி, ஆசனக் கடுப்பு, மூலச்சூடு, மூல வாய்வு, இரத்த மூலம், வாதசூலை, உடல் சூடு, ரணம், மேக நோய்கள், வயிற்றுக் கடுப்பு, மூலக்கிராணி, மலச்சிக்கல், சிறுநீர் தாரை எரிச்சல், நீரிழிவு, ரத்தபேதி, வெட்டைச்சூடு, மூத்திரதாரை அழற்சி, பெரும்பாடு, வெள்ளை ஒழுக்கு, எலும்பைப் பற்றிய ரோகம், தேக வறட்சி, தாகம், புண் புரை ரணம் ஆகியன.

## 70. செருப்படை :

இதன் வழக்குப் பெயர்கள் : செருப்படி. இதில் இரண்டு விதம். சிறு செருப்படை, பெரும் செருப்படை என்று உண்டு. ஆங்கிலம் : Glinus Laloides. தெலுங்கு : Cheppu Thattaku. சமஸ்கிருதம் : Hamsapathi.

உபயோகம் : சமூலம் வேர் முதல் இலை வரை யாவும்

குணுதிசயம் : வெப்பமுண்டாக்கி நுட்புழுக்கொல்லி லோக செந்தூரி.

### தீரும் நோய்கள் :

வாத நோய்கள், வாதசூலை, வாதகுன்மம், வாதவாய்வு, சர்மரோகம், கிரந்தி புண் படைகள், வெள்ளை, வெட்டை, சூடு, வெள்ளை ஒழுக்கு, கிரந்தி நோய், வெண்மைப் பூத்தசொறிகள்.

## 71. புள்ளடி :

இதன் வழக்குப் பெயர்கள் : கடமாரி, இதிலும் இரு வகையுண்டு. சிறு புள்ளடி, புள்ளடி என்பதாம். ஆங்கிலம் : புள்ளடிக்கு Hedysarum Gangeticum. சிறு புள்ளடிக்கு

Desmodium, தெலுங்கு : Gitanaram, Murpu, சமஸ்கிருதம் : Salaparni, பாரசீகம் : Muskhzamin, இந்தி : Sarivan Motha.

உபயோகம் : வேர், இலை, சமூலம்.

குணாதிசயம் : சிறு புள்ளடிக்கு பாற்பெருக்கி, சிறுநீர்ப் பெருக்கி, உரமாக்கி, அகட்டு வாய்வகற்றி.

தீரும் நோய்கள் :

மாதர்களின் பாற் வறட்சி, பித்தம் போக்கும், நல்ல பசி உண்டாக்கும், நீரேத்தம், ஆருத கட்டிகள், ரணங்கள், குழந்தைகளுக்கு காணும் மந்தம், கணைச்சூடு, நிற்காத பேதி, வயிற்றுப் பொறுமல் ஆகியன.

## 72. விளா மரம் :

இதன் வழக்குப் பெயர்கள் : விளவு, கபித்தம், வெள்ளில், கடிப்பகை, விளா. ஆங்கிலம் : Feronia Elephantum, Wood Apple-Tree. தெலுங்கு : Velaga. மலையாளம் : Vilav. கன்னடம் : Baelada. சமஸ்கிருதம் : Kapitha. ஹிந்தி : Dharkhath-Kaveet.

உபயோகம் : இலை, காய், பழம், பட்டை, ஓடு, பிசின்.

குணாதிசயம் : மணமூட்டி, துவர்ப்பு, குளிர்ச்சி உண்டாக்கி, உள் அழல் ஆற்றி, அகட்டு வாய்வு அகற்றி.

தீரும் நோய்கள் :

பசித்தூண்டும், பித்தகபம், கபகாசம், பித்தகணச்சூடு, இளைப்பு, வேர்குரு, பித்தத்தழும்பு, கண்மாந்தை, பூதகணபைசாச தோஷம், பேதி, சீதபேதி, சித்த விருத்தி, புத்தி தெளிவு, கல்லீரல் மண்ணீரல் கோளாறு, வாய் நாற்றம், நீர்ஊரல், தொண்டைபுண், பல் ஈறு வீக்கம், குடல் கோளாறு,



பாண்டு காமாலை, பித்தவாய்வுக் குமட்டல், இடுமருந்தின் கோளாறுகள், மேகவெள்ளை ஒழுக்கு, சிறுநீர் தாரை எரிச்சல், பெரும்பாட்டு உதிரபோக்கு

## 73. பிரம்ம தண்டு :

இதன் வழக்குப் பெயர்கள் : குடியோட்டுப் பூண்டு, பிரம்ம தண்டி குருக்கம் செடி, குருக்கத்திப்பூண்டு, குசும்பை ஆங்கிலம் : Mexican - Poppy, Yellow-Thistle, Argemone - Mexicana. தெலுங்கு : Brahma-Dandi - Chettu. மலையாளம் : Brahma - Dandi. கன்னடம் : Arasina-Ummatta. சமஸ்கிருதம் : Brahma-Dadni. இந்தி : Bahar-Bhand Shirjal-Kanta. போர்ச்சுக்கீசியப் பெயர்: Pila-Datura.

உபயோகம் : விதை, வேர், சமூலம், பால்.

குணாதிசயம் : துயரடக்கி, துயிலாக்கி, வாந்தி உண்டாக்கி, குமட்டல் எழுப்பி, மலமிளக்கி, தாதுவெப்பகற்றி, உடற்தேற்றி.

தீரும் நோய்கள் :

தேள் கொட்டிய விடம், பாம்புகடி விடம், கரப்பான் பேய்ச்சொறி, நமட்டைச் சிரங்கு, பெருவிரணங்கள், கண் ரோகம், கண்சதை வளருதல், சிகப்பு, அரித்தல், கூசுதல், குறுகிவிடல், நீர்வடிதல், பல்சொத்தை, ஆஸ்த்துமா, இரைப்பு, இருமல், காசம், கபரோகம், பெருநோய், மலப் புழுக்கள், க்ஷயரோக காய்ச்சல்.

## 74. சீதேவி செங்கழுநீர் :

இதன் வழக்குப் பெயர்கள் : நெய்ச்சட்டி, நெய்ச்சிட்டி, சிற்றிலை, தேவகந்தம், ஆங்கிலம் : Conyza - Cinerea Ash-coloured Fleabane. தெலுங்கு : Meritla - Karuina, மலையாளம் : Poovan - Kuruntal. கன்னடம், சமஸ்கிருதம் : Sahadevi. இந்தி : Shadevi.

உபயோகம் : இலை, சமூலம் யாவும்.

குணதிசயம் : உடல்தேற்றி, புழுக்கொல்லி, நச்சரி, வேர்வை பெருக்கி, உரமாக்கி.

தீரும் நோய்கள் :

சொறி, சிரங்கு, தேமல், படை, வெடிப்பு, ரணங்கள், நரம்பு சிலந்தி, கண் சிகப்பு, கண் அருகல், வீக்கங்கள், உஷ்ணம் ஆகியன.

### 75. சாகா மூலி :

இதன் வழக்குப் பெயர்கள் : ஆகாச கருடன், ஆகாய கருடன், கொல்லன் கோவை, கருடன் கிழங்கு, பேய் சீந்தில், ஆங்கிலம் : Bryonia-Epigoea, Bryoms, Corallo-Carpus, Epigaeus-Hook. தெலுங்கு : Nagadonda. மலையாளம் : Kollam-kova-Kizhanna. கன்னடம் : Akasa Garuda-Gaddi. சமஸ்கிருதம் : Mahamulam, Nabho-Garuda-Ganda. இந்தி : Akas-Gaddah, Rakas Gadda. போர்ச்சுகீசிய மொழி : Garaj-Phal.

உபயோகம் : இலை, சமூலம், கிழங்கு.

குணதிசயம் : நச்சரி, புழுக்கொல்லி, உடல்தேற்றி, உரமாக்கி, வாந்தி உண்டாக்கி.

தீரும் நோய்கள் :

சகலவித பாம்புக்கடி விடங்கள், மேகரோகம், கிரந்தி, வெள்ளை ஒழுக்கு, புற்றுநோய்கள், அரையாப்பு, கழலைக்கட்டிகள், கண்டமாலை, இரத்த கட்டிகள், அக்கிப்புண், அழிந்த ரணம், கரப்பான், சிரங்குகள், சூலை நோய், வாத பிடிப்பு, கைகால் முட்டுப் பிடித்தங்கள் முதலியன.

### 76. மந்தாரை :

இதன் வழக்குப் பெயர்கள் : பூங்காரம், மந்தாரை. ஆங்கிலம் : Bauhinia - Purpurpa. தெலுங்கு : Deva



Kanchanamu Bodanta Chettu. மலையாளம் : Mandaram. கன்னடம் : Kanchivala. சமஸ்கிருதம் : Kanchanara. இந்தி : Kachnar-Khairwal.

உபயோகம் : இலை, பூ, பட்டை, வேர்.

குணதிசயம் : மலமிளக்கி, உடல்தேற்றி, புழுக்கொல்லி, துவர்ப்பி, உரமாக்கி.

தீரும் நோய்கள் :

வாய் நீர் ஊறல், குமட்டல், அஜீரணம், வாந்தி, மசக்கை, பெரும்பாடு, ரத்தமூலம், சீதபேதி, ரத்தவெட்டை, ரத்தபேதி, மூக்கில் ரத்தம் வடிதல், ரத்த வாந்தி, மலச்சிக்கல், வாய் நாற்றம், பல்வலி, நாள்பட்ட குன்மம் ஆகியன.

### 77. காக்கணம் கொடி :

இதன் வழக்குப் பெயர்கள் : சங்கு புஷ்பி, காக்கு நட்டை, கால்கணம், காக்கணத்தி, காக்கட்டான், ஆங்கிலம் : Clitoria - Ternatia,, Butterfly-Pea Winched - Leaved-Clitoria, Mazerion. தெலுங்கு : Dintana. மலையாளம் : Kaka - Valli. கன்னடம், சமஸ்கிருதம் : Shanka - Puspa. உருது : Mezeriyune-Hindi. பாரசீகம் : Darakhte-Vikhe -Hayat. இந்தி : Aprajita, Kava - Thenthi. போர்ச்சுகீசியம் : Phi-ki-Jar-Ka-Jhar.

உபயோகம் : இலை, விதை, வேர், சமூலம்.

குணதிசயம் : அகட்டு வாய்வகற்றி, மலநீராக்கி, கோழை அகற்றி, சிறுநீர் பெருக்கி.

தீரும் நோய்கள் :

தலைவலி, மலச்சிக்கல், தேகச்சூடு, பிரமேகம், தந்திமேகம் மூத்திரதாரை, எரிச்சல், வெள்ளை ஒழுக்கு, யானைக்கால் வீக்கம் ஆகியவை.

## 78. சிலந்தி நாயகன் :

இதன் வழக்குப் பெயர் : கிரந்தி நாயகம், பட்டாஸ் காய் செடி, சிலந்தி நாயகம், கிரந்தி நாயகன், சிலந்திநாயகன். கட்டிப்பூண்டு. ஆங்கிலம் : Reullia Patula.

உபயோகம் : இலை, சமூலம்.

குணாதிசயம் : வெப்பமுண்டாக்கி, நுட்புழுக் கொல்லி, மலமிளக்கி.

தீரும் நோய்கள் :

கண்ணுக்குத் தெரியாத உட்புண்கள், ரணம், கட்டிகள், பிரேத தோஷங்கள், நகக்கண் சுற்று, பாம்புக்கடி விடம்.

## 79. கொன்றை :

இதன் வழக்குப் பெயர்கள் : இதில் பலவிதமுண்டு. பொதுவாக கொன்றை, சரக்கொன்றை, கொண்ணை, தாமம், பெருங்கொன்றை, கடுக்கை தாமம், இதழி, ஆக்குபதம், கிருதமாலம். ஆங்கிலம் : Cassia Fistula, Indian Ladurnam Pudding-pepe-tree, Purging Cassia. தெலுங்கு : Rela-Kayulu, மலையாளம் : Konna, கன்னடம் : Kakka, சமஸ்கிருதம் : Aragvadham, உருது : Khiyar-shanbar, இந்தி : Amaltas.

உபயோகம் : இலை, பூ, விதை, காய், ஓடு, மரப் பட்டை, வேர்ப்பட்டை.

குணாதிசயம் : மலமிளக்கி, புழுக்கொல்லி, நீர் மல மாக்கி, வெப்பகற்றி, துவர்ப்பி, உரமாக்கி, நுட்புழுக்கொல்லி.

தீரும் நோய்கள் :

பித்த தழுமல், சொறி, தினவு, நமட்டுச் சிரங்கு, மேக ரணம், மலச்சிக்கல், வய்வு, வாதவலி, வெண்குட்டம், சர்மம் வெளுத்துப் போகும் சொறி, ஆஸ்துமா, சளி, கபக்கட்டு, மலக்கட்டு, ஆசனத்தினவு, கடுப்பு, காது நோய்கள்.



## 80. நஞ்சுமுறிச்சான் :

இதன் வழக்குப் பெயர்கள் : நஞ்சறுப்பான், நஞ்சறுத்தான், கக்குபாலை, கொண்டைச்சாணி, கொடிப்பாலை, நஞ்சாமுஞ்சா. ஆங்கிலம் : Ascelpious Prolifera.

உபயோகம் : வேர், இலை, சமூலம்.

குணாதிசயம் : நச்சரி, வாந்தியுண்டாக்கி, பெருமலம் போக்கி.

தீரும் நோய்கள்

பாஷாண வேகங்கள், நஞ்சுகள், விஷப்பூச்சி, கொடும் விஷப்பாம்பு கடிகள், தாவர இனத்தின் விடதோஷங்கள் யாவும்

## 81. நேத்திரப் பூண்டு :

இதன் வழக்குப் பெயர் : நேத்திரந் துலங்கி, நேத்திரப் பூடு. ஆங்கிலப் பெயர்கள் காணக் கிடைக்கவில்லை.

உபயோகம் : வேர், இலை, சமூலம்.

குணாதிசயம் : நச்சரி, நுட்புழுக்கொல்லி.

தீரும் நோய்கள்

கண் ரோகங்கள், பார்வை மங்கல், கண் அருகல், கண் சிகப்பு ஆகியன.

## 82. நீர் முள்ளி;

இதன் வழக்குப் பெயர்கள் : துரகத மூலம், இக்குரம் நிதகம், முண்டகம், காகண்டம், ஆங்கிலம் : Hygnophila Spinosa, Astercantha Longlifolia, தெலுங்கு : Nirugobbi, மலையாளம் : Vayalchulli, கன்னடம் : Kalavankabija, சமஸ்கிருதம் : Kokilaksha, இந்தி : Talmakhana.

உபயோகம் : விதை, வேர், சமூலம்.

குணாதிசயம் : சிறுநீர் பெருக்கி, வீக்கம் கரைச்சி, உள்ளழல் ஆற்றி, உரமாக்கி, காமம் பெருக்கி, தாதுவெப்ப கற்றி, குளிர்ச்சியுண்டாக்கி.

### தீரும் நோய்கள்

வாத வீக்கம், நீர்குளுவான், பாண்டு, வாதக் காய்ச்சல், மூத்திர அடைப்பு, ரணம், மகோதரம், விஷப் பாண்டு, மேகநீர், வாதநீர் ஆகியன.

## 83. புளிய மரம் :

இதன் வழக்குப் பெயர்கள் : புளியமரம், சிந்தம், சிந்தூரம், எதின் ஆம்பிரம், சிந்தகம், ஆங்கிலம்: Tamarindus Indica, Tamarind Tree. தெலுங்கு : Chinta Manu, மலையாளம் : Puli. கன்னடம் : Hunasehunnu சமஸ்கிருதம் : Tintrani. உருது : Tamar-I-Hind. பாரசீகம் : Ambala, இந்தி : Imli, Amli.

**உபயோகம் :** இலை, ஈர்க்கு, பூ, காய், பழம், ஓடு, கொட்டை, பட்டை,

**குணதிசயம் :** துவர்ப்பி, வெப்பமுண்டாக்கி, பித்தம் சமமாக்கி, அகட்டு வாய்வகற்றி, உரமாக்கி, மலமிளக்கி, குளிர்ச்சியுண்டாக்கி.

### தீரும் நோய்கள்

சுளுக்கு பிடிப்பு, மூட்டுகளில் வலி, ரத்தபேதி, சொறி, சிரங்கு, படை, நமச்சல், தும்மல், சலதோடம், டான்சில் கருப்பை நழுவுதல், மலச்சிக்கல், சொட்டு மூத்திரம், வாய்வு, பல்நோய்கள் ஆகியன.

## 84. வேங்கை :

இதன் வழக்குப் பெயர்கள்: கணி, அசனம், பிரசாரம், திமுசு, ஆங்கிலம் : Pterocarpus Marsupium, Indian Kino Tree, தெலுங்கு: Vegisa. மலையாளம்: Venkamaram. கன்னடம் Honemara, சமஸ்கிருதம் Asanam, இந்தி Bijasar

**உபயோகம் :** இலை, மரப்பட்டை, பிசின்.

**குணதிசயம் :** நுட்புழுக்கொல்லி, புண் அழுக்ககற்றி, வீக்கம் கரைச்சி, குருதிபோக்கடக்கி, மலமிளக்கி, துவர்ப்பி.

### தீரும் நோய்கள்

மலச்சிக்கல், புண்கள், புரையோடிய, நாள்பட்ட ரணம், சொறி, சிரங்கு, ரத்தபேதி, சீதபேதி, மூலக்கிராணி, வயிற்றுக் கோளாறுகள் ஆகியன.

[நம் நாட்டு மூலிகைகள் நான்காம் பாகம் முற்றிற்று]